### வேறு.

குருடிரா விருட்டுத் தம்மாற் கோலினுற் றீர்த்த மூன்றுன்
மருடரா விழிப்புத் தன்னுன் மருடரு மிமைப்புத் தன்னு
விருடரா விரவி தன்னு லெழுந்ததம் மொளியால் வேருற்
றெருடராப் பருதி தன்னைத் தேடியுங் கண்கா ணுதே. (௫௩)

தத்துவத் தொழிலைக் காண்டல் சடமென்ற றன்னை நீக்க
லத்திணு ணன்மே லென்ற லருளிணு ணன்மே லென்றல்
பத்தனு னருளாய்ச் செய்தி பண்ணவே யெண்ணி நீக்கிச்
சித்தரு ளதுவாய்ப் போதல் சிவத்தினைச் சேர்த றேரே. (௫௪)

அருளிணு ணன்மே லென்ற லதுவொழிந் தெண்ணி நீக்கன்
மருளிணு லருளாய்ப் போதல் வகைமூன்று முன்பே வந்த
வருளிலை நான்மே லென்ற லருளிணு ணன்மே லென்றன்
மருளிணு லெண்ணல் போதல் மகிழ்சிவஞ் சேர்தல் வந்த. (௫௫)

### வேறு.

தன்னைத் தலைவ னெனக்கருத றலைமை யருளே யெனக்கருதல்
பின்னர்ப் புதிதா யருட்செயலைப் பெறவே யெண்ண லதைநீக்கி
மன்னித் திருவ ருளாய்ப்போதன் மகிழும் பரசி வனைச்சேர்தல்
துன்னிக் கருது மவத்தையெனச் சொல்லுஞ் சுருதி சிவாகமமே. ()

### வேறு.

அயர்வறுத் திட்ட ஞானி யகமறுத் திடலா லந்த
வுயிருடற் ருெழிலி னேடு முயிருட லூழை மற்றோர்
செயிரறுத் திடும்பொ ருட்டுச் சிவன்றன தாகக் கொள்வன்
மயர்வறு முத்தி ரண்டை மாற்றுவ னென்றே யென்றும். (௫௭)

முதற்பதி யரனே யைந்து முன்னத்து விதமி ரண்டே
யிதற்பின்னே யனுமா னத்தா லெண்ணிலா வுயிர்கண் மூன்றே
யதற்பின்னே யவத்தை நான்கே யகமறுத் திடலே யைந்தே
செகற்பதி பிரித்த லாறே தெரிவித்த லுயிரை யேழே. (௫௮)

மறப்பினை நீக்கி ஞான வாரியை நினைத்த லெட்டே
சிறப்புடை யுபாயந் தம்மாற் றெளிவித்த லுயிரை யொன்பா
னறுத்திடன் மலங்கள் பத்தே யழுந்தலே சிவத்து ளொன்றே
திறப்பணி கொளலி ரண்டே சிவஞான போதஞ் சித்தி. (௫௯)

வேறு.

பகைகலையு மெண்ணரிதாம் பார்க்கிலருஞ் செறிந்திடுமே
மகைநிலையால் வருமெண்ணே மருவியவுங் காட்டிடுமே
சொலவரிதாம் பன்னிறமுந் தன்னறிவுஞ் சொற்புகலும்
பிலமுளபோற் றீங்கண்டம் பேர்முதலாப் பன்னிரண்டே. (௨0)

வேறு.

இரண்டினி லைந்தி லாறி லேழினி லெட்டுத் தன்னிற்
றிரண்டிரண் டொன்ற தான திகழொன்பான் பத்துத் தன்னி
லிரண்டிலாப் பேறு தன்னி லிருத்திய பத்தோ டொன்றிற்
றிரண்டெழு முபதே சங்கள் சிவஞான போதஞ் சித்தி. (௨௧)

மூன்றுநான் கேழு மூன்றே முடிந்தபின் னிரண்டி ரண்டே
மூன்றுநான் மூன்றி னன்றாய் முடிந்தபின் னிரண்டி ரண்டே
யென்றநான் கிறு தாமே யிவையீரா றிலக்கத் துள்ளே
யென்றமுப் பானென் பானே யெனக்கரு ளிரங்கி னானே. (௨௨)

மண்ணொடு செவியே சத்தம் வாக்காதி யையைந் தாகு
மெண்ணிய மனமே யாதி யீரிரண் டிவைநா லாறே
கண்ணிய கால மாதி கருதிடி லேழுங் காணே
திண்ணிய சுத்த வித்தை யாதியா வைந்துந் தேரே. (௨௩)

இந்திரி யங்க டன்மாத் திரைகணு டிகள்வா யுக்க
ளொந்துபப் பத்துப் பூத மோரைந்து மவையை யைந்தே
யைந்துசுத் தம்மேழ் வித்தை யாங்கார மூன்று மூன்று
வந்திடுங் குணங்க ணான்காம் வாக்கந்தக் கரண நான்கே. (௨௪)

சுவாமிநாததேசிகர் தசகாரியம் முற்றியது.

திருச்சிற்றம்பலம்.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

அம்பலவாணதேசிகர் அருளிச்செய்த

# சன்மார்க்க சித்தியார்.

---

## சிறப்புப்பாயிரம்.

அறிந்தேமெய் யாவடு தண்டுறைபிற் கூட்டஞ்
செறிந்தேமெய் யம்பலவா ணன்சீர்—நிறைந்தேமே
சன்மார்க்க சித்தி தருதலினுன் முன்னுறைந்த
துன்மார்க்கம் போக்குதற்குச் சூழ்.

வெண்பா.

## நூல்.

சிறியே னறியாமை தீர்ப்பதற்குப் புத்தி
யறியே னெனினு மருளி—னெறியே
முளைத்தார்க ணீர்மை முதிர்வினு வுற்றே
னளித்தா ணமச்சிவா யா. (க)

பாசமாய்ச் சுத்தப் பசுவாய்ப் பதியாகித்
தேசுற்ற வாவிச் சிறப்பென்று—னேச
முடைத்தாய்த் தனுவற் றுணராமற் கண்ணை
யடைத்தாய்வ தேதா மறை. (உ)

அறிவாய்ப் பரிபூ ரணமா யகண்ட
செறிவா யுளமொளித்த தேசா—பிறிவாகி
யுன்னிற் றனுவா யுறுங்கண் ணிமைநீக்கி
லந்நியமே னுவா யறை. (ங)

உளக்கண் விழித்தார்க் குறுங்கதிரா யுன்னை
விளக்கிச் செகவிருளை வேறு—யொளிப்பையென
மாயுஞ் செகமுளத்து மன்னுமெனக் கண்ணைமறைத்
தாயுமரு ளேதா மறை. (ச)

அம்பகத்தை மூடியரு ளாய்வதுவோ நூலோதிச்
செம்பொருளைக் கேட்டுத் தெளிவதுவோ—நம்பனருட்
கேற்றவு பாயநிட்டை யேதாகு மும்மலத்தைப்
யாற்றுவா யொன்றைப் பகர். (ரு)

அணியாய்த் திருநீ றணிவார்கள் கண்ணின்
மணியே யுனைவேண்டி வந்து—பணியத்
தொடும்போது மூர்ச்சை துயரகல நீற்றை
யிடும்போ தகல்வா யிதென். (௬)

நினைத்தார்தங் நெஞ்சத் தமுதாகு முன்னைத்
தனைத்தா னறிவாரே சார்வா—ரெனத்தாலோ
ஞானஞ் சுழுமுனையா னல்குமென வாய்நீரைப்
பானம் பணலென் பகர். (௭)

சன்மார்க்க மென்னத் தகுமார்க்க மோரியல்பாம்
பன்மார்க்க மென்னப் படாததனு—னன்மார்க்கங்
காயமற வாவி கருதானுங் கண்மூடு
மாயமென் மாணு வரும். (௮)

நேத்திரத்தை யுற்றபொரு ணேத்திரத்தை நீங்கின்மன
மாத்திரமே யன்றியுள மன்னுதா—னீத்துடலை
யாவிப் பயனறிவா ரம்பகத்தை மூடியருட்
பாவிப்பா ரல்லரெனப் பார். (௯)

காயமனத் தாற்சிவனைக் காணலா மென்பதனுக்
காய மறையு மறையாதான்—ஞாயத்
தனுமாய வாவி தனுவா மிறைவர்க்
கினிமாய மில்லையென வெண். (௰)

அறிவாய்த் தனுவை யறிவார் மலத்தைப்
பிறிவா ருளம்பே ரறிவாய்ச்—செறிவாந்
தனுவா லறிவா ருளமே தனுவா
யுனுவார் திருவுருவென் றோர். (௧௧)

ஊனு யுயிரா யுணர்வா யுரைபிறந்த
தேனு யுளமறைந்த சிற்பரத்தை—வானு
யொளியா யுருவா யொலியா யுணர்வார்
தெளியார் தமையென்னத் தேர். (௧௨)

தனைத்தானிவ் வாறென்னத் தானறியார் சம்பு
வினைத்தானெவ் வாறறிந்து மேவ—நினைத்தா
ருறுமோ மனமதனி லொண்கணிமை நீக்க
வறுமோ நமையா ளருள். (௧௩)

சட்டகத்தை நீக்கச் சதுரறியார் கண்மூடி
நிட்டையெனப் பாவித்து நிற்பதனாற்—சுட்டிப்
பதமடைவ தல்லாற் பரசிவத்தோ டத்து
விதமடைவ தின்றாம் வினை. (௧௪)

சிந்திப்பா ரர்ச்சிப்பார் சேர்ந்திமையா லம்பகத்தைப்
பந்தித் திதயத்திற் பாவிப்பார்—பெந்தித்த
சாலோக மாதிப் பயனுக்குச் சற்குருவா
னாலோதி னார்க்கறிவே நோக்கு. (௧௫)

புரையே செவிதா ரகமாப் புகுமால்
வரையே யருணூலின் மாண்பவ்—வுரையே
பதிபசுபோய்ப் பாசத்தின் பண்புதேர் வித்துக்
கதிசேர்க்குஞ் சன்மார்க்கக் கற்பு. (௧௬)

அறிவா லுணர்த்தி யறியாமை நீக்கிப்
பெறுமாறே யத்துவிதப் பேறு—மறுமாற்றி
யாவியே யீச னருவினையைக் காட்டாமற்
பாவியென்பார் சற்குருவோ பார். (௧௭)

உன்னைத் தனுவை யுயிர்க்குயிரை யுள்ளத்துப்
பின்னமற நிற்குமலப் பெற்றியையுஞ்—சொன்ன
சுருதிகுரு வாக்குச் சுவானுபவ மொன்றத்
தெரிவிப்பான் தேசிகனுய்த் தேர். (௧௮)

எங்கு மறிவா யெழுந்தசிவா னந்தத்தைத்
தங்குநய னத்தடக்கித் தான்விழிக்கப்—பங்கமுறக்
கற்குநிட்டை யாகுங் கருதியறி வாய்நிறைந்து
நிற்குநிட்டை யல்லவென நில். (௧௯)

அகக்கண் டிறந்தார்க் கறிவல்லா லொன்றும்
புகத்தக்க தில்லையெனும் பொற்பான்—முகக்க
ணிறைத்தார்மற் றேரகத்தி னீடிருளாற் கண்ணை
மறைத்தார் செகத்தஞ்சு வார். (௨௦)

அகத்திமிரத் தாலாவி யாகமாய்த் தீய
செகத்துமய லாமூர்ச்சை செய்யா—விகத்தரனைப்
பெற்றார்தங் காயமதும் பேரறிவா மெய்மூர்ச்சை
யுற்றார்பொய்த் தீவினையென் றோர். (௨௧)

உரையே யகவிருளுக் கொண்கதிரே யாமால்
வரையா ரறிவுடையோர் மாண்பைப்—பரஞானஞ்
சாதிப்பா ருங்கேட்டல் சிந்தனையைச் சார்ந்துமலஞ்
சேதிப்பா ரென்னத் தெளி. (உஉ)

மனுவே திருநீற்றை மன்னுமான் ஞானத்
தனுவே தவிர்க்கத் தகாதே—துனவே
யருண்மா றிருநீ றணிய வகலு
மருண்மா லெனவே மதி. (உங)

வன்னமுற்ற காயத்தை மாற்றியறி வேயென்னத்
தன்னையுற்றார்க் கின்பாகுந் தானுவறப்—பின்னமுற்ற
வூனீர்மை தானு யுணரும்பொய் மக்கட்கு
வாய்நீ ரமுதாய் வரும். (உச)

அருந்துமனம் வாயா லகற்றியறக் கோழை
திருந்தவருள் சேருமெனுஞ் சேயாய்ப்—பொருந்துந்
தனுக்கோழை நீங்காது தாதனறி ஞான
முனக்கேழை யெங்கா ளுறும். (உரு)

செகத்திமிரந் தீர்க்கும்வான் செல்கதிர்போ லாவி
யகத்திமிரந் தீர்க்கு மருனால்—பகுத்தறியப்
புத்தியில்லார்க் கெல்லாம் பொருளாகுங் கண்ணற்றா
ரத்திகண்டாற் போலென் றறி. (உசா)

நன்மார்க்க நற்குரவோர் நாட்டுமரு னானேக்கிச்
சன்மார்க்க சித்தியெனத் தானுரைத்தேன்—புன்மார்க்க
மற்றார்தந் நெஞ்சத் தமுதாஞ் செகமார்க்கம்
பெற்றார்க் கிதுபேத மாம். (உஎ)

காயமெனக் குள்ளடங்கக் காதலித்த யான்கருணை
நேயநீ யாயடங்கி நிற்பதனுக்—காயகிட்டை
வைத்தாய் சிவஞான வாரியருண் மல்லேறே
யத்தா நமச்சிவா யா. (உஅ)

சன்மார்க்க சித்தியெனச் சாற்றுமிரு பானெட்டைப்
புன்மார்க்கஞ் சென்றோர்க்குப் போக்கினு—னன்மார்க்கங்
காட்டா வடுதுறையிற் கண்ணம் பலவாணன்
றாட்டா மரையெனக்குத் தந்து.

சன்மார்க்க சித்தியார் வெண்பா முற்றியது.

திருச்சிற்றம்பலம்.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## அம்பலவாணதேசிகர் அருளிச்செய்த

# சிவாச்சிரமத் தெளிவு.



### காப்பு.

திருவா வடுதுறையிற் றேவே யடியேற்
கொருவா வினைமா லொருவக்—குருவாய்த்
திரள்வா யறத்தின் சிறந்தவினு வுற்றே
னருள்வாய் நமச்சிவா யா. (க)

### நூல்.

வருகரும பாகர்க்கு மாயமற நோக்குத்
தருமலபா கர்க்குந்தா னென்று—நிருமலமாந்
தீக்கையொரு நான்காஞ் சிறப்பீசர் பாகமிரண்
டாக்குவதெவ் வாறு மறை. (௨)

செய்யு முலக தருமணிக்குஞ் சேர்சிவமா
யுய்யுஞ் சிவதரும வொண்மணிக்கு—மெய்யுறவே
பாவுஞ் சமயாதிப் பண்பொன்று நற்றரும
மாவதுவென் பேத மறை. (௩)

அனுக்கிரகந் தீக்கைக் கதிகார மீகை
மனுக்கிரகர்க் காமாறும் வைத்தாய்—தனித்துறவோ
டில்லஞ் சரியா மிசைந்ததொழி லார்க்காமஞ்
சொல்லுவதென் பேதமதாய்ச் சொல். (௪)

தீக்கைசெபம் பூசை தியானமரு ளூலோத
லூக்கிப் பிறர்க்கு முரைத்திடுத—னேக்கிற்
றுறவில் லறத்துஞ் சொலுமார்க்க மொன்று
மறமிரண்டே னுமா றறை. (௫)

மலமகலத் தீக்கை வருவிப்பாய் நான்கா
யிலமகனு வார்க்குமிலத் தோர்க்கும்—புலமிலரை
விட்டறிவிற் றேசிகர்பான் மேவுகென நூலோதப்
பட்டதென்னை யீசா பகர். (௬)

போகி விரத்தர் பொதுவாய்ச் சமயாதி
யாகுமபி டேகாந்த மாதரித்துந்—தேகமா
மந்நியத்தில் யோசனைக ளொன்று மறமிரண்டாய்ப்
புந்தியுற்ற தேதாம் புகல். (எ)

ஓதினிய நூலை யுணர்ந்தும் பிறர்க்குரைத்து
மேதினியிற் றீக்கை விரித்தளித்துந்—தீதினிமை
யுற்று ரறிவோ வுறாஅ துலகதனை
யற்று ரறிவோ வறை. (அ)

வந்தனையா லொன்று மருவுமரன் பாலுற்ற
சிந்தனையாற் பேதமெனச் செப்புவதா—நந்தனையாய்
வையந் துறந்தார்க்கு மற்றதனை யுற்றார்க்குஞ்
செய்யு மறத்தின் றிறம். (கூ)

போற்றுஞ் சமயாதி பூணுமபி டேகாந்த
மாற்றுந் தவவேட மாதரித்தும்—பாற்றியிடு
மச்சு முதலா வனைத்துமல பாகமதி
லிச்சைகன்ம பாகமென வெண். (க0)

வஞ்சத்தில் வாஞ்சை மறவாமல் மாசிவத்திற்
கொஞ்சத்தி லாசை கொளுவாரைச்—செஞ்சொ
லுலகு தருமணியென் றோதும்பொய் வஞ்சத்
திலகார் சிவதரும ரென். (கக)

பூசையுடன் கல்வி பொருந்து மதிகார
மாசையுடன் றீக்கை யளிப்பதுள்ளும்—வாசமலர்த்
தாமமே யிட்டுத் தருக்குமட வார்வாழ்க்கைக்
காமமிலத் தோர்க்கெனவே காண். (கஉ)

கொலையிற் களவிற் கொடுந்தொழிலிற் கோப
வலையிலுவப் புள்ளு மருவும்—பலபுட்பத்
தாமமே சாத்தித் தருக்குமா னுயுற்ற
காமந் துறவோர்க்கே காண். (கங)

ஊக்குஞ் சமயாதி யுற்றவபி டேகாந்த
மாக்குமுண்மை நற்சரியைக் காம்பருவ—நோக்கித்
துறந்தார்க ளுண்மைச் சரியாதி பற்றிச்
சிறந்தா ரருட்பாகந் தேர். (கச)

நண்ணு முபாயச் சரியாதி நான்குமில்லோர்
பண்ணு மனுக்கிரகப் பண்புமிக—வெண்ணித்
துறந்தார்க ளுண்மைச் சரியாதி தொக்கிச்
செறிந்தா ரறிவென்னுந் தேசு. (௧௫)

பாவனையாற் றீக்கை பணிப்பாத்தில் யோசித்துத்
தீவினையு மாங்கே சிதைத்தகனாற்—பூவினையைப்
பாற்றுவார் தீக்கைப் பலமடைவார் பண்பிலத்தி
லாற்றுவார் நற்றரும ராம். (௧௬)

சரியைக்கே சாலோகந் தன்னில்யோ சித்தாற்
றெரிய நடந்தவர்க்கே சேர்வாம்—பிரியா
நிலவுலகி லிச்சை நிறைந்தோர்க்குத் தீக்கைப்
பலநிலவு நற்றருமம் பார். (௧௭)

பரிபாகத் தாற்றீக்கைப் பண்புற்றார் தீதைத்
தெரிவா ரிலந்துறந்து சேர்வார்—பிரிவா
மிலத்துச் சரியாதி யேமெய்ச் சரியைப்
பலத்துக் குபகரணம் பார். (௧௮)

கருமாற்றுந் தீக்கையாற் கற்பொன் றெனினும்
வருமா றிரண்டாகு மாணா—திருமா
மனுக்கிரகர்க் காகும் வருமறிவின் மார்க்க
மனுக்கிரக நீத்தோர்க்கே யாம். (௧௯)

மந்திரமொன் றாக மதிக்குஞ் செபத்துக்குத்
தந்திரமே பேதமெனுந் தன்மையாற்—புந்திப்
பலமா மிலத்தோர்க்குப் பண்ணவர்க்குத் தீய
மலமாய்க்கு மென்றே மதி. (௨௦)

துறவனிவ் வஞ்சத்திற் றோயிலிவ் வஞ்ச
மிறைவனு மாணா விலத்தா—மறவ
னிறவா வரன்பூசை யேத்துகிலும் வஞ்ச
மறவா னதனன் மதி. (௨௧)

தேசனையே நெஞ்சிற் றியானிக்கி லில்வாழ்க்கை
வாசனையு மாங்கே மறைக்குமாற்—காசினியை
யற்றார்க் ககில மணுகிற் றியானத்தின்
பற்றா யதுமறைக்கும் பார். (௨௨)

உறையு மிலங்துறந்தா ருள்ளஞ் சிவமென்
றறையு மருணூல்க ளாய்ந்துஞ்—சிறையைக்
கழியா ரிலத்தறவர் கற்றதிறஞ் சற்று
மொழியார் துறவோரென் றோர். (உங)

இலங்குநூற் கர்த்த மிலத்தா ரிசைப்பிற்
றுலங்கவிலம் பேணிச் சொலுவார்—விலங்க
விலங்துறந்தார் கூசா திசைப்பரிவ் வில்ல
மலந்தகைய வாராத வாறு. (உச)

துறந்தார்முன் பாகஞ் சொலிக்குந் துறவை
யிறந்தார்முன் காம மெழுமா—னிறைந்தவிலங்
தொட்டாரை விட்டறிவிற் றேய்ந்தாரைத் தோய்வதுநூற்
பட்டாங்கி லுள்ள படி. (உரு)

பண்ணு மனுக்கிரகப் பான்மை தனுப்போக
நண்ணுதற்கே யிற்குரவர் நாடியதா—மெண்ணித்
துறந்தகுர வோராவித் தொன்மலத்தை மாற்றச்
சிறந்ததென மாணு தெளி. (உசு)

பாவனையாற் றீக்கை பணவருகா லன்றில்ல
மாவினையே நெஞ்சின் மருவுமாற்—றீவினையை
மாற்றுவார் சீடன் வரும்பொருளா னீத்தோர்கள்
பாற்றுவார் பாவனையாற் பார். (உஎ)

கொடுவிடங்கண் மாயக் குடாரியாற் கொத்தி
யிடுவரவர் மாணு விலத்தார்—கடுகும்
பறவைக் கரசு தனைப் பாவிப்பார் போலுங்
துறவர்க் கரசர் தொழில். (உஅ)

உடல்விடத்தைத் தீர்ப்பா ருறுமுயிருக் குற்ற
நடைநடப்பிப் பாரோ நவில்வாய்—திடனுகப்
போக்கும் பொருட்குவமை புண்ணியனே டொன்ருக
வாக்கு முவமைக் கடா. (உகூ)

சத்தியா லாத றருங்கருமத் தாலாத
லத்துவா சுத்தி யடைதலுமா—முத்தி
செறிவிக்கு நாலிற் சிறந்தவத்தை பத்தா
லறிவித்தல் சத்தியமே யாம். (௩0)

பிரியாக் கலைகள் பிரிக்குங்கான் மாண
னறியாத சத்தியமே யாகு—நெறியாக
வாங்கவைவை யாசா னறிவித் தகற்றுகையா
லோங்கியநற் சத்தியமென் றோர். (௩௧)

உற்றநிரு வாண மிருவகையா வோதியதிற்
செற்று ரனுக்கிரகஞ் செய்வதா—மற்றில்ல
நல்லா ரசத்தியமே நண்ணுவதாம் மேலவத்தை
செல்லாத வாதனினுற் றோர். (௩௨)

கடுவடக்கு நோக்குக்குக் காட்டுமருந் துற்ற
கொடுவிடத்தைக் கொன்றுமொப் பாமோ—மடமடக்கு
நோக்குக் கிணையாமோ நுண்பொருளா லாகுதியை
யாக்கியது மாணு வறி. (௩௩)

பிறவா வறிவு பிறந்திலத்தை மாற்றித்
துறவா வருளாந் துறவர்க்—கிறைவா
வதிகாரத் தாற்றீக்கை யாக்குவோ மென்னு
மதிகா ரகர்க்கென் வரும். (௩௪)

சித்தத் தறியாமை சேர்ந்திலத் தின்பண்பாய்ச்
சத்தியே யெவ்விடத்துஞ் சாருமா—லொத்தே
யளிப்பா னுடல்பொருளோ டாவியெல்லா மாங்கே
யொளிப்பான் குருவோ வொழி. (௩௫)

அகத்தகலா வீசன்பா லன்பாகித் தீய
செகத்தகலு வாரே சிவமாய்ப்—புகுத்திடுமா
லார்ப்பா ருடல்பொருளோ டாவியெல்லா மாங்கேறச்
சேர்ப்பா ரவர்குருவாய்த் தேர். (௩௬)

தனக்குப் பலன்கருதான் றக்கவுயிர்க் குற்ற
வினைக்குற்றந் தீர்ப்பான் விரத்தன்—மனைக்குற்றத்
தோங்குவான் றீக்கைக் குறுங்கூலி வாங்கியில்லந்
தாங்குவான் றேசிகனே தான். (௩௭)

அனுக்கிரகஞ் செய்தங் கவர்பா லணுகி
யினிக்கிரகந் தாங்கென் றிரவார்—தனிக்கதிராய்க்
காய்வார் பிரவஞ்சக் காரகல நோக்கியரு
ளீவார் துறவோரென் றெண். (௩௮)

4

பிணிதீர்ப்பார் மக்கள் பிணியுற்றார் கூலி
யெளியோரா மக்கட் கிரங்கி—யணிநோயை
மாற்றுவார் போல மலப்பிணியை மன்னுயிர்க்குப்
பாற்றுவார் தேசிகராய்ப் பார். (௩௯)

தன்னகத் துற்றார் தருமகுரு வாகுமென
வின்ன விலத்தா ரிசைவென்ன—மின்ன
மனித்தியத்தைச் சேர்ந்தங் கறிவறிவிற் சேர்ந்து
செனித்தவரே தேசிகர்தே சால். (௪0)

நிலமளவு தானந் திகழ்மலைபோ லாகிப்
புலம்விளையச் செய்யும் புகழா—விலமகன்ற
தேசிகர்க்கே யாவிதனுச் செல்வமுமொத் தீவாரை
மாசிவமாய் மாண மதி. (௪௧)

பலவிசிட்டத் தாலும் பவமறவே நோக்கு
நிலைவிசிட்டத் தாலுநிறை வாலுங்—கலைவிசிட்டங்
காட்டி யறிவிற் கலப்பான நீத்தோரை
நாட்டியநற் றேசிகராய் நாடு. (௪௨)

ஆகையினா லார்க்கு மனுக்கிரக ராஞ்சிவத்தோ
டேகமா யாவிக் கிசைந்தபரி—பாகமே
நோக்குந் துறவோரை நுண்ணறிவா யுள்ளத்தி
லாக்குவதே யாவிக் கணி. (௪௩)

விடப்பட் டதனு விடுவிப்பார் தம்மாற்
றொடப்பட் டதனைவிடச் சொல்லார்—தடைப்பட்ட
வில்வாழ்வார் நன்கென் றிசைப்பா ரிதனைவிடச்
சொல்வா ரலரே துணி. (௪௪)

உண்ணுன் புலாறீதென் றோதுவா னுண்பான்றீ
தெண்ண னிலந்தீதென் றேத்துவான்—பெண்ணைத்
துறந்தா னிலத்துறைவான் றோய்ந்தநலஞ் சற்று
மறந்தா னலனே மதி. (௪௫)

சரியாதி நான்கிற் றருங்குரவோர் நான்காய்
வரையா மரபின் வரினு—முறைசேரு
மூனக் குரவ ரொருமூவர் மற்றொருவர்
ஞானக் குரவரென நாடு. (௪௬)

கரும குருநிலைமை கைவிட்டு ஞான
தரும குரவனடி சாரென்—றொருமித்தே
யெல்லா மொழியு மிசைக்குந் துறவோர்க்கின்
றில்லா ரிணையலவா யெண். (சஎ)

ஆய்ந்துகிரி யாவிதிவீ டாயாக் குரவனைவிட்
டாய்ந்தறிக வாய்ந்தவர்க்கா ளாயென்று—தோய்ந்தநெறி
வல்லான் கருணை மறைஞான மாமுனிநூல்
நல்லா னுரையதனை நாடு. (சஅ)

பிரமவுப தேசம் பெறுதலே பாங்கு
கருமவுப தேசங் கழியென்—றுரமதுற
வுற்ற மறைஞான மாமுனிவ னோதியநூ
னற்றுமவர்க் கன்றோ நலம். (சகூ)

உயர்ந்தோரைச் சேர்ந்தோ னுறுமிலத்தைத் தாங்கு
நயந்தோரைச் சார நலமோ—கயந்தோர்
மலங்களையத் தோன்றி மருவுகுர வோர்க்கு
மிலங்களைவா னன்றோ விவன். (ருo)

அறத்துறந்தா ரிற்கதிக மானனு மங்கத்
திறத்தகல்வார்க் கொப்பாமோ தேரின்—புறத்துறவோர்
மேலவத்தை செல்லார் மிகுசகளத் தொன்றுவ
ராலவரைக் கீழா யகல். (ருக)

இல்லறத்தார்க் கெல்லா முறினுமிவ் வில்லத்தைக்
கொல்லுதற்குண் டாமோ குணநெறிகள்—புல்லறத்தைத்
தீர்ந்தார்க்கு நல்லறிவு சேர்ந்திடினு மேலறிவு
சார்ந்தாய்தற் குண்டோ சதுர். (ருஉ)

சகளத் தபிமானஞ் சாலோக மாதி
நிகளத் தழுத்தி மலநீக்கு—மகளத்தை
யுற்றார் நிராமயமாய் நீள்சிவத்தோ டோரறிவா
யற்றார் தமையென் றறி. (ருங)

காய மறுங்காற் கருதியமெய் யாவிவிட்டுப்
போயோர் தனுவிற் புகுகையா—லாயகலைத்
தந்திரமா யோசித்துத் தானியத்தா லாகுதியை
மந்திரத்தாற் செய்வான் மகிழ்ந்து. (ருச)

ஆவி பிரிந்துடலை யாவரிக்கு மாசிரியன்
பாவிக்கு மாறு படாததனாற்—பூவிற்
றரும்பொருளா லாகுதியைத் தக்கவராற் காக்க
வருமதனை னற்கதிக்கு மால். (ருரு)

அடைந்ததனுப் பொய்யென் றறிவிக்க வாய்ந்து
மிடைந்ததனு விட்டருளை மேவித்—துடர்ந்த
குருவருளைப் பற்றிக் குறித்தவத்தை யஞ்சில்
வருந்துறவோர்க் கன்றோ வரம். (ருசு)

தத்துவத்தை நீங்க றருமறிவோர் தேகாந்த
மொத்தவுயிர்க் கந்தியட்டி யோதக்கேள்—முத்தி
யவத்தை கழித்தருளோ டாக்கிக் கருணைச்
சிவத்தி லழுத்துவதைத் தேர். (ருஎ)

வரையகல மாதின்ப மாதவரைச் சேரும்
புரையகல வென்னும் புகழ்நூல்—கரையகலக்
கற்றும்பொய் வஞ்சத்தைக் காமுறுவார் நூலதனை
யுற்று முறுதாரென் றோர். (ருஅ)

அருணூல் சிவதீக்கை யற்று மகில
மருண்மா லகல்வார் மதியாம்—பொருணூ
லறிந்தும் பிறர்க்கே யனுக்கிரகஞ் செய்திற்
செறிந்தா ரறிவலவாய்த் தேர். (ருகூ)

மருணீக்குந் தீக்கை வகைநான்கு முற்றும்
பொருணீக்கு மில்விற் புணர்வா—ரிருணீக்க
முற்றா ரலவா மொருநூலுந் தீக்கையுமற்
றற்றா ரறிவென் றறி. (சூ0)

நிறைந்தகல்வி தீக்கை நிறைவானும் பாகஞ்
சிறந்த தலவகிலஞ் சிந்தத்—துறந்தநெறிச்
சிரகத்தார்க் காவி சிறந்ததாந் தீக்கையுற்றுங் (சூக)
காரகத்தார்க் காவியிலை காண்.

அநித்தியத்தை நித்தியமென் றுய்வார் மலத்திற்
செனித்தவரென் றாகமங்கள் செப்புந்—தனித்தறிவாய்
நித்தியத்தை நித்தியமென் றுய்வார்க ணீள்சிவத்துற்
பத்தியென நித்தோரைப் பார். (சூஉ)

உலக தருமணியோ டொண்கரும பாகங்
குலவுமிற் காமக் குணமு—நிலவியிடும்
புல்லறத்தை மாற்றிப் பொருந்துஞ் சிவதீக்கை
யில்லறத்தார்க் காகுமென வெண். (கூங)

சிவதரும நன்மணியுஞ் சேருமல பாக
மவமறைக்கு மீசற் கவாவும்—பவமா
யிறைமறைக்கு மில்லிற் கிசையாத வீசன்
றுறவறத்துக் கென்றே துணி. (கூச)

தாரகைநே ரிற்குரவர் தண்மதிக்கு நேராகுங்
காரகத்தை நீத்த கனகுரவர்—பாரகத்தி
லார்க்கு மிருடீர்க்கு மாதவனேர் மையலறத்
தீர்க்கு மருட்குருவாந் தேசு. (கூரு)

சாதிக் கதிகந் தகுமறையோர் சட்சமய
நீதிக்குட் சைவ நிலையதிக—மாதி
மறைக்கதிக மாகமமே வாண்மதஞ்சே ரில்லாந்
துறைக்கதிக நீத்தோர் துணி. (கூகூ)

நிலைத்த வறமிரண்டு நேரொக்கத் தூக்கிற்
பலத்திற் குறையதிகம் பார்க்கி—லிலத்தோர்
கடுகி லணுவளவுங் காணாது நீத்தோர்
நெடுமலையும் வானினு நீட்டு. (கூஎ)

அறிவித்தா லொத்தங் கறிவார்பொய் யங்கம்
பிறிவித்தா லக்கலைகள் பேறு—மறிவித்தா
லொன்று மறியா தவர்க்குமுறும் பாவனையாற்
கொன்றிடுவான் நீத்தோன் குறித்து. (கூஅ)

பவுத்தர்முத லாய பலசமய மெல்லாந்
தவத்துக் குரித்தாய்த் தகுமா—னவத்தா
மறமிரண்டா மில்லுக்கு மந்தந்த மார்க்கத்
துறவதிக மென்றே துணி. (கூகூ)

பேறிதுவே யாதலினாற் பெற்றவதி காரத்தை
மாறுபட்டார்க் கன்றோ வரும்பிறவி—யாறுபட்ட
செஞ்சடையான் செஞ்சொல்லைச் சேர்த்தே னறிவுடைமை
நெஞ்சடைய மாணு நினைந்து. (எ0)

சிறப்புப்பாயிரம்.

சிவாச்சிரமத் தின்றெளிவைச் செய்தெழுப தாகப்
பவாச்சிரம மாற்றிப் பணித்தான்—சிவாச்சிரமந்
தென்னு வடுதுறையிற் றேவாம் பலவாண
னென்னுகத் தின்பா யெழுந்து.

சிவாச்சிரமத் தெளிவு முற்றியது.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## அம்பலவாணதேசிகர் அருளிச்செய்த

# சித்தாந்தப்பஃறொடை.

### காப்பு.

செய்யாப் பணிபலவுஞ் செய்வேன் றிருவுளத்துச்
செய்யும் பணிசிறிதுஞ் செய்தறியே—னுய்புநெறி
யெத்தால் வருமடியேற் கின்பா வடுதுறைக்கு
ளத்தா நமச்சிவா யா.

### மங்கல வாழ்த்து.

இருவினை யுற்றுக் கீழ்மே விசையுமெவ் வுயிர்க்கு மூன்று
யுருவினை யுற்றுக் கீழ்மே லுறும்வினை தன்பா லன்பாய்
வருவினை யாக்கித் தென்னா வடுதுறைக் கண்ம கிழ்ந்த
திருவினை நமச்சி வாயன் றிருவடிக் கமலம் போற்றி.

### நூல்.

திருவாரு ஞானத் திலதத்தா னீற்றான் (க)
மருவாரு மேனி வளர்த்தா—னொருவாத
கண்டிகை சென்னி களங்காது மார்புகரங்
கொண்டிலங்கு மேனிக் குறியுடையான்—மிண்டிலங்கப்
பேதித்த மும்மலமாம் பெற்றியெனு முப்புரத்தைச்
சேதித்த பொல்லாச் சிறுநகையான்—சாதித்த
காமமெனு மாசன் கனலோ டெரிந்துவிழச்
சேம விழிதிறந்த சித்தத்தான்—பூமிசையிற்
றோற்றமிறப் பென்னுஞ் சொலுங்காலன் மாய்ந்துவிழ
மாற்றுந் திருவடியால் வாட்டினோன்—கூற்றமெனு
மாணவமுஞ் சஞ்சிதமு மற்றுவிழ நோக்களித்துப்
பூணுங் கருணைநெறிப் பொற்பினான்—வீணவமா
மாயை மயக்க மடிய மலர்க்கரத்தை
நேயமுடன் சென்னிவைத்த நேயத்தான்—காயமுட
னோங்கு பொருளு முடலுமுயிரு மொன்றாக
வாங்குங் கருணை மதியுடையா—னீங்காத

மாசகற்றி யாவி மருவுமர னேடடங்க
வாசகமே யீந்த வழக்குடையா — னுசகற்றுந்
தேவகமே யாகவகந் தேவர்க்குந் தேவனெனப்
பாவகமே செய்யுமருட் பண்புடையான் — சிவகத்தாற் (அ)
பாசம் பதியைப் பரவாமற் பல்லுயிர்க்கு
நேசமாய் நிற்கு நிகளத்தைத் — தேசுற்ற
நூலாத்தாற் றேய்த்தவரு ளுட்பத்தான் பொய்யாகு
மாலாத்தை மாயவருள் வைத்துயிரை — மேலிருத்திச்
சித்தமுந் தீய கரணமுஞ் சித்திலே
யொத்திருக்கச் செய்யுமிக்க யோகத்தான் — முத்திநெறி
வேண்டுவார் வேண்டும் படிக்குவினை மாற்றிநன்கு
தீண்டுநெறி யென்மேற் சிறப்பித்து — நீண்டநெறிக்
காடுவா ராடும் படியாடி யாருயிரைக்
கூடுவான் மெய்ஞ்ஞானக் கோலத்தா — னீடும்
புவிமா லகலவருட் பூண்பார் புகழ்தன்
செவிமா னிறைத்தவருட் செல்வன் — பவமாய
வோங்குவா ரூட்டு முறுமனபா னுதியெல்லாம்
வாங்கிச் சுவைத்தநா வண்மையா — னுங்கவர்க
டொந்தித்த வன்பாற் றெடும்பூ விருங்கந்தங்
கெந்தத் தடக்குமருட் கேண்மையான் — சந்தித்த
மக்களெல்லாஞ் சாலோக மன்னுதற்காய் மக்களைப்போற்
றக்கதொழிற் கொண்ட சதுருடையான் — மிக்கவருட்
டொண்டரெல்லாஞ் சாமீபந் தோய்வதற்காய்த் தொண்டரைப்போ
லண்டனைப்பூ சிக்கு மருளுடையான் — மிண்டிப் (உ௦)
புலனடக்கிச் சாரூபம் புல்குவிப்ப தாகத்
தலநடக்கு மிக்க தவர்போற் — சொலநடக்குந்
தேசன் கருணைச் சிறப்புடையா னுவியெல்லா
மாசற்ற சன்மார்க்க மன்னுதற்காய்த் — தேசுற்ற
நூலோது வார்போல நூலோதித் தீத்தனுவின்
மாலோதி மாற்றும் வகையுடையான் — மேலோதிப்
பார்ப்பான்மெய் யாவிகளைப் பற்றிலவை பற்றியடி
சேர்ப்பான் கருணைச் சிறப்புடையா — னேற்பார்க்கு
வாக்கா லருளமுத மன்னுவிப்பான் றன்கருணை
நோக்காற் பிறப்பதனை நோவிப்பா — னீக்காம
லெத்தன்மைத் தோரு மிருக்கக் குணமகற்றி
மெய்த்தன்மைத் தாக்குமருள் வீறுடையான் — பொய்த்தன்மைத்
தேமா லூறுவார்தஞ் சித்தமலம் போக்கியருண்
மாமா லளிக்கு மதியுடையான் — பூமா

னுறுவார்க்குத் தன்னை யுறுமா றளித்துப்
பெறுமா றிதுவென்னும் பெம்மான்—பொறிமாறிச்
சேர்ப்பாரைத் தன்னடியிற் சேர்த்திடுவான் றீவினையுற்
றார்ப்பாரை யவ்வாறுற் றாக்குவா—னேற்பாரா
மன்பருக் கன்பாவா னல்லாதார்க் கல்லாதான்
வன்பருக்கு மன்பே வழங்குவா—னென்புருக்கு (௩0)
மீசன் குருலிங்க சங்கமமே யென்றறியப்
பேசியரு ணூலளித்த பெற்றியா—னூசமிலாத்
தேவர் முதலாகச் சிற்றுயிர்க ளீறாக
மேவியருச் சித்து விளங்குதற்காய்ப்—பூவிதனி
னற்கருணை தானே நயந்துலிங்க மாய்முளைத்து
நிற்குமதி கார நிகழ்த்திடச்—சொற்கரும
மாற்றி மவுன வகைநிறுத்தி வையத்திற்
றோற்று முயிர்கட்குத் தோற்றாமல்—வீற்றிருக்குஞ்
சீலமே யார்க்குந் தெரியாதாற் றேவென்னுங்
கோலமே யல்லாத கொள்கையான்—ஞாலமதி
லிங்கமே தேவென் றெணுவிக்கப் பேசுமரு
ளங்கமே யுற்ற வருட்பெருமான்—சங்கமமே
யண்டர்பிரா னென்ப தடக்கியித் தேவுக்கே
தொண்டரெனுந் தொண்டர்தமை யாவரித்துப்—பண்டைமல
மிண்டகற்றி யாருயிரை மேவுதலான் மேவுமருட்
கொண்டலெனு மிக்க குணமுடையா—னெண்டிசைக்கு
முப்பொருளின் றன்மை யுணர்த்தித்தன் மூதறிவாற்
செப்பரிய நேயத்திற் சேர்த்திடலா—லொப்பரிதா
மாசிரியன் றேவென் றறைவா னருணீதி
பேசரிய வாவியுருப் பெற்றியான்—மாசரிய (௪0)
வந்தோ னுயிர்க்கு வழிபாடு காட்டியிட
னிந்தையல வென்ன நிகழ்த்தினே—னெந்தைதன்
கண்டக் கறையுமருட் கண்ணுதலு மாற்றிநெறித்
தொண்டர்குழா மென்னத் துலங்கியே—யண்டர்தொழும்
வேதா ரணியத்தின் மெய்கண்ட சந்ததிக்கோர்
ஞாதா வெனப்பெயரு நண்ணியே—யோதா
துணர்ந்தார்க் குலவாக் கிழிவழங்கி யொப்பில்
மணந்தாள் பசுக்குலத்தை மாற்றிப்—புணர்ந்த
திருவா வடுதுறைவாழ் தேசிகனு மென்ன
வொருவாத் தொழிற்பெயரு முற்றே—திருவா
ரமரர்க்கு மெட்டா வரிய திரு நாமப்
பிரம வுபதேசப் பெற்றி—வரமாகு

முப்பொருளின் றன்மை முடிவாக யாவர்க்கு
மெப்பொழுது முள்ள தெனவாக—விப்பொழுது
தானே யுபதேசந் தங்குமென்ப தாய்மொழிவா
ரூனே யருக்கு முறுமுரணும்—வானேயு
மாவி யுளத்திருட்கோ ராதவனுய் மெய்த்தவர்கண்
மேவி யிருந்தும் விழுப்பொருளாய்த்—தாவிமிக
வுச்சரிக்குங் கேண்மை யுடைத்தா யுயர்சிவத்தை
வைச்சிருக்கு ஞான வழக்கதாய்—நிச்சயித்துச் (ருഡ)
செல்லா தவர்செவியுஞ் செல்லுவதாய்ச்—சீரருளைச்
சொல்லாத வாயுஞ் சொலுமெனலா—லெல்லாரு
நண்போ டுரைத்திடவே நன்னமச்சி வாயவெனப்
பண்போ டியர்நாமம் பற்றியே—கண்போது
சூட்டுவார் சூட்டித்தந் தொல்வினையி னெல்லையிரு
ளோட்டுவார்க் கெல்லாமெய் யோங்கொளியாய்—நாட்டுமரு
ணின்றோன் சபையி னிகழுங் கருணைநெறி
சென்றோன் சிவாகமத்தின் சீரொலியு—மன்றோதுந்
தேவாரம் பண்ணிற் சிறந்ததிரு வாசகமும்
நாவா லுருகி நவில்வாரு—மோவாமற்
சிந்தை யுருகித் திகைப்பாருஞ் சித்திரையின்
முந்து பருவ முதற்றிருநாள்—வந்தபெருந்
தேரோடு மீசன் றிருவிழாச் சேர்ந்திலங்கச்
சீராருந் தொண்டர் சிறப்புடனே—பாரோடும்
வெள்ளம் பரந்திலங்க மேவுமது போற்கருணை
வெள்ள மெழுந்தருளு மேன்மைகண்டு—கொள்ளுந்
தவமுடையா ரேத்துந் தகைமையினன் மங்கை
நவமுடைய பொன்னடியை நண்ணிச்—சிவனே
சிறியே னறியாமை தீர்த்திடுவா யொன்று
மறியே னெனவணங்கி யார்த்தாள்—பொறியகலப் (கூഡ)
பார்த்தான் சிரத்தைப் பரிசித்தான் பாவனையாற்
றீர்த்தா னறிவைத் திருப்பினன்—சேர்த்தவனை
வந்தித் திடுவதல்லான் மற்றொருவர் பின்செல்லச்
சிந்தித் திடுவதில்லைச் சீயென்பா—டொந்தித்த
மாதாவுன் பாலன்பாய் வந்தா ளெனவுரைக்கி
லேதாகு மெச்செனனத் தாயென்பாள்—பேதாய்
மலத்தா லுருந்தாய் மலமகன்றார்க் கெல்லா
மிலத்தா யருளல்லா லென்பா—ணலத்தாகுந்
தாயும்பொய்ச் சுற்றமெனுந் தந்தையு மோர்கணத்தி
மாயு முலக வழக்கென்பா—ளாயுங்கான்

மாயு முலக வழக்கெல்லா மீசனரு
ளேயமே யொன்று நிலையென்பாள்—காயமாந்
தந்தை யுனக்கிவனே யென்னிற் றகுமுதாத்
தொந்தத் தளவுண்டோ சொல்லுங்கா—லெந்தையடி
வந்திப்ப தாக வரும்வழியிற் றங்கிநின்று
சந்தித்தோ னுங்கவனுந் தந்தையோ—பெந்தித்த
யான்மரிக்கு முன்னா ளவன்மரித்திங் கென்னுதாந்
தானுதிக்கிற் றந்தை தவறன்றோ—வூனுதிக்கு
மாறே யளவில்லை மாறுபட்டுத் தோற்றுமலப்
பேறே பிதாவாய்ப் பெறுமோதான்—மாறெலா (எ0)
நீக்கியறி வானந்த நேய முறவடியி
லாக்குவான் றந்தையெனக் காமென்பா—ளூக்கு
மகவே யுனக்கிவர்க ளென்னின் மருவிச்
செகமா தரிப்பார் செனிப்பார்—வகையா
மிருவினையா லிவ்வுலகி லேத்தபிரா ரத்த
மருவுதற்காய் வந்தார் மகவோ—வொருவுதற்கு
நாளே வருங்கா னமைக்கேட்டுச் செல்லுவரோ
தாளைப் பிடித்திரென்றூற் றங்குவரோ—வாழப்
பிறந்தாரே யெம்மைவிட்டுப் போர்வீரே யென்று
பறந்தாலு நின்றுபார்ப் பாரோ—நிறைந்த
வுயிருயிரிற் றோற்றி யொடுங்குதலு முண்டோ
செயிருயிரிற் றோற்றுஞ் செயலாற்—பயில்வினைக
ளுள்ளளவு மோடி யொடுங்குவார் தம்மைமிக்க
பிள்ளையென்ப தெவ்வாறு பேசுங்கான்—மெள்ள
வியக்கு மரன்பா லிசையாத வாறு
மயக்குவார் தாமோ மகவா—முயக்கொள்ளு
மீசனே தாயாக வெவ்வுயிரும் பிள்ளையெனப்
பேசுவதே ஞானப் பெருமையென்பா—ணேசமுற்ற
சுற்றமே யுற்றா ரெனச்சொல்லிற் றொல்கருமக்
குற்றமே மாயைக் குழாமன்றோ—வுற்றவருட் (அ0)
கண்ணை மறைத்த கடிய விருட்குலமாய்
நண்ணியருட் டெய்வ நவையென்றும்—பண்ணுதவ
மெல்லாம் பழுதென்று மீசனெழிற் பூசையுறச்
செல்லா வறுமையுறச் செய்புமென்று—மில்லாத
வீம்பேத வாதாள் விழுவதெல்லா மென்றுமெய்யிற்
சாம்பலிடல் சாதித் தவறென்றுந்—தீம்பாகு
மக்குமணி யங்கத் தடாதென்று மாடவனைப்
பக்குவத்திற் கூடல் பயனென்று—மக்கடனைப்

பெற்றிடுவ தன்றேமெய்ப் பேறென்றும் பேராத
சுற்றமல்லா லுண்டோ துணையென்று—முற்றநாஞ்
செத்தாலுஞ் செய்வர் சிறப்பென்றுஞ் செல்வத்தா
லொத்தாசை மக்கட் குறுமென்றுங்—கத்தாவைச்
சேராமற் புத்திசொல்லிச் செய்வித்த தியரையான்
பாரா திருப்பதுவே பண்பன்றே—தீராத
மும்மலங்க ளூர்த்தறிவின் மூன்றுருவாம் பெற்றியறத்
தம்மைப்போற் செய்தார் தமரொன்பா—லிம்மைப்
பதியே யுணைநோக்கும் பண்புற்றா னென்னின்
விதியாற் பதியன்றே மேவ—மதியாரு
மாண்பெ ணலியென்ப தாருயிர்க் குண்டோதான்
தோண்கண் டனுவின் குறியன்றே—வீண்மண்ணிற் (கூ0)
றோற்றுதரு வெத்திறத்த தத்திறத்த தாய்த்தோய்ந்தங்
காற்றுமலப் போத மதாய்நின்றும்—வேற்றுடலை
யின்பமெனக் கண்டிங் கிசைவதெல்லாம் வீணான
துன்பமல்லா லுண்டோ சுகமுயிர்க்கு—வன்பாகு
ஞாலமதி னண்ணி நடக்குமக ளோரான்
கோலமது கொள்ளக் குறித்தொருத்தி—மாலுற்
றணைவதற்கு முன்ன மதன்சுவடு கண்டும்
புணரும் வகைபுணரு வாளோ—வுணரு
மொருத்தி யொருவனுக்கங் குற்றமா லல்லால்
வருத்தின் மறுமால் வருமோ—பொருத்திப்போய்ப்
புல்லுவார் தம்மோடும் புல்லா னரனென்னச்
சொல்லுவார் சொல்லைத் துணிவுற்றுஞ்—செல்லு
மிவனே பதியென்றிங் கில்லாது சொல்லிற்
சிவனையகல் விப்பதன்றே தேரின்—றவனே
ருருவா ரரனுக் குருமடந்தை யாய்த்தஞ்
சிறுமான் சிதைத்தநிலை தேரின்—பெறுமானுக்
காண்பால தாகி லணுகான்பூ மானென்ன
வீண்பால தாக விடுத்ததன்றே—பூண்பாலா
மெய்யா மடந்தை யெனவிரும்பி மோகமாய்ச்
செய்யா நலங்களெல்லாஞ் செய்வித்து—மையறருங் (ரா)
காய மொருவருமே காணும லாலயத்தி
லேயு நெறியு மியற்றுமன்—மாயமற்ற
வீச னடியார்க ளேவலினுஞ் செல்லாமற்
றேசிகர்க்குஞ் செல்வஞ் செலுத்தாமன்—மாசகலச்
சொல்லும் புராணச் சுவைக ளுணராமற்
செல்லுமரன் பாலன்பு செய்யாமல்—வல்லபடி

வாசறனிற் காவன் மனையு ளடக்கிமிக
வாசையுற வெல்லா மமைத்தங்ங—னேசமுறு
மால்காவி மையற் றொழிலனைத்து மன்னிமலத்
தோல்காவ லிட்டமலத் துட்டனன்றோ—காலன்பா
அற்றபோ தாவி யுறுமுடலைக் கையாற்
பற்றுதலுஞ் செய்யாப்பொய்ப் பாவியன்றோ—சொற்றவரு
ளீசனுக்கே யீயா னிசைந்தவபி மானமெல்லா
நீசனுக்கே யீயுநெட் டூரனன்றோ—மாசற்ற
தேவென்பான் றன்னையெனைத் தேவியென்பான் சீவனறிற்
சாவென்பான் பொல்லாச் சதியனன்றோ—கோவென்னு
மீசன் பதியாகி யெவ்வுயிரும் பெண்ணாகி
நேசமுறு மல்லா னிலையுண்டோ—மாசற்று
மாவியோ டாவி யணைவதுண்டோ பெண்ணாகும்
பாவிபதி யென்னப் பகர்வனோ—வாவியற்ற (௱௰)
மாயமே காய மலமா யறிவழிந்து
தோயும் பிணமாற் றொடெனென்பா—ளேயுநெறி
யாளடிமை யெல்லா மடைந்தார்க ளென்னிலரன்
றாளடிமை யல்லாற் றனியுண்டோ—நாளு
மெனக்கடிமை யென்றிங் கிசைந்தநா ளீசன்
றனக்கடிமை யின்றாய்த் தனித்து—மனக்கவலை
யுற்றுப் பிறப்பென்ப தெல்லா முறப்பட்டுக்
குற்றநா கத்துங் குடிப்பட்டுச்—சுற்றிடுநா
ளுக்குங் குருலிங்க சங்கமமா யுற்றீச
னீக்கு மயக்கமெலா நீக்கியெனை—நோக்கி
யடிமையெனச் செய்தா னறிந்தறிந்தும் பொல்லாக்
கொடுமைசெய்வ தெல்லாங் குணமோ—கடுமயக்கங்
தள்ளுவா னீசன் றனக்கடிமை யாகினல்லா
லெள்ளுவான் சற்று மிசைவனோ—வுள்ளதா
மெல்லாரு மீசர்க் கடிமை யெனக்கடிமை
செல்லாது சீவன் சிவற்கடிமை—யில்லாத
மூட ரடிமை முறையாக்கும் பொல்லாத
வேடர் தருமவ் விதியன்றோ—நாடுஞ்
சிவனடியா னென்றமொழி தேரிற் சிவனுக்
கிவனடியா னன்றென் றிசைக்கும்—பவநெடிய
பாதகத்தார் பொய்க்குப் பயப்படா தோதுமலப்
போதகத்துக் குள்ளாய்ப் புகுதாதே—மேதகத்தா (௱௨௰)
மொன்றலா வொன்று முளதாகி நின்றவா
றென்மலா வொன்றிலவை யிருத—லொன்றலா

வீறே முதலதனி னீறலா வொன்றுபல
வாறே தொழும்பாகு மங்கென்றும்—பேறே
யுரைக்குஞ் சிவஞான போதத்தை யோரா
திருக்கு மவர்க்கியல்பா மென்பாள்—செருக்கு
முடைமையுனக் கிதென் றுரைக்கி லொருவர்க்
கடிமை யுறினுடைமை யாமோ—திடமாய்ச்
சிவன துடைமையெனச் செப்பின் சிவனுக்
கிவனடிமை யன்று யிசைக்கு—மிவன திது
வென்னி னிறையிவனின் வேறு மிவனவனுத்
துன்னிலிரண் டாகுமோ சொல்லுங்கான்—மன்னுமுட
லொற்றுமையா யாவி யுடன்படுங்காற் போகவித
முற்றிடுவ தொன்று யுறுமன்றோ—பற்றுதற்கங்
கில்லாத தாமு மிதனு ளுளதாகிப்
பொல்லா நரகம் புகுவரோ—செல்லாத
வாவி தனுவோ டரும்பொருளு மொன்றுக
மேவிச் சிவாற்புதமாய் விட்டதன்றோ—பூவிதனின் (௱௩௰)
யானெனதென் றெண்ணி யிடுவாரு மேற்பாருந்
தோன்றனது தானுக் கொடுத்தடக்கித்—தான்றனதை
யிந்துபலன் கொள்ளு மியல்வோர்க் கிவைநன்று
மாய்ந்து தமையற்றூர்க் கவைநன்று—மேய்ந்தமொழி
யெங்குமுள னென்றளவை யொன்றன் றிரண்டென்னி
லெங்கு முளனன் றெவற்றெவனு—மங்க
ளவையவ னன்றில்லைப் பொன்னொளிபோ லீச
னவையுடைமை யாளாநா மங்கென்—நவையகலச்
சொல்லுஞ் சிவஞான போதத்தைச் சூழாமற்
செல்லுவார்க் கேதுமுண்டாய்ச் செப்புவா—லில்லறத்தி
னேங்கு குலநலத்தி னுண்மையறச் சைவநெறி
தாங்குவது மங்கை தவறென்னிற்—றீங்குமையற்
சாதியுயிர்க் கில்லைத் தருங்கரும பேதத்தா
னீதிகுல நான்காக நின்றுளதா—லோதுங்
கருமமொரு நான்காங் கடவுள் வினையும்
வரும்பொதுவே யாக வரலாற்—றருங்கரும
பாவ மெவர்செயினும் பற்றுவார் திநிரய
மேவுதன்ம மார்செயினு மேலுறைவார்—தேவ
னரனே யெனப்பணிவா ராரேனு மெங்கள்
பரனே பசுபாசம் பற்றி—வரினே (௱௪௰)
யிறைமாறு கொண்டிங் கெழுபிறவி யாகித்
துறைமாறு கொண்டு சுழலு—நிறைமா

றெழுகுலங்க ளெல்லா மிறையருளான் மாற்றிற்
றெழுகுலமே யன்றிச்சொல் லுண்டோ—விழிகுலமாஞ்
சாதியுயிர்க் குள்ளதெனச் சாற்றுமோ மாமறைக
டதகலத் தேவர் திருமொழியு—மோதும்
பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வாச்
செய்தொழில் வேற்றுமையா லென்றும்—பிறப்பகல
வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படுமென்றுஞ்—செய்ததனாற்
றேசிகர்க்குப் புத்திரராய்ச் சேர்ந்தாரை யன்னமெனப்
பேசி னரகமுறும் பெற்றியன்றோ—மாசிற்
றிருந்துபெருஞ் சாதிச் செயலானற் சைவத்
திருந்தவர்க ளோதித் திலையாற்—பொருந்துகின்ற
சாதிவியப் பாகத் தருமன்றோ வேதமிதை
நீதிமறை யோரே நிகழ்த்துவதா—மோதியதோ
ராசிரம நான்கு மடங்கும் வருணத்தி
னேசமுறு வேத நெறியதனைப்—பூசுரரை
யல்லாதா ரோதி லருநரகத் தாழ்வரென
வெல்லா மறையு மியம்புவதாஞ்—சொல்லார்
மறையோர் முதலாக வாழுமுயி ரெல்லா
மிறையோனும் பத்தி யிசையி—னிறைவாகுந்
தேசிகர்பா லுற்பவிக்குந் தீக்கையொரு நான்கதனின்
மாசரிக்கு மாறுவர வுற்றோர்க—ளாசரிப்பா
ராகமங்க ளையைந் தொருமூன்று மல்லாதார்
தாகமுற்றுத் தீண்டிற் றகுநிரயத்—தாழுமெனச்
செப்புஞ் சிவாகமங்க ளெல்லா மிதனாலே
யொப்புயர்பி ரண்டுக் குதாரணந்தா—னிப்பொழுது
வேதநூல் சைவநூ லென்றுரைக்கும் வேறற்ற
வாதிநூ லாதியலா வாதியா—லோதுநூ
லாரணநூல் சைவ மருஞ்சிறப்பு நூலாகுங்
காரணர்க்கு மல்லார்க்குங் காணுங்காற்—பூரணமாம்
வேதா கமத்தின் விதியா லிழிபுயர்பிங்
கேதா முதாத் தெழுவாருஞ்—தீதாகா
ஞானத் துதிப்பாரு நண்ணியிடி னென்றுமோர்
வானத்தார் ஞான வரனுமோ—மானத்தா
லாதிமறை யோதி யதன்பயனென் றும்மறியா
வேதியர்சொன் மெய்யென்று மேவாதே—யாதிபின்மே
லாற்றதிரு நீறுஞ் சிவாலயமு முள்ளத்தாச்
செற்ற புலையர்பாற் செல்லாதே—நற்றவஞ்சேர்

வேடமுடன் பூசையருண் மெய்ஞ்ஞான மில்லாத
மூடருடன் கூடி முயங்காதே—நீட
வழித்துப் பிறப்ப தறியா தரனைப்
பழித்துத் திரிபவர்ப்பா ராதே—விழித்தருளைத்
தந்தாளு மீச னடியாரைச் சாரென்ன
வந்தா ளுமாபதியான் வாழ்பதியே—நந்தானங்
கொற்றங் குடியான் குலவியடி யாரடையச்
சொற்ற திருமொழியைச் சூழாமற்—குற்ற
முறுவார்க்குச் சாதி யுயர்புநன்று முத்தி
பெறுவார்க்குத் தீக்கைப்பே றென்பா—ணிறைவா
மிறவாப் பெருஞ்செல்வ மில்லறத்தி னேங்க
வறமான தெல்லா மடையத்—திறமாக
நின்றதனை விட்டு நெடிய துறவதனைச்
சென்றதுநீ யெவ்வாறு செப்பென்ன—நின்றுலகி
லென்னான் கறத்தார்க்கோ வேய்ந்தகதி யெவ்வுலகு
நண்ணு தவர்க்கோ நலஞ்சொல்லாய்—கண்ணாரப்
பட்டதெல்லாம் பொய்யே பரம சிவனருளால்
விட்டதெல்லாம் மெய்ஞ்ஞான வெற்றியன்றோ—நட்ட
விலமே பலமா யிசைந்ததெல்லாம் பொல்லா
மலமே யிலமாய் மருவி—நலமே (௱எ0)
தருமனை நீத்துத் தருமிலத்தின் மோகம்
பரவுதலா லுண்டோ பலமென்—மரபழிபே
தியமலச் செய்தியன்றோ தீவினையா லாவிமிகச்
செய்யு முலகச் செயல்பற்றிப்—பைய
நடக்கு மயக்கமென நண்ணியதை நீங்காக்
கிடக்குங் கிடையே கெதியாய்த்—தொடுத்ததோர்
தொல்லையற மெண்ணான்குஞ் சூழ்ந்தமற மொன்றினுக்குஞ்
செல்லுமல மைந்தின் செயலாமால்—வல்லபலஞ்
சொர்க்க நரகமவை தோய்ந்தவையின் சேடத்தா
னிற்கும் பிறவி நிலையினு—னற்றருமம்
பண்ணியபே றன்றோ பகரயன்மா றேவரென
வெண்ணரிய மக்களுக்கு ளேற்றமாய்—நண்ணு
மதிகாரம் பெற்ற வதனு லெவரு
மதியான தெல்லா மயங்கிப்—பதியா
மிவரே யெனக்கருதி யீசரன்பு நீத்த
புவனேச ரெல்லாம் புறம்பாய்ப்—பவனேசப்
பட்டாரை யெல்லாம் படைப்பயனுஞ் சங்காரஞ்
சிட்டிமுத லெவ்வுயிர்க்குஞ் செய்துதா—னட்டப்

படுவதின்றாய்ச் சங்காரப் பட்டதெல்லாஞ் சிட்டிப்
படுவதற்கு முத்தியினைப் பற்றித்—தொடுவதற்குத் (௱அ௰)
தோற்ற மொடுக்கஞ் சொலுமிவையு மில்லாத
தேற்றமே தேற்ற மெனநின்று—மாற்றுமல
முள்ளபோ தெல்லா மலமு முளதாக
வெள்ளுமதி கார மியல்பாகக்—கள்ளமலம்
விட்டபோ தெல்லாம் விடவா மிருவினையின்
கட்டகல்வ தாகக் கருதுமுத்தி—தொட்ட
வனுக்கிரகந் தானு யடைய வருட்குத்
தனுக்கிரக மாகத் தருமாற்—செனிக்கு
மிருவினையோ டொன்று யிசையு மவைமெல்லா
வருமறமு மாங்கே வருமா—லொருமலமு
மில்லா விடமா மிசைந்தசிவ புண்ணியமற்
றெல்லாந் துறவோ டிசைவன்றே—சொல்லுமல
மற்றபோ தன்றே வரனெறியைக் காமித்தங்
கிற்றறக்க நெஞ்ச மியல்பாகு—நற்றவர்க்கு
மீசன்மேன் மோக மெழுந்தன்றே வில்லறத்தை
மோசமெனக் காணு முறைபெற்று—ராசற்ற
வத்தன்மேன் மோக மடைந்தன்றே வில்லறத்தைக்
கொத்துடனே மாற்றக் குணம்பெற்றார்—சுத்தனரு
ணெஞ்சத்துள் வையாப்போய் நெஞ்சர்க்கு மில்லறமாம்
வஞ்சத்தை மாற்ற வருவதென்கொல்—கொஞ்சக் (௱௯௰)
கருமமென்ப தொன்றைக் கருதுவார்க் கேதான்
தருமா தருமமெனச் சார்ந்து—வருமதனாற்
சாதித்தார்க் காகுந் தரும மதன்மமதைச்
சேதித்தார்க் காகுஞ் செயலாமால்—வாதித்த
பாவத்தை மாற்றிப் பகாறத்தைச் சார்ந்துபசுத்
தேவத்துக் கன்பு செயற்பாலாய்—மேவித்தம்
மோகத்தா னீத்திலத்தை முற்றியதே யன்றிமல
பாகத்தா லல்ல பகருங்கான்—மாகத்தா
வின்னு ரெனவு மிசைந்திலையாற் றீயமல
முன்னுய் நடத்து முறையன்றே—மன்னி
யறிவித்தா லெல்லா மறிவன்மெய்த் தேவை
யறியா தாலறிவ தாரேற்—செறியுமல
மற்றார்க் கறிவை யளிக்கு மறுதார்க்குக்
குற்றத் தளவே கொடுக்குமால்—நற்றிமிகத்
தித்திக்கும் பால்பித்தஞ் சேர்ந்தாருக் கூட்டாத
புத்தி யுடைய புனிதரைப்போற்—சத்தியமே

6

செல்லாத மூடருக்குத் தெய்வத்தைத் தெய்வமெனச்
சொல்லா தவர்க்குஞ் சொலானீச—நல்ல
துணைவனைத்தோன் ஞமலவன் ஞெத்தனுக்கு மாலா
யணைவளவ னுய்ந்து மறியக்—கணவனை (உஅ)
னென்றாலும் பொய்யென் றிசைபா ளினியகுலத்
தோன்றுகு வாளோ வுயர்ந்துமிக—நன்றாகுங்
கத்தனையே நீத்துக் கருதுமவ னேவறருந்
தொத்தனுக்கன் பாகித் துறந்தாரைச்—சுத்தரெனும்
புத்தியென்ப தெவ்வாறு புன்மலத்தை மாற்றாத
சித்தமென்ப தன்றோ திடமாகுந்—தொத்துந்
தருமத்தாற் றேவாய்த் தகுவார்க்காய் நீத்த
கருமத்தார் கருமத் தாரே—யொருமித்து
நின்மலன்மேன் மோக நிகழ்ந்திலத்தை நீத்தாரைப்
புன்மலத்தா ரல்லவெனப் போற்றிடுக—நன்மையுற்ற
வாண்டவனை யானென்று மானவனைத் தேவென்றும்
பூண்டதனு முண்டாமோ புண்ணியங்க—ணீண்டவில
நீத்தானை நிந்தித்து நீணிரயத் தாளாகச்
சேர்த்ததனு முண்டோ செயலம்மா—வார்த்ததோர்
தேவைப் பசுவாயுஞ் சிற்றுயிரைத் தேவாயும்
பாவித்தாற் கென்ன பயனுண்டாம்—பூவின்
முதலிழந்தார்க் கூதியமு முண்டோமெய்த் தேவாம்
பதமிழந்தார்க் குண்டோ பயன்கொள்—விதமாய்த்
துறந்தா ளனைத்துந் துணைவனையே பற்றி
யிறந்தா ளிதன்மேலு முண்டோ—சிறந்தவனைப் (உகூ)
பற்றி யொருத்தி பரிந்துமிக மாலாய்த்தஞ்
சுற்ற மனைத்துந் துறந்தவளுக்—கற்றமல
மேதோ கடவுளிசை வேதோ விசைவில்லை
யாதோர் வினைக்கு மளவில்லைப்—பூதவினை
தன்னளவு நிற்கத் தகுமல்லான் மற்றொன்றை
யுன்னி நடக்கு முணர்வுண்டோ—மன்னுலகை
நீத்ததனுன் முத்தி நெறியோ வுலகமெல்லாங்
காத்ததனுன் முத்திக் கடவுளோ—வார்த்த
வரற்கா யிலமதனை யற்றபேர்க் கல்லா
னரற்கேது முண்டோ நவிற்றி—லிரக்குதற்கா
யற்றதெல்லா முத்தி நெறியோதன் னுளன்ற
வுற்றவர்க ளெல்லா முறுதவமோ—குற்றமற்ற
விசன்மேன் மோக மெழுந்தற்றாற் கன்றிமல
மோசனமு முண்டோ மொழியுங்காற்—பேசும்

மரியயன்றே வாவர்மற் றல்லாத பேருந்
திரிமலத்தோ டொன்றாகச் சேர்ந்து—வருங்கரும
பாகத்தாற் றேவாயும் பாவத்தா லாளாயும்
போகத்தாற் போகப் படுமுயிர்கண்—மோகத்தாற்
கத்தா வகத்தா வகத்தாவே கத்தாவாய்ப்
புத்தி திரிந்தமருட் போதத்தா—லத்த (உஉ0)
னரனே யெனவு மறியாமை நின்ற
துரையெனக்கின் றுள்ளபடி யென்னப்—பரவுமையற்
றந்தைபான் மோகத் தகுதியா லீசனெனு
மெந்தைபான் மோக மிழப்பன்றே—சந்ததமுந்
தாயர்பான் மோகத் தகுதியா லீசனெனு
நேயர்மேன் மோக நிலாதன்றே—மாயமுற்ற
மாதர்பான் மோக மருவுங்கா லீசனெனும்
வேதர்பான் மோகம் வெறுப்பன்றே—போதமற்ற
மக்கண்மேன் மோக மருவுமா லீசனெனுஞ்
சொக்கர்பான் மோகந் தொடாதன்றே—மிக்கதோர்
சுற்றத்தார்மேன் மோகந் தோன்றுமா லீசனெனு
மற்றவர்மேன் மோக மறுப்பன்றே—வுற்றதோ
ராடகத்தின் மேன்மோக மாகுமா லீசனெனு
நாடகத்தார் மோக நவையன்றே—நீடுமையற்
பொய்த்தேவர் மேன்மோகம் பூணுமாற் போதமுற்ற
மெய்த்தேவி னன்பு வெறுப்பன்றே—வைத்த
பசப்பெல்லா நீத்து பரமசிவத் தொன்றா
யிருப்பன்றே வாவிக் கியல்பா—மரிப்பா
முலகே நெடும்பிழையென் றோதி யுலக
மலகைத்தே சென்ன வறைவாள்—விலகித் (உ௩0)
துடைத்தாற் றனக்குத் துணையென்பாள் செல்வம்
படைத்தார் பசுவாகு மென்பா—ளெடுத்துமுலை
தந்தா ணடக்கத் தகுந்தாரத் தைச்சுமக்கு
நந்தா வுலக நடையன்றே—தந்தையென
வந்தோன் பசித்திருக்க மக்களுக்கே யூட்டுமையற்
சிந்தா வுலகின் செயலன்றே—நந்தாமற்
றொட்டதனைத் தொட்டுத் தொடுநன்றி யத்தனையும்
விட்டுவிடும் பொல்லா விதியன்றே—நட்டாரை
யோங்கும் பொருளா லொறுத்துப் பகையாக்கி
வாங்கு முலக வழக்கன்றே—நீங்காம
லொட்டு மகவொருவ ரேனு மொருபணத்தால்
வெட்டும் பகையாய் விடுவான்றே—சுட்டியரு

வீசன் றிரவியங்க ளெல்லா மிலத்தாக்க
வாசைகொள்ளும் பொல்லா வவத்தரன்றோ—மாசறுக்குந்
தேசிகர்க்கோர் காசுஞ் செலுத்தார்தஞ் செல்வமெல்லாம்
வேசியர்க்கே யீயும் விடரன்றோ—நாசமிலாச்
சங்கரர்க்கே யன்பு தரிப்பியார் தீப்பிறப்பா
மங்கையர்க்கே யன்பதனை வைப்பரன்றோ—சங்கையற
வுள்ளளவு மக்களுக்கே யீய வொருப்படுவ
ரெள்ளளவு மீசர்க்கொன் றீயாமற்—கள்ளமலந்
தீர்ப்பார் புறமிருக்கத் தீயமக்க ளோடருந்தி
யார்ப்பார் நரகத் தவரன்றோ—நோற்பார்கள்
பெற்றெடுக்க வீசன் பிறந்திருக்கப் பிள்ளையென
வெற்றுடலந் தீண்டும்பொய் வீணரன்றோ—நற்றியரன்
பூசைசெயும் போதனேகம் போதுசெலு மில்லதற்கு
மோசமெனும் பொல்லாத மூர்க்கரன்றோ—மாசுற்ற
மைந்தர்செயுங் குற்ற மறைப்பார் தவரென்னி
னிந்தைசொலும் பொல்லாநெட் டூரரன்றோ—சிந்தைதனை
வாதைசெயுந் தீய மலமகற்றுஞ் சங்கமத்தைச்
சாதிசொலும் பொல்லாச்சண் டாளரன்றோ—நீதிசொலுந்
தேசிகரை யீசரெனச் செப்புதவர்க் கில்லாத
வாசகமே சொல்லும்பொய் வஞ்சரன்றோ—நேசமுற
வுள்ளுவா ரல்ல வுறவல்ல தேசிகரை
யெள்ளுவார் தீய விடக்கரன்றோ—கொள்ளுநிலை
காணார் சிலரோடுங் கண்டாரைப் போற்றவரை
வீணாயும் பொல்லா விடரன்றோ—பூணாகு
மீசற்குப் பூசை யிலாதிருக்க மக்களொடும்
போசனமே செய்யும் புலையரன்றோ—பேசு
முலகமுயி ரெல்லா மொருவனிதிங் கென்றால்
விலகி யெனதென்னும் வீணர்—நிலவுவதோ
ரூனாற் பிறிதுயிரைக் கொன்றூனைத் தின்றுமல
வீணாய் நரகில் விழுவரன்றோ—கோணாகும்
பொல்லாப் புலாலைப் பொசியாரு நல்விருந்தாற்
கொல்வார் நரகக் கொடியரன்றோ—பல்பிணிகள்
பெந்தித்தாற் சிற்றுயிரைப் பெல்வியிடு வித்துமலத்
தொந்தத்தாற் றீநிரயந் தோய்வரன்றோ—பந்தமுறு
மாயா வுலகே மதுபானச் சந்தையதைத்
தோயா தவரே துணையன்றோ—சாயாத
சங்கமமே லிங்கந் தருங்குருவோ டொன்றாகத்
தங்கு மவரே தமரென்பாள்—பொங்குமருள்

வேடமும் பூசையுமே மெய்யென்றான் பொய்யென்றான்
மாடையும் வாழ்க்கை மனையையுமே—நீடியதோர்
நெஞ்சு விடுதூதி னிகழ்த்துமுப தேசமுறு
வஞ்சகரை நெஞ்சின் மருவெனென்பா—னஞ்சுண்ட
தேவேமெய்த் தேவென்னச் செப்புவதென் மூவருநங்
கோவே யெனமறைகள் கூறவெனின்—மேவுந்
திதிக்கடவுள் சங்காரஞ் செய்கடவு டம்மை
விதிக்கடவு டானே விதித்தா—னதியைப்
பொறுப்பானுஞ் சிட்டிதனைப் பூண்பானு மாலாம்
சிறப்பாவா சிட்டிதிதி யெல்லா—மறுப்பா (உகூ0)
னரனேயா மன்றோ வவன்மரிப்ப தின்றி
வரமே யளித்து வருவான்—பரமே
யிவனல்லா ரெல்லா மெழுபிறப்பை யேயும்
பவமாம் பசுவாகும் பார்க்கிற்—செவையா
யிலயித்த தன்னிலில யித்ததாம லத்தா
விலயித்த வாறுளதா வேண்டு—மிலயித்த
தத்திதியி லென்னி லழியா தவையழிவ
தத்திதியு மாதியுமா மங்கென்று—முத்திநிலை
சொற்ற சிவஞான போதத்தைச் சூழாம
லற்றவர்க்கே பொய்க்கடவு ளாமென்பா—னூற்ற
திருநீறு மஞ்செழுத்துஞ் சேர்கண் டிகையு
முருமாறு கொள்ளுமுறுந் தேவே—கருமாறச்
செய்யுமென நல்லொழுக்கஞ் செய்திடினுஞ் சீவனற்று
நையு முடற்சிறப்பு நண்ணியதா—மெய்யாகு
மஞ்சக் காத்தார்க்கே யாவியுறு மெய்யழுக்கு
மிஞ்சக் காக்கும் விதியென்ன—நெஞ்சிரக்கத்
தாசாரஞ் சற்று மிலவெனு மாவியைப்போற்
றேசாரு மீசன் சிறப்புளதாற்—றாசாகு
மாவியற்று லேதடுத்து மாவதுண்டோ வீசனல்லாற்
பாவிப்ப தெல்லாம் பழுதென்னத்—தேவர் (உஎ0)
தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்ற லரிதென்—றெனக்குவலை
போக்குவ தாய்ச்சொன்ன பொருளு னுணராப்பொய்
மாக்களுக்கே நீநிரயம் வைத்ததென்பா—னீக்கமறும்
பேசரிய வையம் பிரமத்தாய் வஞ்சத்தி
னேச முறுமலத்தா னீவ்பொருளி—லாசைப்
படுமாற தெவ்வாறும் பட்டு நிரயந்
தொடுமாற தெவ்வாறுந் தொட்டு—விடுமாறந்

றெல்லாம் விடுத்தங் கிசைவதற்கோர் தேவின்றிப்
பொல்லா நரகம் புகுவதாய் —நில்லாமெய்
யாவி தனைக்கண் டகம்பிரமு மென்னுமலப்
பாவிகளைக் கண்ணுறும் பாரேனென்பாள—மேவுமுயிர்
கொன்றான் றினல்காமங் கோப மதுபான
மென்றுந் தனுவுக் கியல்பாக்கி—மன்றுணட
மாடுவான் றன்னை யகற்றியவன் சத்தியடி
கூடுவா னாகக் குறித்துடலிற்—சூடுவான்
கண்டிகையு நீறுங் கருதுமெழுத் தோரைந்து
மண்டிகழும் வாமி மருவியருட்—டொண்டொழுங்கு
மாறுபட்ட பொல்லா மருட்குழா மாவார்க்கும்
வேறுபட்டே னென்ன விளம்புவா—னீறுபட்ட
காயமதி லீசனையுங் கண்மணியுங் கட்டியடித்
தோய்ந்தவா வாயத் தொடுஞ்சேட—மாயமறு
நாதனடிக் காக்கிமுத னன்னுஞ் சிவாலயமு
மோதுசிவ தீர்த்தத் துறுவிதியும்—பேதமென
நீசர் குலமுதலாய் நீக்குமவை தோற்றியிட
நாசமுறன் மாதர் நவையெச்சிற்—றேசதெனக்
கூடி நடந்து குலவு முயிர்மடியின்
வாடுமுட லோடிலிங்க மாய்த்தறிவாய் —நீடியதோர்
வேதா கமத்தின் விதிமாற தாய்நிரயச்
சூதாவார் தீங்ககலச் சொல்லுமறை—தீதாகா
துற்றடியா ரோங்குஞ் சிவாலயமு முள்ளத்துச்
செற்ற புலையர்பாற் செல்லாதே—மற்றவஞ்சேர்ந்
தொப்பரே நாயினுக்கு மூனுடலின் மண்பூசி
முப்பொழுது மூழ்கார் முயன்றென்றுஞ்—செப்பும்
புறந்தூய்மை நீரா னமையு மகந்தூய்மை
வாய்மையாற் காணப் படுமென்றுந்—தூய்மொழியின்
போதகத்திற் செல்லாமற் புன்னூல்பா ராட்டுமலப்
பாதகரைக் கண்ணுற்பா ரேனென்பாள்—மேதகத்தா
மீச னொருமுதலே யெண்ணிறந்த தாவியவை
மாசகன்று நிற்கும் வகையதனிற்—பாசமிரு
மாயையொடு கன்ம மருவிப் பிறப்பிறப்பைத்
தோயு மவையகலத் தூயவரு—ளேயவுயிர்
நீரொடுநீர் சேர்ந்து நிறைந்ததுபோ லீசனுடன்
சேரு மெனுமபிக்கச் சிருடையான்—பாரபிக்க
மேயு முயிர்க்கோ ரிருண்மல மொன்றின்றேற்
றேயுமுடன் மென்முபங்கித் தோய்வதின்றுங்—காயமதிங்

காவிதனக் கஞ்ஞான மெய்ஞ்ஞான மாகிலதாய்ச்
சீவிப்ப தல்லாற் செயலுண்டோ—மேவியநீ
ரொன்றாக லாற்கத்த னோடமை வின்றதாய்
நின்றா ளிவனெனினே யேனென்பாள்—குன்றா
விருகட் கிடையி லிசைந்ததடை யன்ன
மருவி மலமுயிரை மன்னக்—கருவினை
யெல்லா மிசைந்தங் கிறப்புப் பிறப்போடு
பொல்லா நரகம் புகுந்துமிக—வில்லாத
வின்பமே மேலா யிசைந்திடுநா ளீசன்மலத்
துன்பமே நீக்கத் துடக்கோர்கன்—முன்புற்ற
கேவலமே போலக் கிளருமறி வேதுமற
மேவுதலே முத்தி விதியென்பா—ணுவியறச்
செப்பியதோர் முத்தித் திறநன்றாந் தீதிருளை
யொப்புவதா முத்தி யொழுங்கென்னி—லிப்பொழுது (௯௱)
மாயா தனுவிளக்காய் மற்றுள்ளங் காணுமதைத்
தோயாத கேவலமுஞ் சுத்தமன்றோ—வீயாத
வம்பகத்துக் குற்ற வவலத் தடையகன்றாற்
செம்பொருளைத் தேர்தற் றெளிவன்றோ—நம்புமுயிர்க்
காசற்றா லீசனோ டாவதுவே முத்தியெனப்
பேசுவதே மெய்ஞ்ஞானப் பெற்றியதாம்—தேசற்ற
வாசாதி யேலணவ காரணமேன் முத்திநிலை
பேசா தகவும் பிணியன்றோ—மாசுற்றார்
தாங்குதலே போலத் துலங்குங் கரணமற
வோங்குதலே முத்தி யெனவுரைக்கிற்—றாங்கும்
பொறியிலார் முட்டைசினை புன்மரங்கள் கொர்ப்பத்
தறிவிலார் முத்தியடை வாரா—நெறியின்
வருமிந்த முத்திக்கு மன்னுசிவ ஞானக்
குருவும்வர வேண்டாங் குறித்து—வரைவாய்
வருந்துன்ப மல்லான் மருவு சிவஞானம்
பொருந்துவதங் குண்டோ புகலிற்—றிருந்தியதோர்
பாடாண வாதம் பகருவார்க் கேமுத்தி
கூடா தவனெடுங்கூ டேனென்பா—ணீடுசெம்பிற்
றங்குங் களிம்பதறச் சாருங் குளிகையென
மங்கு மலமுயிர்க்கு மாயவருட்—சங்கமுறச் (௯௱௧௰)
சுத்தமா யொன்றோடுந் தோய்வற்றுத் தான்பேத
முத்தனென முத்தி மொழிந்திடுவா—னித்தியமா
யீசனோ டாவி யெழிற்பாச மேன்மறைகள்
பேசக் குளிகையிடிற் பின்களிப்பு—நாசமே

தொட்ட களிம்பைத் துடைத்த குளிகையது
நட்டமுறு தாடகமாய் நண்ணியதா—விட்டமற்ற
பேதமே வாதமெனப் பேசுவார் தங்களுட
னீதமே நிதா நிலையென்பா—ளோதியதோர்
வேற்றுமல மாவி யிருபதியின் றம்முணர்விங்
கேற்றமாய்ப் பாச மிருங்கருவி—தோற்றியிட
வாவி யறிவா யருந்தியிடு மவ்வறிவு
மோவி யிடவெரியா வொண்டழல்போ—லாவி
யறிவாய் மற்றொன்று மறியாத தாகு
நெறியாமிவ் வாறொழுகி நிற்கை—பிறியா
வுயிருக் கானருளே யொண்புழுவை வண்டு
செயல்சேர்ந் தெடுத்ததெனச் சித்தைப்—பயின்றெடுக்கச்
சிவனதை நோக்கித் தெளிந்ததுவா யைந்தொழிலுந்
தாவிப் பேறிவுஞ் சார்ந்தகலா—மேவுமருண்
மிக்கோர் திரட்சி விரவுதலே முத்தியென்பான்
றக்க வறிவு தவறின்றி—யெக்காலு (௧௨0)
முப்பொருட்கு நிற்க மொழிகின்ற வாருயிர்க்குத்
தப்பறவே காணத் தகுமுறைமை—செப்பியிடி
லோங்கு மலவிருளுக் குற்ற கலைவிளக்காய்த்
தீங்குலகி லொன்றைத் தெளிவின்று—மாங்கதன்று
ஞானத்தாற் பேரின்ப நண்ணுவது மின்றாகு
மானத்தா லோரொருகான் மன்னுமெனி—னீனத்தா
மங்கத்தை யன்றி யறியா துயிருடலந்
தங்குமுயி ரன்றியொன்றுந் தானறியா—துங்க
வரற்கொன்றை வேண்டி யறியவேண் டின்றே
தரிக்குமனல் போலுயிரைச் சாற்றில்—விரிக்கும்
பொறியற்று லாவி புணர்ப்பின்று மீச
னறிவற்றார் தம்மையணை வானோ—நெறியுற்றங்
காற்றும் புழுவை யருங்குளவி தீண்டிலொன்றாய்த்
தோற்றுவது முண்டாமோ சொல்லுங்காற்—றேற்றரிய
வண்டு புழுவை மருவப் புழுவதுவாய்க்
கொண்டுநிற்க மந்திரமுட் கொண்டதுண்டோ—மண்டிப்
பிடித்ததனு லப்பேறு பெற்றதெனின் வண்டா
யெடுக்குமயிர்க் குட்டிக் கிசைந்து—நடத்துகின்ற
தாயாக வொன்றதனைச் சாற்றியிட லாயிடுமோ
மாயாப் பிறவி வழக்கதுவாஞ்—சாயாம (௧௩0)
லாயுங்கால் மோக மதுவாகு ஞானமின்றாய்
மாயு மெனமறுத்த வாறென்னை—யோயு

ழுயிரு முணர்வு மொருங்கொப்ப தன்றிச்
செயல்வண் டுருவுமதைச் சேர்ந்து—மயல்புழுவின்
னெஞ்சமத னேடுற்று நின்றமையா னீடுருவ
வஞ்சமே யுற்று மருவிடினும்—தஞ்சமெனும்
முத்தி தனிலறிவு மூளாமற் சாரூபந்
தொத்து தனுவதனைத் தோய்ந்ததற்பின்—பித்தனையுங்
கூறுகதி நோக்குங் குணமிலையான் முத்தியென்ப
தூறுடைத்தே யீசனரு ளுற்றவர்கள்—வேறுடைத்தா
மெல்லாத் தொழிலு மிரும்பே ரறிவுமுறச்
செல்லா வுயிர்செலவே சேருவதா—லில்லாத
வாவிக்கோ ரைந்தொழிலு மாவதெங்ங னுவிதொழின்
மேவும்போ தீசன் விடுவதுண்டோ—பூவிதனிற்
சூரியனுங் கன்க டிலங்கியதே யாவதல்லாற்
பாரி லிருளகற்றும் பண்புண்டோ—வோரி
லலகைதொடு மக்க ளலகையல்லான் மற்றோ
ருலகிற் புதுமை யுறுமோ—குலவிமிகுத்
தோங்குங் கடலை யுறுங்கடமே யாங்கதனை
வாங்கி நடத்த வழக்குண்டோ—வோங்குமரு (௧௪௰)
ளுற்றோ ரிடையி னுறுவரெனி னன்முத்தி
பற்றாது சாரூபம் பற்றுவதென்—குற்றமிலா
முத்தியெனி லவ்வறிவு முன்னவனும் பேரறிவிற்
றொத்துதலு மின்றியுருத் தோற்றுவதே—னித்தனருட்
பெற்றா ருலகிற் பெருஞ்சீவன் முத்தரென
வுற்றா ரெனமுத்தி யோதினரேற்—சொற்றவுரு
நீங்கினரோ நீங்காரோ வென்னி லிருவகையு
மோங்கினரேன் முத்தி யொழுங்கன்றே—தீங்ககன்ற
மாமாயை யீயவுரு மன்னுமெனி னெல்லினது
போமா றுமிதவிடு போனதன்பின்—றுமாறித்
தூய வரிசியெனுஞ் சொற்பெறும தேமுளைத்த
தாகி லுருவதனை யாய்ந்திடலாந்—தோயுமது
சாரூப மென்னிலைந்தாய்ச் சார்மலமு முண்டாகு
நோரகு மிவ்விதியை நெஞ்சதனி—னோராப்
பொறியின்றி யொன்றும் புணராத புந்திக்
கறிவென்பான் றன்னை யடேனென்பா—ணெறியின்பா
ஞாவி யவிகார மாயிருக்க வாயுவுடன்
மேவி நடத்தி விகாரமதாய்த்—தாவி
யெழுபிறப்புஞ் சார்ந்தங் கிருக்குநா ளீச
னழிவிலாச் சத்திநி பாதத்தா—லொழியமல (௧௫௰)

பேதித்தார் தங்களுக்கும் பின்னமறத் தம்பதியிற்
சாதித்தா ரார்க்குஞ் சரியெனுந் — வாதித்த
தீய மலமறுப்பான் சேர்ந்தார் தமக்கடிமை
ஐயமறச் சேர்ப்பா னவன். (௧௫)

எல்லார் நினைவுக்கு மேற்படி யேகருணை
நல்லான் பிரேரிக்கு நன்மைகேள் — பொல்லா
வினையிருத்து வார்க்கும் விரும்பியதோர் முத்தி
தனையிருத்து வார்க்குஞ் சரி. (௧௬)

எல்லார் நினைவுக்கு மேற்படி யேகருணை
வல்லான் றனுவினையை வைத்தநெறி — பொல்லா
மலமறுப்ப தாமால் வருநரக சொர்க்க
நிலையிருத்து வானே னினைந்து. (௧௭)

ஆவியின்மே லிச்சை யடைவதல்லா லாங்கதன்மேற்
கோபமே யில்லை குறிக்குங்கால் — மேவியதோ
ரன்னியத்தி லிச்சை யகற்றியறி வானந்தத்
தன்னியல்பே யாக்குதற்குத் தான். (௧௮)

மலமே யறியாமை மற்றுயிரைத் தீண்டு
நிலையே யதற்கிலவாய் நிற்கும் — மலையா
வறிவே யுயிர்க்காமா லாங்கதன்மே லேறும்
பிறிவதற்கா யுற்றதெண்டப் பேறு. (௧௯)

நின்மலமா யாவி நிகழ்மலத்தைப் பற்றுதற்கு
முன்மலமொன் றுண்டாய் மொழிவதாம் — பன்முதலு
முள்ளபோ தாவி யொருப்பட்டுப் பின்மலத்தைத்
தள்ளுங்கா னின்மலமாந் தான். (௨௦)

தண்டி மலமுயிரைத் தாவுமே லாவிக்குத்
தெண்டிப்பே யில்லையெனச் செப்புவதா — மண்டி
யுயிருக்கே புத்தி யுரைப்பதல்லாற் றீய
செயிருக் குரைப்பதில்லைத் தேர். (௨௧)

வசிப்புண்டார் தம்மை வசிக்குமலந் தேவாற்
றெசிப்புண்டா லாங்கவனைத் தீண்டா — நசிப்பில்லார்
கண்ணை மறைக்குங் கடிய விருட்கதிரை
நண்ணியகட் கின்று நவை. (௨௨)

மலமே தெனவேண்டா மற்றுயிர்மே னின்ற
புலமே லெழுந்தகெடும் பொய்யா—மிலமே
யிருந்தவத்தைச் செய்பாதே யேதேனு மீசன்
றருந்தவத்தை நெஞ்சே தறி. (௨௩)

அறியாமை யென்று மகன்றிடுதமா லாவி
பிரியாம னிற்குமதைப் பேறற்—குறியாக்
குணவோ டிசையினும்பின் றக்கவினை தானு
நினைவோ டிசையினுமா நேர். (௨௪)

ஆசைப் படுவாரை யாசைப் படுத்துவித்தல்
பேசு முலகியல்பின் பெற்றியான்—மாசுமல
முற்றாரைப் பற்றி யுறுவதல்லா லொவ்வாம
லற்றார்மேற் செல்லா தறி. (௨௫)

பித்தமுற்றார் தங்களுக்குப் பித்தகல நன்மருந்தை
மத்தகத்திற் றேய்த்து மறிப்பதல்லாற்—புத்திசொல்லி
மாற்றியபே ருண்டோ மலந்தவர்க ளாவியின்மேற்
றேற்றுவதே யில்லைத் துணி. (௨௬)

பிடித்தார் தமைப்பிடிக்கும் பேராச் சடமும்
விடுத்தார் தமைவிடுக்கும் வேறு—யடுத்தமலந்
தொட்டபேர் தம்மைத் தொடுவதல்லாற் றொல்லுயிரைக்
கட்டிப் பிடிப்பதில்லைக் காண். (௨௭)

சத்திநி பாதஞ் சதுவிதமாற் றியமல
முத்தியிலு நிற்கு முறையென்னிற்—சுத்தமான்
பாலே யெழுமவன்றன் பண்பா லறியாமை
மாலே யறுக்குமென மன். (௨௮)

மாசற்றார் நெஞ்சின் மருவு மானின்றும்
பாசத்தார்க் கின்றும் பதியென்னி—லீசன்
சரியாதி நான்கிற் றருமலமே கேடாய்
வருமா லிலையாய் மதி. (௨௯)

தீக்கைக் கொதுங்கிச் சிதைந்தமலந் தன்வசமே
யாக்குதலைச் செய்ய வறியாவா—நோக்கி
மலமே யுளதென்று மன்னுவதே யல்லாற்
பெலமேது மில்லையெனப் பேசு. (௩௰)

இருவினையு மொத்தா லிசைந்தவராற் கன்டு
மருவுதலா னன்றோ மலமா — னிருவினைக்குங்
கொத்த பிரார்த்தமாங் கூட்டுதலாற் றீயவினை
தொத்துதலே யில்லையெனச் சொல். (௩௧)

சேதித்த சேடஞ் செயற்படுத லங்கத்தை
வாதித்த நோய்மாறி வந்ததுவா — மாதித்தன்
முன்னிருள்போற் றீயமல முற்றுஞ் சரியாதி
தன்னிலையி னிற்பார்க்குத் தான். (௩௨)

ஒத்த மலத்தோ டுறுவாரைத் தீயநெறிப்
பெத்தரென்ப தாகப் பெறுவதாஞ் — சித்த
மலத்தை வெறுத்து வருமரனை நோக்கு
நலத்தாரை முத்தரென நாடு. (௩௩)

மலமுற்றா ரேனு மனனுமரன் பாத
நிலையுற்றா லம்மலமு நீங்கும் — புலமுற்றும்
பேதித்த மும்மலத்தின் பெற்றியறப் பெற்றியறச்
சாதித்தார்க் கில்லைமலந் தான். (௩௪)

சரியைக் கனுக்கிரக சத்திகா வாக
வரிசைத் தவத்தோடும் வைத்துத் — தெரிசிக்கு
வீசனே யாகு மெனுமுறைமை யெவ்வுயிர்க்கு
நேசமே யாகு நிறைந்து. (௩௫)

மலநாலத் தொன்றாக மாறும்பின் னீசன்
குலநாலத் தொன்றேற்கக் கூறும் — பெலமா
மிருவினையு மொப்பா மிசைந்ததனுப் போகந்
தருமாற்கே யாகத் தகும். (௩௬)

நின்ற மலமதனை நீண்டவரன் பாலன்பாற்
கொன்றிடுவ தென்றுங் குணமாமாற் — றன்றுஞ்
சரியாதி நான்கிற் றகுமரனே தானுய்
வரலா விலையா மலம். (௩௭)

சரியாதி நான்குந் தகுமலத்தை வென்று
வரவரவே சுத்தமெனு மாண்பாம் — புரையறவே
பொன்றாகி நிற்பா ருறுசிவமே யொத்தவர்பாற்
சென்றார்க்குத் தீர்க்குமலத் தீ. (௩௮)

தீக்கைக்குக் காலாகச் சிந்துமாற் றியமலம்
போக்குங் கொதுங்கிப் பொருந்திபதா— னாக்குமரன்
சேட்டையே மேலாகச் செல்லுங்கா லாங்கதுவு
மோட்டமே யாமா றுணர். (௩௯)

சுத்தமென நான்கினையுஞ் சொல்லியது நற்கருணை
யத்தன்மேற் பத்தி யடைதலாற்—பெத்த
மலத்தோ டிசைந்துநின்று வாழ்வார்க்காந் தீக்கைக்
குலத்தோரைச் சுத்தமெனக் கொள் (௪௰)

மலத்தார் தமக்காகு மன்னுயிரா ரந்த
மிலத்தா னரகசொர்க்க மேய்வா—நலத்தாகு
மீசன்பா னேக்கி யிசைவரர் சாலோக
நேசமே யாவார் நிறைந்து. (௪௧)

மலமொன் றகற்றப்பின் மற்றதெல்லா மீச
னிலையொன்ற தாகமிக நிற்கு—மலைவின்றி
யீட்டியவா றுகு மிறையெவர்க்குந் தியமலம்
வாட்டியவா றுகு மதி. (௪௨)

பெத்தமுத்தி யென்னப் பிறங்கு முருத்தன்மை
யொத்த படிகக் கொழுங்காகுஞ்—சுத்தம்
வரிற்போ தொளியாகும் வாராத போதிங்
கிருட்போத மாகுமென வெண். (௪௩)

ஆவி யிவையிரண்டு மல்லவாந் தியமல
மேவிப்போய்ப் பித்தாய் விளங்குதலாற்—றுவுமா
னெத்துச் சுதந்தரமா யொன்றுதலா லுண்மையுற்ற
சித்தமவ னுகுமெனத் தேர். (௪௪)

தத்துவமே விட்டார்க்குத் தத்துவமென் றம்மறிவை
யத்தனுக்கே யீந்தார்க் ககமேனுஞ்—சுத்த
னரனே யெனுமா லகன்றவுடற் போகம்
வருமே யவன்றன் மதி. (௪௫)

பெத்தருக்கே யாகும் பிராரத்தந் தியமலப்
பித்தே தனுவினையாம் பெற்றியாற்—சுத்தஞ்
சிவனே யெனுமாற் சிறந்தவுடற் போக
மவனே யெனும்வழக்க தாம். (௪௬)

பித்தமுற்றார் துப்த்தலந்தப் பித்தமாற் பேராத
சுத்தமுற்றார் துப்த்தனுமச் சுத்தமன்றோ—வொத்த
தொழிலனைத்து மாங்கவையே சொல்லியதோ ரீச
னெழிலனைத்துந் தானுமென் றெண். (சஎ)

பச்சிலையைத் தின்னும் பசும்புழுவைச் செங்குளவி
நச்சியிட வப்புழுப்போய் நண்ணியதா—லிச்சித்துத்
தோற்றுமிலை யுண்ணாத் துணியாது தொல்பிறவி
மாற்றியபேர்க் கிவ்வாறாய் மன். (சஅ)

வினையற்றா லங்கம் விடுவா மனுவாந்
தனுவுற்றா லவ்வினையைச் சார்வா—நினைவுற்
றரனுய்த் திரிவார்க்குங் காங்கரனே போகத்
தரமாற் கருணையுருத் தான். (சகூ)

ஊக்கிய காம முயர்சிவமா வுற்றதனுத்
தாக்குஞ் செயலே தரும்வாக்கா—னீக்குமல
வேதனையே மாற்றி விடுமால் மிகுங்கருணை
நாதனவன் றானே நமக்கு. (ருo)

ஊக்கிய காம முறுமிலமா வுற்றதனுத்
தாக்குஞ் செயலே தருமதற்கா—லாக்குமரன்
பேதமென நோக்கிப் பிறியுமாற் றீயமலப்
போதமென நெஞ்சே புகல். (ருக)

இருளி லெழுமொளிமற் றாங்கே யிருளும்
வருமொளிமேற் செல்லுதற்கு வாரா—வருளு
மலமே லெழுமலமு மாற்றியருண் மேலே
செலநினைவ தில்லையெனத் தேர். (ருஉ)

மலமகல மாயா தனுவகலுங் கன்ம
நிலையகலப் பூரணமாய் நிற்கு—மலைவறவே
போக்குதலைச் செய்வான்றன் பொன்னடிமே னின்றவர்மே
லாக்குதலைச் செய்யா னரன். (ருங)

மலமுற்றார் துய்ப்பர் மலமே மனுவா
நிலையுற்றா ருண்பர்மனு நீதி—யலைவற்ற
ஞானத்தார் துய்ப்பர் நயந்தவரு ணற்றனுவா
மானத்தா லொட்டியதோர் வாறு. (ருச)

பெத்தருக்கே யாகும் பிராரத்தம் போத
முத்தருக்கே யின்றாய் மொழியுநூல்—சித்த
மறியாமை மாற்றி யடங்குமான் முத்தி
பிரியாத நான்குமருட் பேறு. (௫௫)

முத்தருக்கே யாகு மொழியுப நுன் மந்திரமே
சித்தமான் பாலே செலுமதுவே—பொத்த
தனுவுமது வாகக் கருமமெய்ப் போக
மனுமே மதுவாமவ் வாறு. (௫௬)

மந்திரத்தை யுற்று வருத்தனுவை நீத்தோர்கள்
பந்தியா னகப் புகுமாமல்—வங்கனு
வாங்கவினை யாமா லதற்கிசைந்த போகமெலாம்
நீங்கா மலமறுக்கு நேர். (௫௭)

இருவினை யொப்பி லிசைந்தவுயிர் மாறி
வருமாற் றனுவினையவ் வாறு—மிருவினையுந்
சிக்கமுற்ற வாறே திரும்புமா லோர்பாத்தாய்
பெத்தமென்ப தல்லவெனப் பேசு. (௫அ)

ஒக்க பதத்தை யுறுவிக்குங் காபமாற்
சிக்கமலஞ் சங்கமமே தீர்க்குமா—லத்தமினன்று
மாவியெ நோக்கி யணையுமா லற்றுரை
மேவியே நிற்பன் விரைந்து. (௫௯)

ஈசனு மெல்லா வுயிர்க்குயிராய் நிற்பானு
மீசனுப் பூசைக் கிசைவானு—மீசனுச்
சாலோக மாதிப் பயனளித்து நிற்பானு
மாலோக லிங்கமென மன். (௬௦)

மனவாக்குக் காய மருவா வரனே
மனவாக்குக் காய மருவி—நினைவார்க்கு
மூவுருவே யாகி முதன்மைசிவ லிங்கமா
மேவுருவங் காண்கைக் கிசைந்து. (௬௧)

மந்திரமே யுற்று வருங்கருணை நன்மவுனத்
தந்திரமே யுற்றிருக்குந் தன்மையாற்—சிந்தித்து
வந்தார் தமக்கே வரங்கொடுத்து நிற்குமே
நந்தாக் கருணை நலம். (௬௨)

தெரிசித் தருச்சனையைச் செய்விப்பார் தங்களுக்கும்
பரிசித் தருச்சனையைப் பண்ணி—புரிசித்தி
யோகமே நோக்கி யுழல்வார்க்கு நன்முத்திப்
பாகமேயார்க் கும்லிங்கம் பார். (சுரு)

தானே சிவலிங்கந் தானுகுஞ் சற்குருவுந்
தானேநற் சங்கமமுந் தானுகு—மானமையாற்
றங்கு முயிரிற் றறித்த மலமாற்ற
வெங்குஞ் சிவமேயென் றெண். (சுச)

குருவே சிவலிங்கக் கொள்கையெல்லாஞ் சொல்லி
வருமா லிறையவன்பான் மாலாய்—வருமுயிர்க
டிய்ய மலமறுத்துச் செய்தியவன் பாலாகப்
பைய நடக்குமெனப் பார். (சுரு)

அங்க மலத்தை யகற்றியறி வோடறிவாய்த்
தங்கியதே சங்கமத்தின் றன்மையா—லிங்கந்
தனையே வழிபட்டுச் சாருமா லார்க்கு
நினைவே யதுவாமா நேர். (சுசு)

சங்கமமு மிக்க தகுங்குருவும் லிங்கத்தின்
சங்கமமே யுற்ற சதுரிஞ—லிங்கத்தை
வந்திப்பா ராஞர் வருமுலக மெல்லாம்பின்
சிந்திப்பா ராஞர் தெரிந்து. (சுஎ)

நோக்காற் பரிசத்தா னூலினுற் பாவனையால்
வாக்கான்மெய் யோகத்தான் மாற்றுவான்—மூக்குமல
மைந்தினையுஞ் சற்குருவே யாமா லறிவென்கை
சந்தயமே யின்றுகுந் தான். (சுஅ)

எல்லா வறிவு மிசைந்தவுயி ரோடிசைந்து
சொல்லாத போதெவர்க்குந் தோற்றுதா—நல்லசிவ
லிங்கமே நூலுரைத்து நில்லாதா நீள்கருணைச்
சங்கமத்துக் காகத் தகும். (சுகூ)

புத்திசொல்லிப் பொய்யதனைப் போக்கியதும் பூரணமா
மத்தன்மே னேசமுற வாக்கியதுஞ்—சித்த
மொருமித்தார் தம்மோ டுறைவதுவு முத்திக்
கருமத்தா னுற்ற கடன். (எ0)

12

ஆவிபே யிரசற் கருணருவே யாகுமெனக்
கூவுமறை யாகமத்துங் கொண்டதான் — மேவுஞ்
சிவனை யிவனென்று சிந்திப்பார் தாமே
யவனுவார் நெஞ்சே யறி. (எக)

உபதேசத் தானு முறுநூலி னானும்
பவதேச மாற்றுவிக்கும் பண்பாற் — சிவனேசர்
போலே யிருந்து பொருந்தியதோர் நிமலத்தின்
பாலே யுறுப்பன் மகிழ்ந்து. (எஉ)

ஆவி திரிந்தபடி யாகமா மாங்கதுபோன்
மேவும் வினைதிரிந்து வெற்றியாம் — பாவ
முறுவார்க்கு மந்திரத்தை யொன்றினர்க்கு ஞானம்
பெறுவார்க்கு மிவ்வாறும் பேறு. (எங)

ஆதலினுற் சங்கமத்தை யான்மாக்கள் போலேநீ
பேதமென வெண்ணிப் பிரியாதே — தீதகல
நோக்குமே யெவ்வுயிர்க்கு நுண்ணியகற் போதமதா
யாக்குமே நெஞ்சே யறி. (எச)

மலமகற்ற வீந்ததனு மன்னியதை யாங்கே
நிலையகற்றி நின்மலமாய் நின்று — மலைவறுக்கு
மீசனே டொன்று யிசையு மிருவினையு
மாசறுக்கு மற்றவர்நே ருற்று. (எரு)

இருந்த விடத்தங் கிருவினையு மாங்கே
வருந்தியதோ ரன்பாய் மருவித் — தருந்தவர்க்குத்
திய்யமல மறுக்குஞ் செய்தியா னற்கருணைக்
கையமிலை யென்றே யறி. (எசு)

மூவருவே யெவ்வுயிர்க்கு முத்தி யளிக்குமான்
மூவருவி லொன்றறவே முத்தியில்லை — மூவருவு
மீசனே தானு யெழிலா விழிவுயர்வு
பேசுதற்கே யில்லையெனப் பேசு. (எஎ)

ஆசையற்றார்க் குண்டோ வகத்துன்ப நல்லறமா
நேசமற்றார்க் குண்டோ நிகழ்சொர்க்கம் — பேசுமல
மற்றார்க்கு முண்டோ வனுகுமுடற் றீயகுல
முற்றார்க்கு முண்டோ குரு. (எஅ)

அறமுறைவார்க் கில்லைப்பொய் யாயிழைமேன் மோக
மறமுறைவார்க் கில்லையற மாண்பு—துறவுறையு
முத்தர்க்கே யில்லை மொழியுமுட னற்சிவமாஞ்
சித்தர்க்கே யாவியில்லைத் தேர். (எசு)

ஊனுண்பார்க் கில்லை யுயிரிரக்க மொண்பூசை
தானில்லார்க் கில்லைத் தகுங்கதிநேர்—கோனடியை
வந்திப்பார்க் கில்லை வருநிரய மாங்கவனைச்
சிந்திப்பார்க் கில்லைமலத் தீ. (அ0)

சாதியுற்றார்க் கில்லை தகுஞ்சமயஞ் சங்கமமா
நீதியுற்றார்க் கில்லை நிகழ்சாதி—பேதமற்ற
வங்கத்தார் தங்களுக்கங் காவியில்லை யாவியுறுஞ்
சங்கத்தார்க் கில்லையுடற் றான். (அக)

மனங்கவர்ந்தார்க் கில்லை வருந்துறவு மாயாச்
சினங்கவர்ந்தார்க் கில்லை தெளிவே—யனங்கனம்பிற்
புண்ணுற்றார்க் கில்லை புனிதம் பொருந்துமரன்
கண்ணுற்றார்க் கில்லைமதன் காண். (அஉ)

பொய்யுற்றார்க் கில்லை புகழுடம்பு போகத்தின்
கையுற்றார்க் கில்லை கருதுமற—மெய்யுற்றுக்
காமித்தார்க் கில்லையுயிர் காட்டாமன் மேலன்பைச்
சேமித்தார்க் கில்லைச் சிவன். (அஙு)

ஆசையுற்றார்க் கில்லை யருட்செல்வ மாங்கரன்பா
னேசமுற்றார்க் கில்லை நெடியமறம்—மாசற்ற
நெஞ்சினார்க் கில்லை நிகழ்குறைவு தீதைவிட
வஞ்சினார்க் கில்லை யரன். (அச)

திருவினை யுற்றார்க்குத் தீதில்லை செங்க
ணொருவனையுற் றார்க்குயர் வில்லைக்—குருவவனை
யையுற்றார்க் கில்லை யருளுடைமை யாங்கவன்றன்
மெய்யுற்றார்க் கில்லை வினை. (அரு)

கற்றவர்க்கே யில்லை கரிசறுத்தல் கற்றநெறி
யுற்றவர்க்கே யில்லை யுறுங்கரிசு—மற்றுடலைச்
சேதித்தார்க் கில்லைத் திரிமலமெய்த் தேவோடு
சாதித்தார்க் கில்லையுயிர் தான். (அசு)

ஜீவனுற்றார்க் கில்லை சிவமச் சிவமென்னுந்
தேவனுற்றார்க் கில்லையந்தச் சிவனென்கை — யாவதனு
லங்காங்கி யாக வடையு முயர்பிழிவா
மங்காதே வைக்கும் வரம். (அஎ)

வாளுற்றார்க் கில்லை வருங்கருணை மன்னுதவக்
கோளுற்றார்க் கில்லை கொடுங்கோபம் — வேளுற்ற
நெஞ்சினார்க் கில்லை நிகழ்மரபு நிதைவிட
வஞ்சினார்க் கில்லை யறம். (அஅ)

மரத்தி னுருவமைக்க மாறு மரத்தைக்
கருத்தி லமைக்கவுருக் காணாத் — திருத்துமரன்
காணுங்கா லாவியினைக் காணுமெய் யாவியினைக்
காணுங்காற் காணா தரன். (அகூ)

சித்திரமு நற்சுவருஞ் சேருங்கா லொன்றாநற்
சித்திரமே காட்டாதிச் சேர்சுவரைப் — புத்திதனைத்
தேற்று மரனே செலுமுயிரைக் காட்டாமற்
றோற்றியவா றென்னத் துணி. (கூ௰)

இரும்பினைப்பொன் னாக்கு மியைந்த குளிகை
திரும்பியிரும் பாக்குதலைச் செய்யா — விரும்புமலம்
போக்குவதே யல்லாற்பின் போனதனை யாருயிர்மே
லாக்குதலைச் செய்யா னரன். (கூக)

சித்தாந்தசிகாமணி முற்றியது.

திருச்சிற்றம்பலம்.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

அம்பலவாணதேசிகர் அருளிச்செய்த

# உபாய நிட்டை வெண்பா.

கற்றுடலற் றேயுயிரைக் கண்டருள்கொண் டேயானைப்
பெற்றனமெய் யம்பலவா ணன்பெருமை — யுற்றநலப்
பண்பா வடுதுறைச்சீர் பன்னு முபாயநிட்டை
வெண்பா வுரையை விரும்பி.

---

தொந்தித்த காயந் தொலைவதற்கு முன்னுயிரைச்
சிந்தித்தார்க் கன்றோ திடமாகுஞ் — சந்தித்த
தோலோ வெனும்போ தொகுத்ததனை தானோவென்
றாலோசித் தார்க்கறிவே யாம். (௧)

அங்கத்தை நோக்கி யடுத்ததனை தோலெனும்பாம்
பங்கத்தைத் திதென்னப் பார்ப்பாரேற் — சங்கத்தை
யற்றாரே பூரணமா யானவரன் றாளுணரப்
பெற்றாரே யில்லைப் பிறப்பு. (௨)

கண்ணொன்று மூக்கென்றுங் காதென்று நின்றதனு
வெண்ணொன்றி நின்றங் கிசையாவாங் — கண்ணொன்றி
நோக்குவதே யாவியென நுண்ணறிவா லெவ்விடத்து
மாக்குவதே யாவிக் கணி. (௩)

கண்ணே யொருபொருளைக் காணிற் கலந்தொன்றா
யெண்ணுவான் றன்னை யிழந்ததுவாங் — கண்ணினாற்
பூணு மொருவனையே பூணி னவனாகக்
காணும் பொறியாகுங் கண். (௪)

ஊனு முயிரு மொருங்கொப்ப நிற்பினு
மூனுயிரை நோக்கா வொழுங்கன்றோ — வூனைக்
குறித்தறிவை நோக்கிக் குறியா வறிவாற்
பறித்தெறிவ தன்றோ பயன். (௫)

உயிரு முடலு மொருங்கொப்ப நின்றுங்
குயிருடலை நோக்கி யுறுமா — லுயிர்தான்
பிடிக்குங்கா லொன்றாய்ப் பிடிக்கும்பின் போந்து
விடுக்குங்கால் வேறாய் விடும். (௬)

அறிவாற் பிறியு மறியாமை யாலுஞ்
செறிவாந் தனுத்தெசிக்கத் தேரின் — பிறிவான்
மனமிடைய வாக்கை மனுவாங் கருவி
தனுமிடைய வாவி தரும். (௭)

தன்னைத்தா னென்றான் றருமுடலைத் தானென்பான்
பின்னற்றாற் செத்த பிணமென்பான் — முன்னத்தாற்
சேட்டிக்கு மாவி செயற்படுவ தங்கமென
காட்டிகையா லாவியென நாடு. (௮)

மருவுந் தனுவதனை மற்றுயிர்மேல் வைத்த
தெரியும் பொருளைத் தெரியத் — தெரியாத்
தனுவனைத்து நோக்கித் தருமுயிரே தானு
வினையனைத்து நிற்கும் விரைந்து. (௯)

கருவி யனைத்தினையுங் காணுங் கருவிக்
கொருவ னிவனெனவு மோரார் — மருவுங்
கருவியே தானாய்க் கலந்தொன்றாய் நிற்கு
மருவுமுயிர்க் குற்றதோர் மாண்பு. (௰)

புலமனைத்து நின்று பொருந்தியுமற் றன்னைத்
திலமளவுங் காணத் தெரியா — மலமனமே
யங்கமே பொய்யா யகன்றபோ தாவிதன்
சங்கமே யாகத் தரும். (௰௧)

ஓட்டி யறிவை யுறுமுடலைப் பேதமென
வாட்டியபேர்க் காவி வளமாகு — மூட்டிக்கை
வித்தாரஞ் செய்து வெறும்பிணத்தைத் தானாக
வைத்தார்க் குயிரேன் வரும். (௰௨)

மனவாக்குக் காயத்தை மன்னியபின் னல்லாற்
றனியே யறியத் தகாதான் — மனவாக்குக்
காயத்துக் கெட்டாக் கருதியதோர் பூரணமா
மாயமே யாவியென மன். (௰௩)

உறையுந் தனுவி லுறையு முயிர்க
னிறைவை யறிந்தொருகா னில்லா—வுறையுமுடற்
சேட்டையல்லான் மற்றுயிரின் சிவகமே யில்லையெனக்
காட்டுகையா லாவியிலைக் காண். (௧௪)

சீவிக்குங் காயஞ் செடமாமாற் சிவகத்தை
யாவிக்கு நன்கா யமைப்பதல்லாற்—சீவிக்குங்
காயமே தானாக் கருதியவா றெல்லாம்பொய்
மாயமே யென்ன மதி. (௧௫)

ஆவியென வேறோபொய் யாக்கையே தானாக
மேவியதே யன்றோ விளம்புங்கா—லோவியம்போ
னீக்கித் தனுவை நிகழறிவைப் பூரணமா
யூக்குவதே யாவிக் கொழுங்கு. (௧௬)

ஒன்றித் தனுவை யுறுமதனைப் பேதமெனக்
கொன்றுயிரை வாங்கல் குணமாகு—நன்றிதனைக்
குற்றார் தமக்கே யுறும்புத்தி யொவ்வாம
லற்றார் தமக்கேத மாம். (௧௭)

சோதிக்க காயத் துடக்கற்றாற் றொல்லைமலஞ்
சேதித்த தாகுமெனச் செப்புநூல்—பேதித்த
வாவியே தானா யடையு மரனடியு
மேவியே நிற்கும் விரைந்து. (௧௮)

அளந்துடலை நோக்கி யறிவின்வாட் பூட்டிப்
பிளந்ததனை யாங்கே பிரித்து—வளர்ந்ததனைச்
சுட்டா நிராமயமாய்த் தோன்றாத வின்பமதா
யெட்டாத பூரணமென் றெண். (௧௯)

அறியு மறிவே யறிவறிய நிற்கும்
பொறியும் பொருளும் பொருந்தச்—செறியுமான்
காட்டியவா றென்னக் கருதி யறிவதனை
யீட்டியவா றன்றோ வியல்பு. (௨௰)

வாக்குமனக் காய மருவா வறிவுபொய்
யாக்கையின்பா லுற்றங் ககப்பட்டா—னீக்கித்
தெரிசித்துத் தன்னைத் திகழ்பரத்தோ டொன்றாய்ப்
பரிசித்த லன்றோ பயன். (௨௧)

அறிவாற் பலகாலு மாராய்ந்து பார்த்துப்
பிறிவாற் றனுவைப் பிரித்துக்—குறியா
மறிவோ டறிவா யடங்குவதே முத்தி
நெறியாகு மென்ன நினை. (௨௨)

சேமப் படுத்திமலஞ் சிற்றுயிரைத் தன்னெறியிற்
காமப் படுத்தியொன் றுங் காட்டாதாற்—றிமை
விளையுந் தனுவினுக்கு வேறா யறிவோ
டளையுமே லாமாம் விடு. (௨௩)

தன்னைத்தா னென்றுந் தருமுடலைத் தானென்னச்
சொன்னத்தாற் றீதனைத்துந் தோற்றியதாற்—றன்னை
யறியுமா றெவ்வா றகன்றவுடற் றன்னைப்
பிரியுமா றுமாற் பெறும். (௨௪)

அகமோ புறமோ வகம்புறமோ வாவி
செகமோ தனுவினுக்குத் தேரி—னிகமே
பிரியாத் தனுவைப் பிரித்தறிவை நோக்கி
லறிவா யகப்புறமே யாம். (௨௫)

அகமேற் றனுவோ டழியு மகத்தின்
புறமேற் பொறிவழியிற் சோரா—வுறுமாறே
டத்துவித மாமா லானிறைவோ டொன்றாக
வொத்ததுவாய் நிற்குமென வோர். (௨௬)

யானென்ற காய மெனதென்றால் யானென்னுந்
தானிற்கச் செய்யத் தகுமன்றே—வூனின்று
பற்றறவே விட்டறிவாய்ப் பார்க்கினிரா தாரமா
யுற்றதுவே யாகுமென வோர். (௨௭)

எங்கு மிருக்கு மிசைந்ததனு வோடிசைந்து
தங்கி யறியத் தகுவதா—மங்குமுடற்
சேதித்தா ரன்றோ திருவருளோ டத்துவிதஞ்
சாதித்தா ரென்னத் தகும். (௨௮)

பேதித்துக் காயத்தை பின்னமற வெவ்விடத்துஞ்
சாதித்தான் முத்தித் தகைமையாஞ்—சேதித்த
வங்கத்தாற் செய்ததவ மத்தனையு முத்திபதச்
சங்கத்தா லாகத் தகும். (௨௯)

பொறியனைத்து மொன்றைப் புணராமற் றாவி
யறிவனைத்து நோக்கி யணையும்—பொறியனைத்து
மற்றார்க்கே யத்துவித மாகுமா நற்றவதனைப்
பெற்றார்க்கே முத்திபதப் பேறு. (௯௰)

சாக்கிரத்தோ டஞ்சவத்தை தானுவர் தம்முடம்பை
நீக்கியபே ரன்றோ நினையுங்கால்—றாக்குஞ்
சரியாதி மூன்றிற் றகும்பதத்தி னிற்போர்ப்
பிரியா வுடல்பிரியாப் பேர். (௯௧)

பெத்தருக்கே காயமெனப் பேசிச் சமயநெறி
முத்தருக்கே யின்றாய் மொழியுமாற்—சத்தியமே
மந்திரமே தேகமென மன்னியது மாவிக்குப்
பெந்தமே யாமாற் பிழை. (௯௨)

அத்துவா வாறி னமைந்ததான் மந்திரத்தைச்
சித்தத் தயலாய்த் தெசித்ததா—முத்தர்
நிருமலமே தானாய் நிகழ்சிவமே யாமா
லொருமலமு மில்லையென வோர். (௯௩)

காயமுயி ரென்னக் கருதுங்காற் பேதமாந்
தோயுங்கா லொன்றாகத் தோற்றுமாற்—காய
நடையொருகா லாவி நடையொருகா லாகத்
தடையெடுத்து நிற்கத் தகும். (௯௪)

ஊனாய்த் திரிந்தங் குழலுமொரு கான்மனுவே
தானாய்த் திரியத் தகுமொருகாற்—கோனாகு
நேயமே தானாக நிற்குமொரு காலுயிரின்
காயமே லுற்ற கடன். (௯௫)

ஆகந் திரியாமெய் யாவியல்லா லங்கத்துப்
போகந் திரியாப் பொறியல்லான்—மோகநிலை
யாவியே சென்றங் கடையுமே லெவ்விடத்துந்
தாவியவை யாகத் தகும். (௯௬)

ஆவி தனுவை யடையுங்கா லாவியற
மேவித் தனுவாய் விளங்குமா—லாவியினை
யாக்கையே சென்றங் கடையுமா லாக்கையறத்
தாக்குமது வாகத் தகும். (௯௭)

பூணுந் தனுவே பொறிக்கிடமாம் பொய்யிதெனக்
காணுமவர்க் கவ்வாறே காண்பதுவாம் — வீணுந்
தனதாகி நிற்குந் தகுதியோர் தங்கள்
மனதாகி நிற்கு மதி. (௩௮)

மலமடைய மாயா தனுவிளையு மந்த
மலமிடையக் காய மனுவா — நலமுடைய
வாக்கைபறக் காய மருட்டனுவா மோர்தனுவிற்
றாக்கியமெய்ப் பாவகத்தாற் றான். (௩௯)

ஆகமற்ற தாலனைவ தாகுமா னுமல
பாகமுற்றான் மந்திரத்தின் பண்பாகுந் — தேக
மனுவாற் றுறந்தறிவின் மன்னுமான் ஞானத்
தனுவாகு மென்னத் தகும். (௪௰)

ஆவி தியானத் தடங்காவா மாங்கரணத்
தாவி மனமுஞ் சருவாவா — மேவு
முடலகலத் தோற்று முயிரா னுயிரின்
கடனகலத் தோற்றுமான் காண். (௪௧)

அங்கத்தார்க் காகு மரிய தியானமலப்
பங்கத்தை மாற்றுதற்குப் பாங்காகுந் — தங்கக்
கருமி தொழிலோடுங் காண்பான்மெய்ஞ் ஞானத்
தருமியுறு ஞானநூற் றான். (௪௨)

கருமி தியானங் கருதியதும் ஞானத்
தருமிநூ லோதுந் தருக்குந் — தெரியுங்காற்
சாலோக மாதிப் பதநோக்குஞ் சற்குருவா
னாலோது வார்க்கறிவே நோக்கு. (௪௩)

நாட்டமற்றா னங்கவன்போ னாட்டமற்றார்க் கேமதியைக்
காட்டியது மன்றோவக் கண்ணுடையா — னாட்டமற
வந்தார்க்குக் காட்ட வழக்குண்டோ ஞானத்தை
நந்தா தவர்க்குரைக்க நன்று. (௪௪)

நாட்ட மிருவருக்கு நன்றுமென வெண்மதியைக்
காட்டாமற் றானே கருதுபா — னாட்டம்
பிரிந்தான்மெய்த் தோற்றத்துப் பின்னொருகாற் பெற்றுத்
தெரிந்தான் றெரிவே துரை. (௪௫)

சீவிக்குக் காயஞ் சிவனலவே யென்னுமலப்
பாவிகட்கிந் நூலைப் பகராற்க—மேவு
முயிரே செயலற் றொடுங்கும்போ தீசன்
செயலென்பார்க் கேயுரைக்கச் செய். (௪௫)

நூற்சிறப்பு.

உபாயநிட்டை வெண்பா வுரைத்தானற் பத்தா
றுபாயநிட்டை வாராம லார்க்கு—முபாயநிட்டை
வெண்பாவா லாவடு தண்டுறையை வெஃகினர்க்கு
நண்பாகு மம்பலவா ணன்.

உபாய நிட்டை வெண்பா முற்றியது.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அம்பலவாணதேசிகர் அருளிச்செய்த
# நிட்டை விளக்கம்.

நெஞ்சே யுனையிரந்தே னியம் பலவாண
னெஞ்சா வடுதுறைமெய் யின்பருளச் — செஞ்சொல்புனை
நிட்டை விளக்க நினைதலினு லெப்பிறப்பு
மிட்ட முனைப்பெறவென் றெண்.

கட்டளைக்கலித்துறை.

ஆட்டி மவுனியை யார்ப்பரித் தோங்கி யடித்துக்கைகா
ணீட்டிக் கிடப்பது நிட்டைய தோநிலை யாத்தனுவை
யோட்டிநின் பாதத் தொடுக்கி யுயிரையு நீயெனவே
நாட்டிய வம்பல வாணு திருத்தில்லை நாயகமே. (௧)

ஓங்கிய நெஞ்சத் தருளோ ருருவைத்தங் குற்றமல
நீங்கிய தன்றுபொய் யெல்லா மகல நிருமலத்தே
தேங்கிய தன்று சிவமே வருமெனச் செய்கையறத்
தூங்கிய வாறென்கொல் தில்லையு ளாடிய துய்யவனே. (௨)

அரனே ருறினுடற் சோகம தென்னி லகத்தினுநீ
வரினே தனுவு முளதாய் மயக்கும் வருவதின்றும்
பரனே மலமற நின்றுவி பற்றிப் பசுப்பரமாய்த்
தரினே சிவமென்னு மம்பல வாதில்லைச் சங்கரனே. (௩)

வருத்துந் தனுவினை யோரிட மாக மனஞ்சுருக்கி
யிருத்த வருமரு ளென்மன நோக்கி யிருத்துதற்கோர்
கருத்தனும் வேண்டும்பின் னீங்குதற் கோர்வினை காண்பதுண்டாங்
திருத்தியல் பாகவென் னம்பல வாதில்லைச் சிற்பரனே. (௪)

தெரிசித்த லர்ச்சித்தல் சிந்தித்தல் மூன்றுந் திகழ்பதத்தைப்
பரிசித்த ஞாலினைப் பார்த்தல்சன் மார்க்கமிப் பண்பதற
வருசித்து மற்றக் காண மடக்க வருஞ்சிவமென்
அருசித்த வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௫)

மாயஞ் சிறிது மடியமுற் பாதத்தின் மன்னுநின்பாற்
றோயச் சிறிதங் கறிவுள தாகுந் துடர்ந்துமற்றும்
பாயப்பொய் மாயம் பறிந்தறி வாய்நிற்கும் பண்பதென்றுற்
வாக மயக்கென்கொ லம்பல வாதில்லைக் கண்ணுதலே. (௬)

இருக்குச் சிறிதுமுற் பாதத் தருவருட் சிந்தையுற்றங்
குருக்குஞ் சிறிதுபின் மற்றவை யோங்கி னுளங்குழைவாய்ச்
செருக்க வுருக்கும தென்றாற் றனுமையல் சேருமெனப்
பெருக்கிய வாறென்கொ லம்பல வாதில்லைப் பெற்றியனே. (௭)

மலம்பரி பாக முளதாஞ் சரிதையு மற்றதுபோற்
செனும்பரி பாகங் கிரியையும் யோகமுந் தீமையறச்
செனும்பரி பாகமெய்ஞ் ஞானமு மிவ்வண்ணஞ் சேருமென்றாற்
புனுங்கர ணங்க ளடக்குவ தென்றில்லைப் புண்ணியனே. (௮)

ஒருக்குமை யற்சிறி தேயுறும் போதத்தி னுற்றதன்பாற்
றரிக்குஞ் சிறிதன்பு மற்றந்தப் பாதத்துந் தங்கியன்பு
பெருக்குமெய்ஞ் ஞானத் தவவாற்றிற் சிவனும் பேரன்பென்றாற்
றருக்குங் கரண மயலே துரை தில்லைச் சங்கரனே. (௯)

அவமே சரிதை புரியிலஞ் ஞான மவனியறத்
தவமே சரிதை புரியின்மெய்ஞ் ஞானமித் தன்மையறச்
சிவமே யுறுஞ்செய லெல்லா மறவெனச் செப்புமைய
னவமே துரை தில்லை யம்பல வாதில்லை நாயகமே. (௰)

சத்திநி பாதஞ் சதுவிதத் தாற்பொய்த் தகுமலத்தின்
பித்த தகல்வது நால்வகைத் தாம்பிரி யாதவினைக்
கொத்த தகல்வது மவ்வகைத் தாமாற் கொடுங்கரணச்
சித்த மொழிப்பதென் னம்பல வாதில்லைச் சிற்பரனே. (௰௧)

மரணந் தவிர்க்குஞ் சரியாதி நான்கும் வருமறிவுன்
சரணம் புகிற்றனுத் தான்புகுந் தச்செயல் சாருமென்றார்
கரண மடக்க வருமரு ளென்றுன்னிக் காத்திருக்கு
முரணே துரையெனக் கம்பல வாதில்லை முக்கணனே. (௰௨)

சரியாதி நான்குஞ் சதாசிவத் தோங்குந் தகுதியன்பு
விரிசா தகஞ்செய்ய வேண்டுந்தக் கோர்கள் வெகுண்டுநிட்டை
வருசாத காவிங்க மாருக நோக்கி வருவரென்னு
மொருசா தகமென்கொ லம்பல வாதில்லை யுத்தமனே. (௰௩)

துறக்கும்பொய் வஞ்சஞ் சிறிதே துறந்துன் றுணைமலர்த்தா
ணிறைக்கும் வகைசிறி தேநிறைத் தேற நிகழ்சரிதை
பிறக்கும்பின் மற்றவை பேரன்பென் றானுனைப் பெற்றுமங்தோர்
வெறுக்கும் பசாசருக் கென்சொல்லு கேன்றில்லை வேதியனே. (௰௪)

பித்தனித் தம்பிர வஞ்சமென் றோடிப் பிணியொதுக்கி
யத்தனித் தன்னென் றறிவதற் கோவென் னகத்தினுள்ளே
சத்திநி பாத முதித்ததங் கோதனுச் செய்கையற்றுச்
சித்தமும் பித்துறு தற்கோசொல் தில்லைச் சிதம்பரனே. (௧௫)

மாயகட் போரையு மாயா மலமென்னும் மாதரையும்
வீயவிட் டோடி வெளியே புறப்பட்டு மெய்யருளாந்
தாயுடன் சென்றுபின் றந்தையைக் கூடிப்புன் றாயைமறந்
தேயு மதேநிட்டை யென்று னெழிற்கச்சி யேகம்பனே. (௧௬)

என்னிச்சை யுன்னேன் றுருமிச்சை யுன்னிச்சை யேமலத்தின்
றன்னிச்சை யுன்னிச்சை யென்னிச்சை யாகத் தருவதுண்டே
லன்னிச்சை நீயற் றருளிச்சை யாக வடையுமந்த
மன்னிச்சை யேநிட்டை யென்றுன் சிவாயநம் மன்னவனே. (௧௭)

நீறாட் டியானித் திடினு முடனுயிர் நீதிசற்றுங்
காணார்கள் மூடப் பயனென்கொ லோகலை யாலருளைக்
கோணா துணர்த்துங் குருவே யறிவைக் கொடுப்பனின்ப
நாணா திருநிட்டை யென்றுன் சிவாய நமகுருவே. (௧௮)

உருவே தியானித் துறுவர்கள் மூடி யுறுமுடலின்
கருவே தியானித்துக் காண்பதுன் டோகலை யாலுணர்த்துங்
குருவே யறிவைத் தருவ னிமையினைக் கூடலின்றித்
தெரிவே தெரிநிட்டை யென்றுன் சிவாயமெய்த் தேசிகனே. (௧௯)

ஓவிய மேதனு வுற்றோ ருயிர்க்கு முவமையின்றாற்
பாவிய மேதனு வாமான்மெய்ஞ் ஞானம் பகர்ந்தநன்னூ
லாவிபை மிக்க சிவத்தோ டழுத்துமவ் வாறதுறத்
தாவிய தேநிட்டை யென்றுன் சிவாயமெய்ச் சற்குருவே. (௨௰)

பிறிவே பிறித்துப் பிறியா வறிவெனும் பெற்றிதந்த
செறிவேகன் மூடத் தியானித்த லோசொல்லு சேர்ந்தநன்னூ
லறிவே யறிவை யறிவித்து நற்சிவ மாக்குமின்ப
நிறைவே தருநிட்டை யென்றுன் சிவாய நெடுந்தகையே. (௨௧)

உறவே யறிவறி வேயுடம் பாகு முடம்புஞ்சுட்டி
யறவே யுயிரினு மாவியு மாமரு ளோடுறையு
நிறைவே தியானித்து நிற்பது வோசொல்லு நீயிதனை
பெறுவே பெறுநிட்டை யென்றுன் சிவாயநம் மன்னவனே. (௨௨)

முகத்தே யிருகண் மறைக்கமெய்ஞ் ஞான முளக்குங்கண்கள்
பகுத்தே நடக்க வருண்மாயு மென்பது பாவமெய்ந்நாற்
செகத்தே பிரித்தங் கறிவறி வாக்கிச் சிவத்தைநல்கு
மகத்தே விடுநிட்டை யென்றான் சிவாய வருட்குருவே. (௨௩)

பொன்னேர் கனிநிறம் பூணும் பொறிபொன்று பூண்டுசுவை
தன்னை யறிவொன்று தானென் றுவமை தகாசிவத்தி
னன்னை யறியு மறிவொன்று தம்மு ளயப்புமொன்றாய்ச்
சொன்னை ரிடனிட்டை யென்றான் சிவாயமெய்த் தூயவனே. (௨௪)

அறிவே யறியி லறிவனு போக மறிவுளரு
ளுறவே யறியி லுறவனு போக முயர்சிவத்தி
னிறைவே யறியி னிறையனு போக நிலைமையொன்றாய்ச்
செறிவே யிதுநிட்டை யென்றான் சிவாயமெய்த் தேசிகனே. (௨௫)

சொலவே யறிவு விளங்குமெஞ் ஞான்றுஞ் சொலவுசொல்லித்
திலவே பகுத்தறி வின்றா யிருந்த படியிருக்கும்
வலவே ருரையை மருவமெய்ஞ் ஞான மருவுந்துன்ப
மலவே யிதுநிட்டை யென்றான் சிவாய வருட்குருவே. (௨௬)

ஆவியைக் காயத் தடக்கியஞ் ஞானத் தழுத்திமலை
மேவிய தாலதை மாற்றிமெய்ஞ் ஞான மருவவங்க
மோவியன் கைவழி யோவியம் போலவொன் றாகியுற்றுத்
தாவிய தேநிட்டை யென்றான் சிவாயமெய்ச் சற்குருவே. (௨௭)

சொக்கிட் டரமனை புக்குட் டிருடிய துட்டர்வந்து
திக்குற்ற மன்னரைக் கேட்பது போற்சிவ நிந்தைசெய்து
மிக்குக் குருலிங்க சங்கம நிந்தித்து விடிச்சிக்கு
மெக்குப் பெருந்தவர்க் கென்சொல்லு வேன்கச்சி யேகம்பனே. (௨௮)

---

நிட்டை விளக்க நிகழ்ருபா னெட்டையுநஞ்
சட்ட மறுப்பதற்காய்ச் சாற்றினன்—சிட்டன்
றிருவா வடுதுறையான் சென்றடைந்தார்க் கெல்லா
மருளாகு மம்பலவா ணன்.

நிட்டை விளக்கம் முற்றியது.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## அம்பலவாணதேசிகர் அருளிச்செய்த

# உபதேச வெண்பா.



உரைத்த கருணை யுபதேசந் தன்னை
விரித்தொரு பாவில் விளக்கக்—கருத்துவர
லொத்தாசை நீயே யுணர்த்தா வடுதுறையென்
னத்தா நமச்சிவா யா. (௧)

முத்திக்கு மூல மொழியுங் குருக்கிருபை
பத்திக்கு மூலம் பகருமன்பு—புத்திக்கு
மூல மரனெவர்க்கு மூலமே யென்றறிவிற்
சாலமதிப் பாரே தவர். (௨)

புற்றரவே யாடும் புகழ்மந் திரத்தார்முன்
மற்றரவுக் காட மதியுண்டோ—சற்குருவை
யொட்டி நடக்கு முயர்தவர்க்கு மொவ்வாமல்
விட்டுநடப் பார்க்கும் விதி. (௩)

நீரரவு மந்திரத்தி னில்லாது நீதியல்லாப்
பார்நருக் குண்டோ பரமகுருச்—சீரருளைச்
சிந்தித்தார்க் கன்றோ சிவஞானஞ் சற்குருவை
வந்தித்தார்க் கன்றோ வரும். (௪)

அரியைப் பதியென் றறிவிப்பார் தம்மைப்
பிரிவித்தார்க் கன்றோ நற்பேறும்—பெரியவரன்
பாதத்தின் மோகப் படுவாரை நீத்தரியைப்
போதித்தார்க் கேநிரயப் போக்கு. (௫)

தேமருவு காமச் செயலிரண்டாஞ் செல்புத்தி
காமரையே நீத்துக் கருதுமுத்தி—காமரையே
யுற்றார் தமக்கே யுறுமுத்தி நீத்ததனைப்
பெற்றார்க்கு முண்டோமெய்ப் பேறு. (௬)

ஆகமல பாகமே யானுலு மாகத்தின்
மோகமரன் பாலாக முற்றுமாற்—றேக
மொருவடிவே யானுலு முற்றவிகற் பத்தாற்
றிருவேட மீசனெனத் தேறு. (௭)

அங்கமே பொல்லா வவத்தமா மாவிபொய்
யங்கமே யல்ல வறிவாகு—மங்கத்தை
மாற்றினார்க் கன்றே மதியாகு மையனுற்றுத்
தேற்றினார்க் குண்டோ செயல். (௮)

பற்றற்ற கண்ணே பசுவிளங்கு மேலருளைப்
பற்றுதலா லந்தப் பசுவுமறுங்—குற்றமற்ற
முத்திக்கு முண்டோ மொழியு முடல்விகற்பம்
புத்திக்கே வாய்க்கும் பொருள். (௯)

எனதென்று மில்லத்தை யானென்றுங் காய
மனதொன்றித் தன்றே மலத்தா—னினைவொன்றி
யங்க மெனதா யடைந்தபோ தன்றேமெய்
தங்குமரு ளாகத் தரும். (௰)

யானென்ற காய மெனதென்ற போதுமலந்
தானகன்ற தன்றே தரிக்குங்கா—லூனகன்ற
வாவியே நேய மடையு மலாதார்க்குப்
பாவிப்ப தன்றே பயன். (௰௧)

காயமே தானய்க் கருதும்போ தாவிமல
மாயமே யல்லாது மற்றுண்டோ—காயந்
தனதாகும் போது தகுமுயிரு மொன்றாய்
நினைவாகு மன்றே நிறைந்து. (௰௨)

யானென்றுங் காய மெனதென்றும் பேதித்து
மூனொன்றி நிற்கு முபிரன்றே—தானொன்றி
னில்லாத போது நிறைவாக றன்னியல்பா
மில்லார் பொதுவியல்பென் றெண். (௰௩)

சாயத்தை யேற்ற தகும்பளிங்கு போலங்க
மாயத்தை யேற்ற மதியன்றே—காயத்தை
நீத்தபோ தன்றே நிறைவா நிகழ்சிவத்தை
யார்த்தபோ தன்றே வவர். (௰௪)

சிவிக்குங் காயஞ் செயலற்ற போதன்றே
வாவிக்குத் தன்னியல்பே யாகுமாற்—றவனையே
யொட்டியபேர்க் கோமுறுகிட் டட யொவ்வாமற்
றெட்டியபேர்க் குண்டோ சிவம். (௰௫)

அகளத்தை மற்ற வகளத்தா ரல்லாற்
சகளத்தார் சாரத் தகுமோ—வகள
நிராமயமே யாமா னிராமயற்கே யல்லாற்
பராவமுத மாகப் படா. (௰௬)

உடற்பகுதி மற்ற வுயிர்ப்பகுதிப் பேதந்
திடப்பட்டார் முத்தித் திறத்தார்—விடப்பட்ட
வங்கத்தை யோட்டி யறிவார் பதமுத்திச்
சங்கத்தா ரென்னத் தகும். (௰௭)

வாதித்த காயத்தை மாற்றும வாசிரியர்
போதித்த தெல்லாம் பொதுவியல்பாம்—பேதித்த
வங்கத்தை மாற்று மனுக்கிரக ஞானத்தின்
சங்கத்தா ருற்ற சதுர். (௰௮)

இயல்பு பொதுவா யிசையும்போ தாவி
யபலே மபலா யடையு—மியல்புநிலை
தன்னையே நோக்கிற் றடித்தமல மத்தனையு
மன்னியமே யாக்கப் படும். (௰௯)

கேட்டலொரு நான்குங் கிடைத்தபேர்க் கேகருணை
வீட்டை யடைதல் விநோதமா—மாட்டாதார்
வீட்டை மருவ வெறுநிட்டை செய்வதங்கச்
சேட்டையென்ப தன்றோ திடம். (௨௰)

சரியை கிரியையெனத் தங்கு மிரண்டு
னுரியதொரு போக மொடுங்குந்—தெரிய
வருமவர்க்கே யெல்லா மதியா மதனைப்
பிரிவார்க்கு முண்டேமெய்ப் பேறு. (௨௧)

சமயம் விசேடமெனத் தங்கியதே தீக்கை
யமையுந் தொழிலோ டமையு—மிமையுமெடா
சுற்றிருப்ப தெங்ஙன னுறுந்தொழிலோ டொன்றாகப்
பற்றிநிற்ப தெங்ஙன் பகர். (௨௨)

சத்திநி பாதஞ் சதுவிதமா மாங்கதனை
யொத்த சரியாதி யொருநான்கா—முத்திநலத்
துற்றதொழி லொன்கா முறுமுத்தி யோர்நான்காய்ப்
பெற்றதன்றோ தீக்கையின்மெய்ப் பேறு. (உ௩)

சமய விசேடந் தருஞான மென்ன
வுமையொரு பாக ருரைத்த—தமையவிருந்
தெட்டுதற்கோ வீசற் கிசைந்ததொழி லோடிசைந்தங்
கொட்டுதற்கோ வொன்றை யுரை. (உ௪)

சாதித்த யோகஞ் சமய விசேடமதிற்
போதித் தடங்கப் பொருத்தியதாம்—பேதித்த
தீக்கையென்ப தின்றுந் தியானமே யோகமதா
லேற்குமெவ்வி டத்துமென வெண். (உ௫)

யூகித் திதனை யுணராதா ரன்றோமெய்
யோகத்தை வேறே யுணர்வதுமெய்—யோகம்
பிரித்தறிவ தன்று பிரியாத் தொழிலிற்
றரித்தறிவ தாகத் தரும். (உ௬)

பேதித்த காயம் பிரியாம னிட்டையெனச்
சாதிப்ப தெல்லாந் தவறன்றோ—வாதித்த
காயமற்றோ லாவி கருதுமரன் போற்கருணை
நேயமுற்ற தன்றோ நிலை. (உ௭)

நீதித் தரும நிறுத்துஞ் சிவாகமத்தைச்
சாதித் தாலன்றோ தருநிட்டை—வாதித்த
வங்கத்தோ டாவி யரனெறியு மாயாத
சங்கமோ நிட்டைச் சதுர். (உ௮)

சொல்லுஞ் சிவாகமத்தின் சூழனைத்தும் பாராமல்
வெல்லும் புலனைந்தும் வெல்லாமற்—செல்லுநெறி
தன்னை வினையைத் தலைவனையுங் காணுமன்
மன்னுதலே நிட்டை வளம். (உ௯)

அறியும் பகுதி யறிவறியத் தானே
பிறியும் பகுதி பிரியும்—நெறியாகுஞ்
சன்மார்க்கத் தாற்கே தருஞான நூலோத
னன்மார்க்கத் தாகு நலம். (௩௰)

பாதத்துக் கேற்ற பணிபலவுஞ் செய்துமலஞ்
சேதித்தார்க் கன்றோ திடமாகும்—நீதி
நடையே நடந்தானை நண்ணியென்று நீங்காத்
தடையே சமாதிச் சதுர். (௩௧)

தீக்கைதனக் குற்ற செயல்பலவுஞ் செய்துமல
நீக்குதலே யன்றோ நிலையாகும்—பாக்கியமாம்
பூசையின்மேன் மோகப் புணர்ப்பல்லான் மற்றுமோ
ராசையின்மே லுண்டோ வான். (௩௨)

பூசை தியானம் பொருந்துந் தொழிலனைத்து
நேசித்தார்க் கன்றோ நிலையாகுந்—தேசுற்ற
வத்து விதத்தோ டடைவதெல்லா நன்மேனி
புத்தியின்மே லுற்ற பொருள். (௩௩)

கற்பிப்ப தெல்லாங் கருணைவடி வல்லாது
கற்பிப்ப தல்ல கருணைநல—மற்புதமாய்ப்
போக்குவ தும்போக்கிப் போகாப் பொருளறிவி
லாக்குவதே நிட்டைக் கழகு. (௩௪)

சுருதிகுரு வாக்குச் சுவானுபவ மொன்ற
மருவுவதே ஞானவழக் காகுஞ்—சுருதி
யடையாம னிட்டை யடைவதெல்லா முத்தித்
தடையாகு மென்னத் தகும். (௩௫)

அளவையொரு மூன்று மறிபொருளுக் காவி
யுளவறிவார்க் கேதளவை யோது—மௌவறியு
மக்கங் கருத லடையாநல் லாகமத்தின்
பக்கமுமின் றுமேற் பழுது. (௩௬)

முந்தியதோர் செய்யுண் முதனினைப்பா ரெல்லார்க்குஞ்
சந்தயமே யில்லைத் தகுநிட்டை—யிந்தநூல்
வந்தித்தார்க் கன்றோ மருவுஞ் சமாதியதைச்
சந்தியார்க் கேதாகுந் தான். (௩௭)

வாக்குமனக் காய மருவா வறிவுமைய
லாக்கையுற்று நிற்பார்க் ககப்படுமோ—நீக்கமிலாக்
காயமறும் போது கருதுமரன் போலாவி
நேயமுறு மன்றே நிறைந்து. (௩௮)

யூகமது போகமென வோரிரண்டா மும்மலங்கள்
பாகப் படாதார்க்கும் பட்டார்க்கு—மாகமுறப்
பட்டார்க் குபாயம் பகர்நூலோ டுகிதீதல்
விட்டார்க் கனுபோகம் வீடு. (௩௯)

முத்தியென மற்றொன்றைப் பற்றி முயல்வதெல்லாம்
புத்தியற்ற தன்றோ புகலுங்கால்—சித்தமுற்றங்
தோயாத துன்பத் துறுவிக்குந் தேகத்தைத்
தோயா தவரே சுகர். (௪௰)

சன்மார்க்க மென்னத் தகுநூலை யோதியதன்
புன்மார்க்க மெல்லாம் புறம்பாக்கி—நன்மார்க்கஞ்
சார்ந்தறிவைச் சார்ந்து தகும்பூ ரணமாகத்
தோய்ந்தபே ரன்றோ சுகர். (௪௧)

ஆகமுற்றார்க் கெல்லாம்பொய் யங்கமுற்ற மங்கையர்கள்
போகமுற்ற தல்லாற் பொருளுண்டோ—மோகங்
தணிந்தானை நோக்கித் தகும்பூசை செய்யத்
துணிந்தபே ரன்றோ சுகர். (௪௨)

செஞ்சொலா னின்றுரையைச் சேர்த்தே னறிவுடைமை
நெஞ்சடைவ தாக நினைந்தருளாஞ்—செஞ்சடைசேர்
மெய்யா வுபதேச வெண்பாவே நீயாமென
னையா நமச்சிவா யா. (௪௩)

---

உபதேச வெண்பாநாற் பத்துமூன் றுய்யு
முபதேச மாக வுரைத்தா—னுபதேசம்
பண்ணு வடுதுறையிற் பண்ணும் பலவாணன்
கண்ணு ரமுதாய்க் கலந்து.

இன்னம் பெறுமே யெமக்கிவ் விருசெவியு
மன்னம் பெறுமம் பலவாணன்—பொன்னு
வடுதுறைமேற் செய்த வுபதேச வெண்பாத்
தொடுதுறையைக் கேட்கையினாற் சூழ்ந்து.

உபதேச வெண்பா முற்றியது.

திருச்சிற்றம்பலம்.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அம்பலவாணதேசிகர் அருளிச்செய்த

# அதிசயமாலை.

கட்டளைக்கலித்துறை.

புலிகழ லாடியும் பாம்புன்னைப் போற்றியும் போதமில்லா
யெலிகழ லாடியு மீயுன்னை யேத்திடு மென்னுகிலாக்
கலிகழ லாடிய கண்டன்கண் டாயென்னைக் காகருணை
யொலிகழ லாடிய கூத்தா அருத்தி யுயர்ந்தவனே. (௧)

பொய்யேன் மலவலி பூண்டிட னுடைய போதனன்பு
செய்யேனின் பாதத்துக் கன்புசெய் வார்க்கென்றன் சித்தம்பற்றி
மெய்யே விதிக்கின்ற வன்பர்க்குத் துன்பம் விளைக்குந்துட்டத்
தீயேற்கு நீவெளிப் பட்டதென் னேசொல் சிதம்பரனே. (௨)

செய்யேற்கு நின்பதச் சீரேற்கு நின்னன்பர் சேர்ந்தவர்பான்
மெய்யேற்கு முள்ளத் துணர்வுடை யோர்கள் விருப்பதில்லா
மையேற்கும் வஞ்சத்தில் வாழ்கின்ற வாழ்வை மதித்துடனுந்
தீயேற்கு நீவெளிப் பட்டதென் னேசொல் சிதம்பரனே. (௩)

பரிசித்த காயத்தை நீங்காத நெஞ்சன் படிற்றையென்றுந்
தெரிசித்த நோக்கன்சிற் றேவலை மேற்கொண்ட சித்தனிந்நாள்
வரிசைத் தவத்தின ரோடுநின் பாதம் வணங்கநெஞ்சி
லரிசித்த வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௪)

நெருக்கிய நிமலத் தாவியுள் ளாக நெடியநெஞ்சைச்
சுருக்கிய காம மதனொடு முக்கிய துட்டனந்தோ
தருக்கிய வின்பத் தவரொடு நின்பதஞ் சாரநெஞ்சை
யுருக்கிய வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௫)

தாங்கிய நின்னரு ளென்பா விருக்கத் தமோமயமாய்த்
தூங்கிய தென்னெஞ்சு நின்னருள் வெறுத்திந்தத் அஞ்சலற
வாங்கிபத் தாளி லடக்கித் தவரொடும் வாழ்கநெஞ்சத்
தோங்கிய வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௬)

கருதிய தீமலத் தாவியுள் ளாயுற்ற காயமுமாய்ச்
சொருகிய காமத்துந் தானுட னுயுஞ் சுழனுமிந்நாட்
பருகிய வின்பத் தவரொடு நின்பதம் பற்றநெஞ்ச
முருகிய வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே (௭)

துன்றிய தீமலந் தன்வண்ண மாகத் துலங்கியுள்ளங்
குன்றிய தாகும் விடையங்க டோறுங் குலையமலம்
வென்றிய பாதத் தவரொடு நின்பதம் வேண்டநெஞ்ச
மொன்றிய வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௮)

திதித்தவெவ் வாறதவ் வாறவென் னுவியுன் றேசதின்றுய்
விதித்தவெவ் வாறதவ் வாறு விரும்பி விரிந்துமையல்
மதித்தவெவ் வாறவெவ் வாறது வாகு மதியதுன்பா
லுதித்தவெவ் வாறுசொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௯)

அற்றவென் னுவி தனுவாய் மனமதற் காயிழையாய்
நற்றவ வாக்குப் பொருளா யடியிணை நண்ணுகில்லாத்
தெற்றினை மாற்றித் தவரொடுஞ் சேர்த்தென்றன் சிற்றறிவி
லுற்றவெவ் வாறுசொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௰)

ஆட்டிய தீமலத் தாகவத் தீமல மாகமெனக்
காட்டிய தாமெனைத் தீவினை யாவையுங் காதலிக்கப்
பூட்டிய தாமதைப் போக்கி யுளத்துப் பொருந்தவரு
ளூட்டிய வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௰௧)

அன்னிய வஞ்சத்தை நெஞ்சத் தடக்கி யகத்துளின்பாய்த்
துன்னிய சற்குரு லிங்கந் தவரையுந் தொல்லிருளாய்ப்
பன்னிய தீமலந் தாளா லடக்கிப் பரிந்துனைநா
னுன்னிய வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௰௨)

கருப்பட்ட காலத்திற் புத்தியொத் தாயதற் காயபெத்தி
வரப்பட்ட காலத்திற் நந்தையொத் தாயது மன்னியங்கந்
திரப்பட்ட காலத்தின் மங்கையொத் தாயதென் சித்தநின்பா
லொருப்பட்ட வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௰௩)

தெள்ளிய நீகுரு யானுட னீமங்கை செய்தொழிலுக்
கொள்ளிய வுள்ளத் துறுதிய மாதரை யுள்குவித்து
வெள்ளுங் குருவினை யானுனை நோக்கி யிசைந்தடியை
யுள்ளிய வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௰௪)

பாக்கிய மாவது நின்று வினைக்கன்பு பற்றியங்சம்
போக்கிய தாமதைப் போக்காமல் யானெனப் போற்றியன்பங்
காக்கிய நீய னகமே புகுந்தந்த வன்புனக்கா
ஆக்கிய வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௰௫)

கருப்பட்ட காலத்தி லாவியொத் தேறிய காயமதா
யுருப்பட்டு மங்கைதன் கொங்கையிற் பட்டுமிக் கோர்நெறியும்
பொரப்பட்டெப் பாவத்து முட்பட்டு நிற்கின்ற போதநின்பா
லொருப்பட்ட வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௰௬)

அழித்தது நின்பதத் தன்பைப்பொற் பாதத் தடியவரைப்
பழித்தது பாவப் பயனெதும் பற்றிப் பரிந்துபொய்யில்
விழித்ததென் னெஞ்ச மடியாரை வேண்டி விரும்பமல
மொழித்ததெவ் வாறுசொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௰௭)

காட்டிய வாறதெவ் வாறதவ் வாறு கருதுமுள
மாட்டிய வாறதெவ் வாறதவ் வாறினு மாடுமருட்
கூட்டிய வாறதெவ் வாறதவ் வாறினுங் கூடமல
மோட்டிய வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௰௮)

விதிக்கின்ற நன்கினை யெல்லாம் விடுத்து விலக்கைநன்காய்
மதிக்கின்ற மாந்தர்க்கு நெஞ்சமுன் னீந்த மலத்தனருட்
பதிக்கின்ற வுள்ளத் தவரொடு நின்பதம் பற்றநெஞ்சி
லுதிக்கின்ற வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௰௯)

உடுக்கின்ற தூசுக்கு முண்கின்ற வாறுக்கு மோங்குமுட
லடுக்கின்ற மங்கைக்கு நெஞ்சமுன் னீந்த வவலனிற்குக்
கொடுக்கின்ற வாறினுக் கொவ்வா வெனைநின் குளிர்பதத்தி
லொடுக்கின்ற வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௨௰)

விழிக்கின்ற நாட்டத்தை யுன்பா லகற்றி வெருட்டித்தன்னே
டழிக்கின்ற மாதை யுளத்தே யமைத்தென் னறிவையறப்
பழிக்கின்ற தீதையுன் னேக்கா லெரித்துன் பதத்திலென்னை
யொழிக்கின்ற வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௨௧)

சிதைத்ததுன் பாதப் பணியினை வேம்பெனத் தீங்கரும்பா
யிதத்ததென் னங்கப் பணியையெங் நாளு மியற்றநெஞ்சை
வதைத்ததிவ் வாணவம் யானிய தாக மதித்ததனை
யுதைத்ததெவ் வாறுசொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௨௨)

அரக்கினை யொத்ததென் னாவிநின் பாத மழலையொத்து
நெருக்கிய நீநிற்க யான்மலத் தோடு நிறைந்துபொய்யிற்
செருக்கிய காமத் துடனுகச் சித்தத்தைச் சேரவத்தோ
டொருக்கிய வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (உ௩)

புளித்தது நின்பதத் தன்புபொய் யாகத் திளமையின்பாய்க்
களித்தது மாதர் குழைத்தோ ளிணைக்கல்லுக் கண்டதென
வளித்ததென் னுள்ளத் தவலத்தை மாற்றி யடியருட
னொளித்ததெவ் வாறுசொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (உ௪)

மரிப்பித் தவனலை வான்று யெனக்கு மரிப்பதனை
யரிப்பித் தவனீ மலமேற் குருடா யகமகிழத்
தெரிப்பித்த வாறுற் றளிப்பையத் தீதைத் திருக்காத்தா
லுரிப்பித்த வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (உ௫)

துயிற்கின்ற போதும் விழிக்கின்ற போதுந் துலங்கிநெஞ்சைச்
செயிர்க்கு ளடக்கிய தில்லமன் றேவுளஞ் சேர்ந்ததெல்லாங்
கயக்கும் படிசெய்து நின்று ணிணைக்குங் கருணைதந்தா
யுயிர்க்கின்ப நீயல்ல தில்லைகண் டாய்தில்லை யுத்தமனே. (உ௬)

துதிப்பேனின் பாதத் தவர்போற் றுலங்கித் துதித்தவர்போன்
மதிப்பே னலேனெஞ்சின் மாயங்கண் மாய மதித்தவன்பை
பதிப்பே னலேன்மிக்க வன்பரைப் பற்றிப் பணிந்தடியி
லுதிப்பேனெவ் வாறுசொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (உ௭)

அணைக்கின்ற தாக மருளே புகுத்தி யகத்திருளைத்
துணிக்கின்ற தாகவவ் வாறதில் லாமற் றுடர்ந்திருளாற்
பிணிக்கின்ற மாதரிற் பித்துமுற் றுக்குமென் பேதைநெஞ்சை
யிணைக்கின்ற வாறென்கொல் தில்லையு ளாடு மிறையவனே. (உ௮)

பசித்ததிவ் வங்கத்துட் பார்த்ததென் னாவி பசியடங்கப்
பொசித்ததிவ் வங்கமிவ் வங்கத்தை யானெனப் பூண்டுபொய்யில்
வசித்ததென் புந்தி யறமாற்றி நின்னருண் மன்னவிந்நா
ளிசித்ததெவ் வாறுசொல் தில்லையு ளாடு மிறையவனே. (உ௯)

பூட்டிய தாகம் பொசிப்பேபொய்ப் போகமென் போதமறக்
காட்டிய தாமலங் காயமு நீயறக் காட்டுகையா
லாட்டிய தாகு மலமேயென் னாவி யருளையிந்நா
ளீட்டிய வாறென்கொல் தில்லையு ளாடு மிறையவனே. (௩௰)

மூத்தவ ளியலத் தியலம் போனு மூளைத்துமுந்தி
யார்த்தது காய்த்தும் போகத்து மாக வடக்குகையா
னித்தன னுன்னைத் தவரொடு நின்பத நீக்கமற
விர்த்ததெவ் வாறுசொல் தில்லையு ளாடு மிறையவனே. (௩௧)

பார்த்ததெத் தன்மையத் தன்மையைப் பார்க்கப் பரிந்தருளைச்
சேர்த்ததெத் தன்மையத் தன்மையை நோக்கித் திரிமலத்தை
நீத்ததெத் தன்மையென் னேடுடல் போகமு நின்கையுற
வேற்றதெத் தன்மைசொல் தில்லையு ளாடு மிறையவனே. (௩௨)

கருப்பித்துக் காய மதனொடு மோடிக் கருதுமைய
னிரப்பித்துப் பித்துநின் பாதத்தை நோக்கு நெடியவென்னை
மரிப்பித்த பித்தநின் பாதத் தவரொடு மன்னவத்தி
பெரிப்பித்த வாறென்சொல் தில்லையு ளாடு மிறையவனே. (௩௩)

தலைபிற்ற நான்முகன் றண்பாற் கடலிற் றயங்குமிக்க
வலையுற்ற மாலு மறியாத் திருப்பத மாகமுற்றுங்
கலையுற்ற நெஞ்சனப் பாதத்து ளாடக் கருதியிங்கா
னிலைபித்த வாறென்சொல் தில்லையு ளாடு மிறையவனே. (௩௪)

பாய்ந்தது நின்ற னடியென்ற னுவியுட் பற்றலின்றித்
தோய்ந்தது தீய மலத்தொடுந் தொல்லைத் துகளதற
நீந்திய வுள்ளத் தவரொடு நின்கழ னிற்கவுன்னை
யீந்ததெவ் வாறுசொல் தில்லையு ளாடு மிறையவனே. (௩௫)

பிடித்ததெவ் வாறதவ் வாறு மலமுளம் பின்னமற
நடித்ததெவ் வாறதவ் வாறு நடுங்க நடிக்குமருட்
டடித்ததெவ் வாறுந் தடிக்குந் தவரொடுஞ் சாரமைய
விடித்ததெவ் வாறுசொல் தில்லையு ளாடு மிறையவனே. (௩௬)

சாந்திய மெய்யுநின் பாதத்தை நோக்குந் தரித்தவென்பாற்
போந்திய தாகிலப் பொய்யே திரட்டிப் பொருந்துமென்னை
மாந்திய தாகநின் பாதத் தவரொடு மன்னவென்னை
யேந்திய வாறென்சொல் தில்லையு ளாடு மிறையவனே. (௩௭)

எழுத்து விதிக்கை விதியே யளிக்குமென் னீசவம்மா
வழித்துப் பிறப்பிப்பை மாலய னேரையம் மக்கணிற்க
குழுத்தவ ரோடுநின் பாதத்தை நோக்கிக் குறுகவென்னை
யிழுத்ததெவ் வாறுசொல் தில்லையு ளாடு மிறையவனே. (௩௮)

ஆழ்த்தியச் சொல்லிய சங்கப் பயோதா வாரிருளர்
லாழ்த்திய நோக்குமென் னேக்கை யடைத்தன ருற்றவன்பாய்
வாழ்த்திய வாய்சுகப் பந்தா லடைத்தனர் மாமருளைத்
தாழ்த்திய வாறென்கொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௩௯)

பெருக்கிய வன்பைநின் பாதத் தகற்றியென் பேரறிவைச்
சுருக்கிய மாதர் முலைமீ தழுத்திய துட்டனிந்நாட்
கருக்கிய தீயினைக் காலா லடர்த்துனைக் காதலித்துத்
தருக்கிய வாறென்கொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௪0)

சொலிற்பித்து மாதர் துணைத்தோ ளிணையவர் துங்கபங்கம்
புலிற்பித்துப் போக்கு வரவொடும் பூட்டிப் பொருந்தத்தன்பால்
வலிப்பித்த பித்த னெனைத்தான் பிடித்து மருவநின்பாற்
சலிப்பித்த வாறென்கொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௪௧)

மங்குமிவ் வங்க மதிவா னுலகத்தை மன்னுமங்கை
கொங்கையி லின்பங் குறித்தில மாகிற் குறித்ததந்தோ
பொங்கிய தீய நரகே புகச்செயும் பொய்யனின்றுட்
டங்கிய வாறென்கொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௪௨)

நடையட்டள் தாய்மனந் தந்தையட் டான்மங்கை நாட்டநின்பாற்
றொடையட்டள் மக்கள் கரமே துடைத்தனர் சுற்றசெம்வாய்க்
கொடையட் டனரிவ ரெல்லாங் குலையக் குறித்தடியேன்
றடைப்பட்ட வாறென்கொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௪௩)

விதிபட்ட துன்கை யுகிரின்முற் சூலத்தின் விண்டுவங்கம்
பதிபட்ட காமன் விழிபட்ட பாடு படுத்தலின்றே
மதிபட்ட நீயென் னுளத்தே யிருக்க மதிமலத்திற்
சதிபட்ட வாறென்கொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௪௪)

கவிர்பட்ட செப்புப் பயோதரக் கண்ணென்கண் கன்மனம்போ
யவிர்பட்ட வாய்கனிற் கால்க ளமைத்தங் களவதில்லாக்
குவிபட்ட தீப்பவம் யான்வெறுத் துன்னைக் குறுகமங்கை
தவிர்பட்ட வாறென்கொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௪௫)

ஆவிய தல்லவஞ் ஞானமெஞ் ஞான்று மறிவமெனக்
கூவிய தாமறை யானற வானந்தங் கூட்டியநீ
மேவியெந் நாளும் விடாதுடற் சிற்றின்பம் வெஃகியதைத்
தாவிய வாறென்கொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௪௬)

வரிப்பித்து மக்கள் மனையொடு செல்வம் வாழ்தொழிலி
னிரப்பித்துப் பித்தையென் னெஞ்சிலெந் நாளு நெடியவன்பைப்
பரப்பித்தி லேனையும் பாதத்தை நோக்கிப் பணியநின்பாற்
றரிப்பித்த வாறென்கொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௪௭)

நாவித்துப் பாவ நவிற்றி னவையுறு நாடியென்றும்
பாவித்த லுள்ள மிதத்தோ டகிதப் படுத்திமல
மேவித்துத் தீவினை வேரறுக்கி யுன்னை விரும்பவென்பாற்
றூவித்த வாறென்கொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௪௮)

புழுவிய தாயும் புகுந்தன ளுநின்றன் பொன்னடியை
வழுவிய தாலின்ன மன்னநின் பாதத்தை மன்னவின்றி
நழுவிய தாமென்னை நன்மா மலரடி நண்ணவிந்நாட்
டழுவிய வாறென்கொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௪௯)

நெறித்தனள் மங்கைதன் னெற்றிப் புருவத்தை நீசிவத்தைக்
குறித்தனை யேனெனப் பற்கடித் தான்றந்தை கூழைகையாற்
பறித்தன டாயரிப் பாசப் பகைகள் பதைக்கக்கண்ணுற்
றறித்தெவ் வாறுசொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௫௰)

இடைபட்ட மாதர் தனக்கிரி மீதி லெடுத்துக்கண்ணு
ளுடைபட் டிடவுருட் டிப்பின்னு மேனு முயர்த்தித்துன்பப்
படைபட்ட யானுன்றன் பாதத் தவரொடும் பற்றிநின்பாற்
றடைபட்ட வாறென்கொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௫௧)

முளைத்ததென் னுவி மலத்தோ டடங்கி முழுதுமதாய்க்
கிளைத்தது வாகுங் காரணங்க ளாகக் கெழுமிப்பொய்யை
விளைத்தது வாகுமிக் கோரொடுங் கூடி விரும்பநின்பால்
வளைத்தெவ் வாறுசொல் தில்லையு ளாடிய மன்னவனே. (௫௨)

தொழுத்திய தல்லச் சுகமுனை நோக்கித் துதிக்குமங்கைக்
குழுத்திய துன்னைக் குறுகாக் கொடுந்தொழிற் கூட்டிநெஞ்சை
யழுத்திய தீதை யகற்றிநின் பாத மடைந்தடியேன்
வழுத்திய வாறென்கொல் தில்லையு ளாடிய மன்னவனே. (௫௩)

சூழ்வித் திகாகித மங்குரங் காம முளைத்துமுனை
சூழ்வித்து வஞ்சிப் பயோதரக் கொம்பதைச் சுற்றிவிடாக்
காழ்வித்து நின்பதக் கொம்பிற் படர்ந்துமெய் காய்க்கவென்னை
வாழ்வித்த வாறென்கொல் தில்லையு ளாடிய மன்னவனே. (௫௪)

உரிப்பித்த வாபித்தை யுள்ளொளி யோடொளி யொக்கநெஞ்சிற்
றெரிப்பித்த வாவினை யாவையுந் தீரத் திருவிழியா
லெரிப்பித்த வா திருப் பாதத்து னென்னை யிருத்தியின்பாய்
மரிப்பித்த வாறென்கொல் தில்லையு ளாடிய மன்னவனே. (௫௫)

உருத்திய தென்னவென் னுள்ளத்தி னோர்ந்ததற் கோருடலை
யிருத்திய வாறு மிழந்தனிந் நாளிதை யின்பமெனப்
பொருத்திய தீமலப் பொய்யையெற் காகநின் பொன்னடியால்
வருத்திய வாறென்கொல் தில்லையு ளாடிய மன்னவனே. (௫௬)

குணங்கிய தன்றுநின் பாதத்து நோக்குக் குறித்தவுள்ளம்
பிணங்கிய தீமலப் பெற்றிய தாமதைப் பேதமற
விணங்கிய தானுனை யானேத்து கில்லே னிதைப்பிரிந்து
வணங்கிய வாறென்கொல் தில்லையு ளாடிய மன்னவனே. (௫௭)

தொழுவேனின் பாதப் பரிசைமிக் கோரெனச் சூழ்ந்தடியி
லழுவே னவரென வுள்ளமவ் வாறன் றகமகிழ்ந்து
விழுவேன் செகத்துனின் பாதத்தை வேண்ட விருப்பமந்தோ
வழுவேயெவ் வாறுந் தில்லையு ளாடிய மன்னவனே. (௫௮)

புளிப்பட்ட தாம்பிரம் போலுமென் னுவிநின் போதமுற்று
ருளிற்பட்ட கால மறக்களிம் பென்னவென் னுள்ளமைய
லொளிப்பட்ட தாகுமிக் கோரொடு நின்னடி யுன்னவிந்நாள்
வெளிப்பட்ட வாறென்கொல் தில்லையு ளாடிய வித்தகனே. (௫௯)

துளைத்தது காமன் பகழியென் னெஞ்சைச் சுடுநெருப்பாய்க்
கிளைத்தது வான்மதி தீர்க்கு மருந்தெனக் கேடிலருண்
முளைத்தது மாதின் முயக்க மருந்தென முற்றிப்பொய்யா
விளைத்ததெவ் வாறுசொல் தில்லையு ளாடிய வித்தகனே. (௬௰)

தெரிவித்த நின்னருட் பாதக் கதிரென்றன் சித்தம்புக்குப்
பிரிவித் தகவிருள் யானென தாக்கிப் பிரிவினுடல்
வருவித்த தன்பணிக் காய்வினை நிற்கென மன்னிநின்பால்
விரிவித்த வாறென்கொல் தில்லையு ளாடிய வித்தகனே. (௬௧)

இரவிய தாமரு ளாணவந் தீதிரு ளேயுமுடல்
மருவிய நீதந்த தாயுமுன் பாத மறைத்திருளாய்ப்
பரவிய தாமலம் வேறது வாகப் பரிந்தென்னெஞ்சில்
விரவிய வாறென்கொல் தில்லையு ளாடிய வித்தகனே. (௬௨)

ஒடுக்குமென் றுய்பரி வாற்றந்தை வஞ்சத் துலகியல்பா
யடுக்குமின் னார்புல னைந்தா லடக்க மிகவுருவாற்
றடுக்கும் புதல்வரிப் பாசப் பகையறச் சார்ந்தருளில்
விடுக்குமெவ் வாறுசொல் தில்லையு ளாடிய வித்தகனே. (௬௩)

நிலக்கு மறிவினைக் காயம் வினையுமத் தூய்மையதாய்க்
கலக்கு மலங்கல வாவிடின் காமன் கணைக்குநெஞ்ச
மிலக்கு மலக்கதிர்ப் பாதத்தை நாட்டி யிருளகத்தில்
விலக்குமெவ் வாறுசொல் தில்லையு ளாடிய வித்தகனே. (௬௪)

சுடுகின்ற தோர்புறங் காமமற் றோர்புறஞ் சூழ்பசித்தீ
யடுகின்ற தோர்புற நோயொரு பாலி லமர்கையினாற்
றொடுகின்ற வாறெங்ங னீயென யாவையுந் துன்பமென
விடுகின்ற வாறென்கொல் தில்லையு ளாடிய வித்தகனே. (௬௫)

நடக்கின்ற திது நடவாத திதென நாட்டியருள்
கொடுக்கின்ற வாரியன் றன்பா லிருந்துங் கொடுவினையா
லடுக்கின்ற மாதர்க் கவாவுமென் னெஞ்சறி யாமையற
விடுக்கின்ற வாறென்கொல் தில்லையு ளாடிய வித்தகனே. (௬௬)

தொடுவித்து மெய்யைம் புலனறி யாமை துடைத்தற்கருட்
குடிவைத் திடவன்பு கின்பா லறமலங் கொங்கைமின்னைப்
படிவைத்துத் தன்வச மாக்கும் புலனெறி பற்றவதை
விடுவித்த வாறென்கொல் தில்லையு ளாடிய வித்தகனே. (௬௭)

உதித்தன நெஞ்சத்து னீயென்ற னுவியுன் னேடுறைவாய்
மதித்தன வந்தவை நிற்காய் மலத்தொடு வந்ததெல்லாஞ்
சிதைத்தன தியர் பிராரத்த தேகமுஞ் சிவனுக்காய்
விதித்ததெவ் வாறுசொல் தில்லையு ளாடிய வித்தகனே. (௬௮)

இரும்பிய லாகுமென் னெஞ்சம்போய் மாதர்க் கிசைந்தருளிற்
றிரும்பிய தாலென்ன திவினை யோமலந் தீத்தனுவைக்
கரும்பிய லாக்கிநின் னன்பரை வேம்பெனக் காட்டுமிதால்
விரும்பிய வாறென்கொல் தில்லையு ளாடிய வித்தகனே. (௬௯)

இலையுற்ற வானவ நிபே ரறிவு மெழிற்பகழி
முலையுற்ற வாதி முடித்தாம மாகு முழுமதியாங்
கலையுற்ற துன்சடை காமன் கருதிக் கணைதொடுப்பான்
விலையுற்ற வாறென்கொல் தில்லையு ளாடிய வித்தகனே. (௭௰)

நினையுற் றிடுமென் னறிவு மனம்பொறி நின்பணியாந்
தனையுற் றிடுவது யானறி யாமையைச் சார்தலின்றுற்
பினையுற் றிடுவதென் றேகப் பிராரத்தப் பெற்றியிரு
வினையுற் றிடுவதென் றில்லையு ளாடிய வித்தகனே. (எக)

ஆவிநின் பாலன்பென் னங்கமு நின்பணி யங்கமொன்றைத்
தாவில தான்செயல் யானோ வெனக்கிலைத் தத்துவத்தா
லாவதொன் றெற்கிலை யாமாலென் பால்விட் டகன்றவினை
மேவிய வாறென்கொல் தில்லையு ளாடிய வித்தகனே. (எஉ)

கொளையுற்ற தாமலம் யானறி யாமைக் கொடுங்கருவி
யினையுற்ற வாறெங்ஙன் மாறு வுடலம் பிறக்கவினை
தனையுற்ற வாறெங்ங னின்று டரிக்கத் தரிக்குஞ்சத்தி
வினையுற்ற வாறென்கொல் தில்லையு ளாடிய வித்தகனே. (எ௩)

முளைக்கின்ற காலு முளைக்குமுற் காலும்பொய் மோகநெஞ்சிற்
கிளைக்கின்ற காலதற் கேற்ற தனுவினைக் கிஞ்சனுற
வளைக்கின்ற வாக்கினை நின்செய னின்செயல் மற்றுமென
விளைக்கின்ற வாறென்கொல் தில்லையு ளாடிய வித்தகனே. (எச)

திரிவித்தென் னெஞ்சத்தைத் தீவினை யாவையுந் திங்கரும்பாய்
வருவித்துத் தீய பிறப்பினை யாக்கு மலமதற
விரிவித்த நின்செயல் பொய்யாத தீதையு மையனியாய்
விரிவித்த வாறென்கொல் தில்லையு ளாடிய வித்தகனே. (எரு)

உதிக்குமுற் காலுமெக் காலத்து முள்ளத்தை யுற்றுமலஞ்
சதிக்கும் பிறவிக்குத் தானுட னாகவச் சத்தியற
மதிக்குநின் சத்தி மருளாய் மயக்கமு மன்னநியாய்
விதிப்பதெவ் வாறுசொல் தில்லையு ளாடிய வித்தகனே. (எசா)

வெண்பா.

அதிசய மாலை யருளெழுபா னாறு
மதிசெய் மலமாற்ற வைத்தான்—துதிசெய்வோர்
கூடா வடுதுறையிற் கூடம் பலவாணன்
வீடாயென் னெஞ்சில் விளைந்து.

கண்ணாகுங் கண்ணா முயிர்க்கா வடுதுறையிற்
றண்ணாகு மம்பலவா ணன்றகுதி—யெண்ணி
யதிசய மாலை யறைந்ததைத் தேர்ந்து
கதிசெயுமா லாற்கண்டு கண்டு.

அதிசய மாலை முற்றியது.

திருச்சிற்றம்பலம்.

—⁂—

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## அம்பலவாணதேசிகர் அருளிச்செய்த

# நமச்சிவாய மாலை.



சீரேற்று நின்கருணைச் சித்தமே புக்குமலப்
போரேற்றி நிற்கப் பொருந்திடுவ தெந்நாளோ
வாரேற்றுங் கொங்கை மகளி ரறக்கருணைத்
தூரேற்று மாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௧)

வன்னமே நின்னருளை மன்னின்மல வன்னமெலாம்
பின்னமே யாக்குமருட் பேறளிப்ப தெந்நாளோ
வன்னமே யில்லா வடிவே வருங்கருணைச்
சொன்னமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௨)

ஊழே கருணைக் கொருப்பட்டு மூழென்னுமலக்
காழே யுரைக்குமிந்தக் கற்பகல்வ தெந்நாளோ
பாழே யகலிற் பயிர்பா ழெனார்கருணைத்
தோழேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௩)

வித்தவா திப்பிறப்பில் விட்டதாற் சங்கமலப்
பித்தவா மாற்றியருட் பேறளிப்ப தெந்நாளோ
தொத்தவா வுற்றவருட் டொண்டர்க்கு நன்மேனி
யொத்தவா வாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௪)

இற்றகர்த்தார்க் காசை யெழலா லருளின்மலக்
கற்றகர்த்து நின்னருளைக் காட்டுவதிங் கெந்நாளோ
சொற்றகர்த்து நின்னருளிற் றோய்வா ருளத்தமுதா
யுற்றகற்றா வாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௫)

கற்றகலா திற்சுகத்தைக் காதலிக்கு மென்னெஞ்சப்
பற்றகற்றி நின்னருளைப் பாலிப்ப தெந்நாளோ
சற்றகலா துற்றவர்க்குச் சர்க்கரையே நற்றவரை
யுற்றகலா வாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௬)

விதித்திடுமா றிருவினைக்கே வெய்யமலந் தீயெனைச்
சதித்திடுமா னின்னருளைச் சார்ந்திடுவ தெந்நாளோ
துதித்திடுமா லுற்றவின்பத் தொண்டர்க்கு நின்னருளை
யுதித்திடுமா லாவடுதண் டுறைநமச்சி வாயனே. (எ)

புண்டகைய நற்றுகிலைப் பூட்டியிருண் மாதருளக்
கண்டகையு மாயக் கலிபகல்வ தெந்நாளோ
தண்டகையுந் தீத்தரித்த கையா தவர்க்கமுதா
மொண்டகையே யாவடுதண் டுறைநமச்சி வாயனே (அ)

கற்றவனே ருற்றிலமே காதலிக்கு மென்னெஞ்சு
நற்றவனே ருற்றருளை நாடுவதெங் கெந்நாளோ
சற்றவனேர் நில்லாத் தவர்க்கமுத மாய்நிறைந்தங்
குற்றவனே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (கூ)

சொற்பவமே மாதரின்பு சொல்லிறந்தன் னோர்களின்ப
மற்பகலுந் துய்ப்பேற்குன் னருடருவ தெந்நாளோ
விற்பவமே மாயவரு ளேய்வா ருளத்தமுதா
முற்பவமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௰)

உண்பொருளே நோக்கி யுலாவுமன மூன்றொழித்தென்
கண்பொருளே நோக்கவருட் கண்டருவ தெந்நாளோ
விண்பொருளே மிக்கோர் விழுங்குமமு தேகருணை
யொண்பொருளே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௰௧)

பொய்க்கயலா நின்கருணை பூண்பதற்குப் பொய்மாதென்
மெய்க்கயலாய் நிற்க விதித்திடுவ தெந்நாளோ
விக்கயலா வேட னெழிலெரித்த வானோக்குக்
குக்கயலே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௰௨)

திக்கயலே நீயாமாற் சேரவுனைத் தீச்சொலென்றன்
வாய்க்கயலே யாகவுனை வைத்திடுவ தெந்நாளோ
நோய்க்கயலே யுற்றதவ நுண்ணியரோ டொத்தவரு
ளோய்க்கயலே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௰௩)

செகத்தயலே நீயாமாற் சேர்ந்தவுடற் போகமென்ற
னகத்தயலே யாக வளித்திடுவ தெந்நாளோ
பகுத்தயலே தானாகப் பார்க்குமான் மாக்கள்
சுகத்தயலே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௰௪)

என்றுக் கயலே யெழுமா னிதிப்பொருளென்
கன்றுக் கயலேயாய்க் காட்டுவதிங் கென்னாளோ
வின்றுக் கயலே விடுஞ்சுகத்தை வேண்டுமக்க
ளொன்றுக் கயலேதண் டுறைநமச்சி வாயனே. (கரு)

மோகத் தயலே முளைப்பாய்நீ மாதரின்பெ
ருகத் தயலா யளித்திடுவ தென்னாளோ
சோகித் தயலே சுகத்திலிரு மாக்குமக்க
ளாகத் தயலேதண் டுறைநமச்சி வாயனே. (கசு)

போகத் தயலே யெனுமால்நீ பொய்ம்மலமென்
பாகத்தய லேயவருட் பண்பளிப்ப தென்னாளோ
சோகத் தயலே சுகத்திலிரு மாக்குமக்க
ளாகத் தயலேதண் டுறைநமச்சி வாயனே. (கஎ)

இன்பத் தயலே யெழுமானீ நிமலமா
னின்பத் தயலாக நீக்குவிப்ப தென்னாளோ
வன்பற் றயலார்க் கருத்தியிரு மாக்குமக்க
டுன்பத் தயலேதன் டுறைநமச்சி வாயனே. (கஅ)

மாசுக் கயலே மதிப்பானீ நிமலத்தின்
றேசுக் கயலாரைச் சேர்ந்திடுவ தென்னாளோ
வாசைக் கயலாருக் காவிமன மீயுமக்க
ளோசைக் கயலேதண் டுறைநமச்சி வாயனே. கக)

தின்மைக் கயலாமுன் றேசெனுமாற் றியமலப்
பெண்மைக் கயலாரைப் பெற்றிடுவ தென்னாளோ
வன்மைக் கயலாக்கு மாதரின்பஞ் சேருமக்க
ளுண்மைக் கயலேதண் டுறைநமச்சி வாயனே. (உ0)

கள்ளத் தயலாங் கருணையெனு மான்மலத்தின்
பள்ளத் தயலாரைப் பற்றிடுவ தென்னாளோ
வெள்ளத்தய லாக்குமருண் மேவுமங்கை யின்புறுவா
ருள்ளத் தயலேதண் டுறைநமச்சி வாயனே. (உக)

கோறுக் கயலாய்க் குறிப்பானீ நியமல
நாறுக் கயலாரை நண்ணுவிப்ப தென்னாளோ
மாறுக் கயலாக்கு மாதரின்பஞ் சேருமக்க
ளாறுக் கயலேதன் டுறைநமச்சி வாயனே. (உஉ)

கன்னவாய் செய்யக் கருவிகொடுத் தொக்கநின்று
மின்னல்வாய்த் தீநிரயத் தேத்துவிப்ப தெவ்வாறே
மன்னுவாய் தீதகல மாதவர்க்கு மற்றுமன்பா
யுன்னுவா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௨௩)

எள்ளுவாய் தீதை யுணவேயுங் கருவிதந்து
தள்ளுவாய் நீநரகைத் தந்திடுவ தெவ்வாறே
கொள்ளுவாய் முத்தர்தனுக் கோவிலுள நீயாக
வுள்ளுவா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௨௪)

மணந்தாளல் லாரை மருவுகைக் கங்கங்கம்
புணர்ந்தாய் நரகதனிற் போடுவதிங் கெவ்வாறே
கொணர்ந்தாய்நன் மேனி கொடியேன் கொடுமையற
வுணர்ந்தாய்தென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௨௫)

கள்ளுவிற் பார்க்கேற்ற கருவியளித் துண்ணின்றுங்
கொள்ளுவிப்பாய் நீநரகிற் கூட்டுவதிங் கெவ்வாறே
தள்ளுவிப்பாய் தீதைத் தவர்க்கமுத மாயுளத்தங்
குள்ளுவிப்பா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௨௬)

குந்தமே யீந்துங் கொலைக்குளருங் கூட்டியென்னு
மந்தமே யாக்கிநர காக்குவதிங் கெவ்வாறே
சந்தமே லிச்சையறச் சார்ந்ததவத் தோருளத்துட்
டொந்தமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௨௭)

கொல்லுவாய்க் கெல்லாங் கொலைக்கருவி யீந்துளரு
நல்குவாய் நீநரகி னண்ணுவிப்ப தெவ்வாறே
புல்குவா ருள்ளம் புகுவாய்பொய் மக்களுளத்
தொல்குவா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௨௮)

கோனே தினவூன் கொலவுயிரைக் கூட்டியுநீ
தானே நிரயமெற்குத் தந்திடுவ தெவ்வாறே
தேனே புலான்மறுத்த செல்வ ருளம்புகுந்த
வூனேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௨௯)

வலைவாய்ப் படவகையுங் காட்டி யுயிர்மாய்த்துத்
தலைவாய் நரகமெற்குத் தந்திடுவ தெவ்வாறே
மலைவா யிலாதவருண் மன்னுவா ருள்ளத்
துலைவாதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௩0)

களிப்பாய்க் குருநிந்தை கத்துதற்குச் சிந்தை
யளிப்பாய் நரகதற்கு மாக்குவதிங் கெவ்வாறு
ஆளிப்பார்கண் ணீர்வாய் துதிப்பாரைத் தாளி
லொளிப்பாய்தென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௩௧)

இடிப்பார்க்குக் கோயிலுடை லீந்தும் பிரேரித்துங்
கொடுப்பாய் நரகக் குழிவைப்ப தெவ்வாறு
வெடுப்பாய்த் திருக்கோயி லேத்துவார் நீயாய்த்
தொடுப்பாய்தென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௩௨)

ஈட்டுவாய்க் கெல்லா மியற்று மலவினைக்காய்க்
கூட்டுவாய் நின்செயலாய்க் கூறிடுவ தெத்தாலோ
காட்டுவாய் நீதகலக் காண்பார்க்கு நின்னருளே
யூட்டுவா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௩௩)

கூட்டுவாய் நீநினிது கூடுமிருண் மானைக்கி
யாட்டுவாய் நின்செயலா யாக்குவதிங் கெத்தாலோ
கேட்டுவாய்த் தீநெஞ்சைக் கிட்டாம னின்னைக்கா
லோட்டுவா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௩௪)

ஆக்குவாய் நீவினைக்கி டான்மலத்தின் பின்னுகத்
தாக்குவாய் நின்செயலாய்ச் சாற்றிடுவ தெத்தாலோ
நீக்குவா யைம்புலனு நீங்காத வன்பான்பா
யூக்குவா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௩௫)

ஆட்டுவிப்பாய் நீவினைக்கி டவ்வினையு நீதானே
யீட்டுவிப்பா யென்ன விசைத்திடுவ தெத்தாலோ
காட்டுவிப்பாய் பொய்யகலக் காண்பார்க்கு நின்னையின்பா
யூட்டுவிப்பா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௩௬)

பூட்டுவாய் நீகருவி பூண்பார்க்குப் பொய்வினையைக்
கூட்டுவாய் நின்செயலாய்க் கூறிடுவ தெத்தாலோ
வீட்டுவாய்த் தீதுக் கிருநிரயத் தாக்கிமல
மோட்டுவா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௩௭)

மதித்திடுமா லால்வினையு மனப்படலான் மலத்தைமுன்னுய்
விதித்திடலாந் தீயாய் விளம்பிடுவ தெத்தாலோ
சதித்திடலா னுளத்தைமலந் தருநிரயத் தாக்கியரு
ளுதித்திடுமா லாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௩௮)

பொய்விப்பா ரங்கத்திற் பூண்டபணி யான்மருளச்
செய்விப்பார் நின்செயலாய்ச் சேர்த்திடுவ தெத்தாலோ
மெய்விப்பா யுன்னை விரும்பவரு ளாரமுதத்
துய்விப்பா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௩௯)

விதித்திடவெப் பிறப்பினுளு மேவுமல மிக்கென்னைச்
சதித்திடவு நின்செயலாய்ச் சாற்றிடுவ தெத்தாலோ
மதித்திடநி னன்பரன்பை மன்னியருண் மெய்ஞ்ஞா
யுதித்திடுமா லாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௪௦)

தற்பகையைக் காய்ந்த தவர்க்குவிட மானமல
விற்பகையை நன்றென் றிசைத்திடுவ தெத்தாலோ
கற்பகலா மாதைக் கடிந்ததவத் தோருளத்து
ளுற்பவமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௪௧)

துன்றுவா யெல்லாந் துலங்கக் கருவிதந்து
நின்றதா லீட்டுவித்த னீயென்ப தெத்தாலோ
பொன்றுங்காற் றீநரகிற் பூட்டிமல மோட்டவுள
மொன்றுவா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௪௨)

வானே ருடலுளமும் வாங்கவுநீ தீயேற்குத்
தானே பிராரத்தஞ் சாற்றிடுவ தெத்தாலோ
தேனே யுயிர்க்குயிரே சேர்ந்ததவத் தோர்தரித்த
வூனேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௪௩)

காட்டுவாய் நீவினையைக் காதலித்து நிற்காகக்
கூட்டுவே னெற்கென்னக் கூறிடுவ தெத்தாலோ
யூட்டுவாய் நற்றவர்க ளூட்டவதை யுண்டுமல
மோட்டுவா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௪௪)

புல்குவா யெல்லாம் புணருவா யென்னையற
நல்குவா யவ்வினைக்கு நானென்ப தெத்தாலோ
செல்குவாய்க் குன்னருளைச் சேராதா ருள்ளமுற
வொல்குவா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௪௫)

வான்றீ செயினுமுள மன்னிமல மாற்றியருட்
டேன்றீ னிடவும்வினை சேருமென்ப தெத்தாலோ
மான்றீ யெனவிலத்தை மாற்றுவார் நெஞ்சமுதாய்த்
தோன்றீதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௪௬)

களித்திடுமா லிருவினையைக் கைக்கொடுக்க வாங்கிநிற்கே
யளித்திடுமா லெற்கென் றறைந்திடுவ தெத்தாலோ
குளித்திடுமா லின்பத்திற் கூடியயா னீயா
யொளித்திடுமா லாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௪௭)

கண்கதிரே நோக்கவிருள் காணாதென் றொளியருட்
டண்கதிரே நோக்கில்வினை தாக்குமென்ப தெத்தாலோ
விண்கதிரே திசை விளக்குமிரு ளோட்டுமரு
ளொண்கதிரோ யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௪௮)

யானேநீ யாமென்றன் னங்கமுநின் னங்கமதாற்
கோனே வினையெனக்குக் கூடுமென்ப தெத்தாலோ
நினை விரும்பிச் செயற்படுவா ரங்கமுறு
தோனேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௪௯)

காழே மலமகலக் காட்டி யுனைக்கருணை
வாழ்வே யளித்தும்வினை வைப்பதென்ப தெத்தாலோ
ஊழே யகலவரு ளுணுக்கி யூட்டுமருட்
டோழேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௫௦)

ஆவியுநீ யென்றன்னங் கமுநின் னங்கம்வினை
தாவியுமேற் சாருமெனச் சாற்றிடுவ தெத்தாலோ
சாவியமே னோக்குந் தவருளத்தை நீங்காத
வோவியமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௫௧)

ஊனை யுனக்கூட்டி யுண்டு முனக்குழைத்துங்
கோணையறுப் பார்க்குவினை கூடுமென்ப தெத்தாலோ
வீனே தொழில்புரியா மிக்கவர்க ளுற்றவருட்
டேனேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௫௨)

புண்ணியமேற் பாவங்கிட் போக்குமற நின்பாலிற்
பண்ணியதே யவ்வினையைப் பாற்றின்முத்தற் கேனுமோ
வெண்ணியுமே நின்னடியார்க் கீவார்கண் மும்மலமு
முண்ணையுமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே (௫௩)

நீக்குமா னெஞ்ச நினைவை நினக்காக
வாக்குமா லூழற் கணையுமென்ப தென்னுமோ
போக்குமாற் போக்கியுன்றன் பொன்னடியா லழகற்றி
யூக்குமா லாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௫௪)

ஒட்டிமா லைம்புலனை யுற்றவெனை மாற்றிநெஞ்ச
மீட்டுமா நிற்கா யிதாகிதமெற் கென்னுமோ
யாட்டுமா னுற்றவினை யற்றார்க் குணையமுதா
யூட்டுமா லாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௫௫)

அங்கத்தா னுற்ற வருநோ யணையவுமுன்
சங்கத்தான் மாற்றுமெற்கூழ் சாருமென்ப தென்னுமோ
மங்கத்தா னுழை மருவுமுயிர் தானுன
துங்கத்தா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௫௬)

சித்தமுந் தீய கரணமுஞ் சித்திலே
யொத்தமே யென்னமுத்தற் கூழென்ப தென்னுமோ
பித்தமே மாற்றிப் பெறுஞ்செயலு நின்செயலா
யொத்தமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௫௭)

கன்னமே வான்பொருளிற் காத லுனக்காக
வுன்னுமே நெஞ்ச முறுவினையெற் கென்னுமோ
வன்னமே தீக்கை மனுவான் மறைந்தருளாய்த்
துன்னுமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௫௮)

பரியுமே நற்பொருளைப் பற்றி யுனக்காகத்
தெரியுமே நெஞ்சம்பொய்த் தீவினையெற் கென்னுமோ
திரியுமே யாவிதனுச் சேர்ந்தபொரு ளோடன்பாய்ச்
சொரியுமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௫௯)

தேட்டமே நீயாய்த் திரண்டபொரு ளிற்காக
வீட்டுமேற் கன்க ளிதாகிதமெற் கென்னுமோ
நாட்டமே யெள்ளளவு நாடிலுனை மும்மலமு
மோட்டமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௬0)

நாவேயு மின்பமதை நண்ணிமன முன்னுவுக்
காவே கருத லருவினையெற் கென்னுமோ
சாவே விடுத்தவர் தற்பரத்தோ டுற்றபரந்
தேவேதென் னுவடுதண் டுறைநமச்சி வாயனே. (௬௧)

கெந்தமே நற்பொருளைக் கேடிலுனக் காகமன
முந்துமே யாகி னுறுவினையெற் கென்னுமோ
பந்தமே யற்றார் பரத்தோ டுறுபரமாந்
தொந்தமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௬௨)

வாக்குமே ஓற்று வரும்பொருளை நின்னடியி
லாக்குமே நெஞ்ச மருவினையேற் கென்றுமோ
நீக்குமேற் றீயமல நின்றதெலா நீயாக
ஆக்குமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௬௩)

பாதமே ஓற்ற பணிபலவு நின்னடிக்கென்
போதமே யேற்றப் புகின்வினையேற் கென்றுமோ
சேதமேற் றீயமலஞ் சேர்ந்தவெலா நீயாமென்
றோதுமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௬௪)

பாணிமே ஓற்ற பணிபலவு நின்னடிக்காய்ப்
பூணுமே நெஞ்சம் பொதுவினையேற் கென்றுமோ
நாணுமேற் றீயமல நன்குடனு நீயாக
பூணுமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௬௫)

அங்கமே ஓற்ற வவலவினை போக்கிநெஞ்சுன்
சங்கமே யாக்கில்வினை தாக்குமென்ப தென்றுமோ
மங்குமேற் றீயமல மற்றவெல்லா நீயாக்குந்
தங்கமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௬௬)

ஆகமே ஓற்றங் கணைவாரை யென்னெஞ்சுன்
பாகமே யாகப் படுத்தின்வினை யென்றுமோ
மோகமே யில்லாத முத்தர்தமை நீயாக்கும்
யோகமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௬௭)

போகமே நோக்கிப் புணர்வாரை யுன்னடிக்காம்
பாகமே யாகப் படுத்துவித்தா லாகாதோ
வேகமே யாக விசைவாரை நீயாக்கும்
யோகமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௬௮)

காதலே யுற்றுக் கருதுவார் தம்மையருட்
பாதமே நோக்குதற்குப் பண்ணுவித்தா லாகாதோ
பேதமே யற்றாரைப் பின்னமறக் காணுக்கு
மோதமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௬௯)

மயலே மிகநோக்கி மன்னுவார் நின்னடிக்காஞ்
செயலே விரும்புதற்குச் செய்வித்தா லாகாதோ
வியலே விரும்பி யிசைபாதார் தங்கட்
கயலேதென் றாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௭௰)

வாக்குமேற் காயமன மற்றதெல்லா முன்னடியை
நோக்குமே யோர்கருவி நோயாக நோக்கிமிக
நீக்கமே செல்லா நிறைவாகு நீயாக
வாக்குமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (எக)

இருபாற்கு மோர்கருவி யேயுமாற் றீதை
மருவார்க்கு நன்கருளே மன்னுவித்து மாலை
யொருவார்க்குப் பொய்யே யுறுவித்துத் தீதி
லுருவாக்கு மாவடுதண் டுறைநமச்சி வாயனே. (எஉ)

கன்மத்தா லஞ்ஞானங் காட்டலா நின்கருணைத்
தன்மத்தா னீயாகச் சாற்றியிட லாகாதோ
வன்மத்தாற் செய்கை வருவிப்பா ரீடழித்த
வுன்மத்தா வாவடுதண் டுறைநமச்சி வாயனே. (எங)

சாதியே யுற்றுரைச் சாதிசொல்ல லாங்கருணை
யாதியே யாகிலப்பே ராக்கியிட லாகாதோ
யோதியே சாதி யொளிப்பாரோ டொட்டாநற்
சோதியே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (எச)

பாயும் பரிபாயப் பாகனென லாங்கருணை
யேயு முயிரதனை யீசனென லாகாதோ
சாயு மலமதறச் சார்ந்தவுயிர் மேற்கருணை
தோயுந்தென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (எரு)

அங்கமேற் செல்லவுற்ற வாவியென லாங்கருணைச்
சங்கமே சொலினீயாச் சாற்றியிட லாகாதோ
பங்கமேற் றீயமலம் பற்றுமுட னீயாக்குந்
துங்கமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (எசு)

ஆகமே யுற்றுரை யாகமென லாங்கருணை
யேகமே யாகிலரு ளீசனென லாகாதோ
பாகமே யுற்றுரைப் பற்றியருட் டானுக்கும்
யோகமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (எஎ)

பொன்னோ டுறுஞ்சிலை பொன்னதென லாங்கருணை
தன்னொடுறு வாரையருட் டானெனலு மாகாதோ
வென்னோ டடல்வினையு மேற்றுமல மாற்றுமருட்
சொன்னதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (எஅ)

லிங்கமே யுற்றமனை லிங்கமென லாங்கருணைச்
சங்கமே லாவிபருட் டானெனலு மாகாதோ
பங்கமேற் றீயமலம் பற்றுமுயிர் யோன
துங்கமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (எகூ)

மந்திரமே சேரின் மனுவெனலா மெய்ஞ்ஞானத்
தந்திரமே சேரினருட் டானெனலு மாகாதோ
வந்தரமே நின்பதமென் றுதரிப்பா ரங்கமருச்
சுந்தரமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (அ௦)

சாதியே மாறுஞ் சமயத்தென லாஞான
நீதியே யாகிலரு ணீதியென லாகாதோ
வாதியே யாவியறி லப்பரத்தோ டுற்றவருட்
சோதியே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (அக)

நீரே கடமருவி னீரதென் லாங்கருணைச்
சீரே யுயிர்க்கருணைச் சித்தெனலு மாகாதோ
பாரே யிருவினையைப் பற்றிமல வேரறுத்த
கூரேதென் றாவடுதண் டுறைநமச்சி வாயனே. (அஉ)

முட்டேறு வாரையந்த முட்டதென லாங்கருணை
தொட்டேறு வாரையருட் சோதியென லாகாதோ
விட்டேறு வாருடலை மேவியருட் டானுக்குஞ்
கட்டேறே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (அங)

கெடுக்கும் வினையுருவாய்க் கெடுக்குமென லாமுன்னைக்
கொடுக்குங் கருணையுருக் கொண்டதென லாகாதோ
தடுக்கு மலமதறத் தத்துவமே நிற்கா
யொடுக்குந்தென் றாவடுதண் டுறைநமச்சி வாயனே. (அச)

பாதகமே செய்தாரைப் பாவியென லாங்கருணைப்
போதகமே செப்பிலருட் பொற்பெனலு மாகாதோ
சாதகமே நீயாந் தவத்தோர் தனுவையருத்
தோதகமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (அரு)

பித்தமே யுற்றாரைப் பித்ததென லாங்கருணைச்
சித்தமே யாகினீயாய்ச் செப்பியிட லாகாதோ
வத்தமே நீயாக வாற்சிப்பா ரங்கமருச்
சுத்தமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (அகூ)

தெய்யேற் களித்தபொருட் டெய்வமெதென லாங்கருணை
மெய்யேற் களிக்கிலருண் மெய்யென லாகாதோ
பொய்யேற்கு நின்னருளைப் பூட்டியுயிர் வாங்குமருட்
டுய்யோய்மெ தென்னவடுதண் டுறைநமச்சி வாயனே. (அஎ)

பாவியே யேற்றபொருட் பாவமென லாங்கருணை
மேவியே யேற்கிலருண் மெய்யென லாகாதோ
வாவியே நீயாக வற்றவர்மே லுற்றவருட்
டூவியே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (அஅ)

பொக்கமேய் வார்க்கீகை பொக்கமென லாங்கருணைப்
பக்கமேய் வார்க்குமருட் பண்பென லாகாதோ
வக்கமே நீயாக வாக்குவா ருள்ளமுற்ற
சொக்கமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (அகூ)

இழிவோர்கட் கீகை யிழிவெனலா நின்கருணை
மொழிவோர்கட் கீகையருண் முற்றென லாகாதோ
வழிவோ ரகமதூற்ற வங்கமென் றுஞ்செல்லா
வொழிவேதென் னவடுதண் டுறைநமச்சி வாயனே. (கூ0)

சிக்கேய்வார்க் கீகைமலச் சிக்கெனலா நின்கருணை
மெய்க்கேய்வார்க் கீகையருண் மெய்யென லாகாதோ
பொய்க்கேய்வா ருள்ளம் பொருந்தாத நற்கருணைச்
சொக்கேதென் னவடுதண் டுறைநமச்சி வாயனே. (கூக)

மத்தமே லுற்றாருன் மத்தமெதென லாங்கருணைப்
பித்தமே லுற்றாருன் பித்தமெதென லாகாதோ
சித்தமே நீயான சித்தர் செயலுகந்த
சுத்தமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (கூஉ)

பேயொத்தா ருற்றசெயற் பேயெனலா நின்கருணை
யாயொத்தார் செய்கை யருளென லாகாதோ
நீயொத்தா ரொத்து நினைக்கில்நின தாக்குமருட்
டேயொத்தா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (கூ௩)

கள்ளேய்வா ருற்றசெயற் கள்ளமெதென லாங்கருணை
நள்ளேய்வார் செய்கையரு ணல்லென லாகாதோ
வெள்ளேயு மில்லத் திசையாதா ரங்கமுற்ற
வுள்ளேதென் னவடுதண் டுறைநமச்சி வாயனே. (கூச)

மாலெய்வார் செய்கையந்த மையமிலனை வாங்கருணை
யாலெய்வார் செய்கை யருளெனனு மாகாதோ
தோலேயு மங்கந் துடைப்பா ருளம்புகுந்த
நாலேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௧௫)

தீங்குவா யெல்லாஞ் செலினு முனையளித்து
வாங்குவாய் நின்செயற்கு வைப்பதற்கென் கைம்மாறே
நீங்குவா யெல்லா நிரப்பியநன் முத்தருளத்
தோங்குவா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௧௬)

மருவனே நுற்றமருட் செல்வ மறவீசன்
றருவனே யென்னவுருத் தந்ததற்கென் கைம்மாறே
பருவநே ராகவருட் பண்பாங் கருணை
யொருவனே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௧௭)

களமே பலிப்பதற்காய்க் காணிற் களவி
னளவே கொடாதருளை யாக்குநிற்கென் கைம்மாறே
மௌவே யுனைநோக்கி மேவுவார் தங்கட்
குளமேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௧௮)

ஈற்றுவாய் நோயி லெழுவாயுந் துன்பத்தாற்
கூற்றுவாய்க் கேற்றவுருக் கொண்டதற்கென் கைம்மாறே
வேற்றுவா யைம்புலனும் வேறாக நன்மேனி
தோற்றுவா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௧௯)

மகப்பேறே யிச்சையால் வந்திக்க நின்னையந்த
வகைப்பேறே யன்றியருள் வைப்பதற்கென் கைம்மாறே
பகைப்பேறே யில்லமெனப் பார்த்தகல்வார் நெஞ்சிற்
சுகப்பேறே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௨௰)

அற்றேயு நற்கண்போ லாரிருளை யார்மதிக்கோர்
கற்றேயு நற்கதிர்போற் காட்டுநிற்கென் கைம்மாறே
யிற்றேய் விலாதவன்ப ரேயு மிடந்தோறு
முற்றேய்தென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௨௰௧)

தீனே நினைவுடற்குத் தேடினர் காணினைவைத்
தானே நினைத்தேடத் தந்ததற்கென் கைம்மாறே
தேனே யுனையடைந்த செல்வர்க்கமு தானவரு
ளோனேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௨௰௨)

அல்லையக் கண்ணாக்கி ளாயிழைதன் னின்பமில்லா
வில்லை யெனுமா லெரித்ததற்கென் கைம்மாறே
யெல்லை தவத்தோர்க ளின்பமே யாங்கவர்கள்
சொல்லேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௩)

பெத்தமே புன்முதலாய்ப் பெற்றதெல்லா நம்மருளைத்
தொத்துமே யென்னவுருத் தோய்ந்ததற்கென் கைம்மாறே
சித்தமே புக்கிருந்த தீவினையு நிற்காக்குஞ்
சுத்தமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௪)

மித்தே யகலவல மேவுதற்குப் பூவைபிடு
வித்தே தொழுமேனி வேண்டுகைக்கென் கைம்மாறே
முத்தே கருணை முளைத்தென்மல மாற்றுமின்பத்
தொத்தேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௫)

போகமே யுண்ணாதுன் பொன்னடியை நோக்கிநெஞ்சென்
னாகமே நீயா யமைத்ததற்கென் கைம்மாறே
மோகமே மிக்கோர் மொழியு முகக்கருணை
யோகமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௬)

இருவினையே தீதென்பா லெய்ந்ததுநிற் காக்கவுரு
மருவினையே பூசை மகிழ்தலுக்கென் கைம்மாறே
திருவினையே யிருவினையைத் தீர்க்குமெனு மன்பருணா
மொருவினையே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௭)

புத்திவா யெல்லாம் புகுந்துபொருள் வாங்கியென்பா
லத்துவாச் சுத்தி யமைத்ததற்கென் கைம்மாறே
பித்துவா யைம்புலனைப் போர்த்துநினக் காக்குமன்பர்க்
கொத்தவா வாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௮)

கன்னமே வாயாய்நீ கள்ளமல மைந்தினையும்
பின்னமே செய்தருளைப் பெய்ததற்கென் கைம்மாறே
வன்னமே யில்லா வடிவேமிக் கோர்க்குதவுஞ்
சொன்னமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௯)

காதே வழியாக்கிக் காதலுற நின்கருணைத்
தாதே யளித்த துணைவநிற்கென் கைம்மாறே
தீதே யகற்றவென்றன் றீயவுருப் போலமைந்த
சூதேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௰)

சேதனமே மாற்றித்தன் செய்தியதாக் குமுடனிற்
காதனமே யாக வமைத்ததற்கென் கைம்மாறே
சாதனமே பூண்டுடலைச் சாராதா ருண் ணுமரு
ளோதனமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௧௧)

சிறைவாய்ப் புலன்கணையாய்ச் சிந்தையுள் ளும்புக்கு
நிறைவாய் மலமொதுக்கி நின்றதற்கென் கைம்மாறே
யிறைவா நினைவுனக்கே யீந்தார்க ளுள்ளத்
துறைவாய்தென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௧௨)

பூவியமே னோக்கவெற்கிப் பூமிசையி னின்னுருவாம்
பாவியமே செய்த பரிசதற்கென் கைம்மாறே
யாவியைமே னோக்கியறி யாமையறுப் பாருளத்து
ளோவியமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௧௩)

உற்றே யிருவினையு மோர்வினையே யாகவுள
நிற்றே பிராரத்த நீக்குதற்கென் கைம்மாறே
நற்றேற் குனையும்பொய் நள்ளிருளுங் காட்டுமரு
ளொற்றேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௧௪)

நாட்டமே வாயாய் நடந்துளத்தை வாங்கிமலக்
கோட்டமே மாற்றியருட் கூட்டுதற்கென் கைம்மாறே
யாட்டமே நிற்கா யமைப்பார்க ளாடுமருட்
டோட்டமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௧௫)

மலமே யகலுகைக்கு வாய்த்த கருவிக்
குலமே யளித்தறிவைக் கூட்டுகைக்கென் கைம்மாறே
யிலமே பகைத்திங் கெழுவார்கட் குற்ற
நலமேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௧௬)

இருளே மலங்கருவி யீயாக்கா ணியும்
பொருளே யெனவிளங்கிப் பூண்டதற்கென் கைம்மாறே
மருளே யகல மருவுமுயிர் தானு
மருளேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௧௭)

ஊனே விரும்பி யுயிர்செருக்குந் தியமனந்
தானே யகலவருட் சார்ந்ததற்கென் கைம்மாறே
கோனே யுயிர்க்குயிரே கோலம்பல் வானவருட்
டேனேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௧௮)

அங்கமே நோக்கி யணையுமக ளிர்தஞ்
சங்கமே மாற்றவருட் டந்ததற்கென் கைம்மாறே
மங்கமேற் றீது மருவுங் கருணைகொண்ட
துங்கமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௧௯)

தந்திரமே திதனைத்துந் தானாய்த் தழுவுநெஞ்சுள்
மந்திரமே நோக்கவருள் வைத்ததற்கென் கைம்மாறே
யந்தரமே நில்லா வகன்றவறி வாய்நிறைந்த
சுந்தரமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௨௰)

தாயர்பா லுற்றுத் தருக்குமன முன்னடியிற்
பாய வருளளித்த பண்பதற்கென் கைம்மாறே
மாயு மலமதற வாழுமுயிர் தானாகத்
தோயுந்தென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௨௧)

தந்தைபா லுற்றுத் தருக்குமன முன்னடியில்
வந்தனையே செய்யவருள் வைத்ததற்கென் கைம்மாறே
சிந்தனையே நீயாய்ச் செறிந்தவுயிர் நீயாகுந்
தொந்தனையே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௨௨)

பாசமே தானாகப் பற்றுமன முன்பூசை
நேசமே தானாக நின்றதற்கென் கைம்மாறே
நாசமே யில்லா நவைவே றறுத்தவுயிர்
வாசமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௨௩)

காமமே யுற்ற கடுவிருளை யுன்மேனி
நாமமே யோட்டியரு ளூட்டுகைக்கென் கைம்மாறே
தாமமே சாத்தித் தருக்குந்தவத் தோருளத்துச்
சேமமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௨௪)

காயமே தானாய்க் கருதுமன முன்னடியிற்
சாயமேல் வைத்த சதுரதற்கென் கைம்மாறே
ஞாயமே யாக நடப்பார்க ளாடுமருட்
டோயமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௨௫)

தன்னியல்பே மாற்றித் தகும்பொதுவே யாக்குமல
மன்னியமே யாக்கைக் களித்ததற்கென் கைம்மாறே
யென்னியல்பே நீயா யெழுகைக் கெழுப்புமரு
ளுன்னியல்பே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௨௬)

மாற்றி மலத்தைத வருமுயிரை நீயாகத்
தேற்றி நடத்துஞ் செயலதற்கென் கைம்மாறே
யாற்றுந் தனுவை யறவிட்டார் தாமாகத்
தோற்றுந்தென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௨௭)

வன்னமே நிக்கை மருவமல வன்னமதைப்
பின்னமே யாக்குமருட் பேறதற்கென் கைம்மாறே
சுன்னமே நின்புகழைக் காதலிக்கக் காதலுற்ற
சொன்னமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௨௮)

மலமாலே நோக்கி வருமுயிரை நீயாங்
குலமாலே யாகவருட் கொண்டதற்கென் கைம்மாறே
பலமாலே யாகப் படுத்திமல மாற்றிமிக்க
நலமாலே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௨௯)

மலமே லொருமலமாய் வாய்த்த கருவிக்
குலமே யருளாகக் கொண்டதற்கென் கைம்மாறே
நலமே யிலதாக நாட்டுமலந் தீர்த்தவருட்
செலமே தென்னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௩௰)

இருவினையே மும்மலத்தோ டொன்றாக வேய்ந்து
வருவினையை நின்னடிக்காய் வைத்ததற்கென் கைம்மாறே
கருவினையே மாற்றியுனைக் காதலிப்பார் தங்கட்
கொருவினையே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௩௧)

இருவினையே திருவினையா யேயு மிருவினையு
மொருவினையே யாகவரு ளாக்குதற்கென் கைம்மாறே
மருவினையே யாக்கை மருவாரை மாற்றார்க்
கொருவினையே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௩௨)

தம்பனையே நீயாந் தகுங்காமே யானாகும்
வெம்பு மனல்வினையாய் வேண்டுகைக்கென் கைம்மாறே
நம்புமுயிர் நீயாக நாட்டிவினை மாற்றுமருட்
செம்பொனே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௩௩)

மந்திரமே நீயாய் மருவுமங்கம் யானாய்ப்பொய்ப்
பந்தவினை பாழாகப் பண்ணுதற்கென் கைம்மாறே
தந்திரமே நீயாய்த் தழுவிவினை மாற்றுமருட்
சுந்தரமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௩௪)

இங்கே வினையதனை யேயுமுடற் பாத்திரமுன்
னன்கையே யேந்தி நடக்குதற்கென் கைம்மாறே
மங்குமேற் றீயவுடல் மற்றுமுட லீயாத
துங்கமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௩௫)

இங்குப்போம் பாத்திரத்தி லிங்கிலையா லங்கத்துத்
தங்கும் வினைதீர்த்த சதுரதற்கென் கைம்மாறே
சங்கமே நீயாய்த் தரிக்கின்வினை மாற்றிமிக்க
துங்கமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௩௬)

உன்னியல்பே யென்னு டுருமியல்பா மென்னியல்பே
யுன்னியல்பை யொட்டி யுணர்வதற்கென் கைம்மாறே
தன்னியல்பே யெல்லாந் தவிர்ந்தநடை தானாகு
முன்னியல்பே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௩௭)

**சிறப்புப்பாயிரம்.**

உற்றதனு வம்பலவா ணன்னு வடுதுறையுட்
பற்றதனாற் பஞ்சாக் கரமாலை—கற்ற
விளம்போலுண் டேதுணையெல் லார்க்குநமக் கிந்த
மனம்போலுண் டேதுணையா மாண்பு.

**நமச்சிவாயமாலை முற்றியது.**

**திருச்சிற்றம்பலம்.**



**பண்டாரசாத்திரம் முற்றும்.**

**மெய்கண்டதேவர் திருவடி வாழ்க.**



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## அம்பலவாணதேசிகர் அருளிச்செய்த

# பாஷண்ட நிராகரணம்.



கட்டளைக்கலித்துறை.

உருவாய்த் திகழ்ந்தங் கறம்பல வோதி யுயர்கயிலை
யருவா யுனக்கில்ல யாம்லிங்க தாரண மன்னுதவ
மொருவா தவர்க்கு மிலையா மகுசியை யோங்கிமுன்னாட்
குருவாய்த் திகழ்ந்தவ ராரோதென் றில்லையிற் கொற்றவனே. (க)

கோவாற் றிகழுந் தனுலிங்க தாரணங் கோவினங்க
மேவா திருக்கும் விதியென்கொ லோலிங்க மேவியவா
நாவா லிகழ்வதற் கோசரி யாதியை நண்ணியன்பர்
தேவாய்த் திகழ்வதற் கோசொல்லு வாய்தில்லைத் தேசிகனே. (உ)

இருமுச் சமயத் திலைவீர மெங்ங னெழுந்திவர்க்குத்
தருமச் சமயஞ் சரியாதி நான்கிற் றனுவிலிங்கம்
வருமெந்தப் பாதமந் நான்கினு மாறை மருவியவை
பொருமா லிவர்கதி யேதோதென் றில்லையிற் புண்ணியனே (ந)

மானுன் முகலிங்க தாரண மோமலை யான்மருவுங்
கோனுன நீலிங்க தாரண மோகுக னேடுமுன்னேன்
வானு னவர்லிங்க தாரண மோமதி மாறுகொண்ட
வூனு னவர்கதி யேதோதென் றில்லை யுயர்ந்தவனே. (ச)

நாவாற் றிகழு மனுவிலை யங்கத்தை நண்ணியதை
யோவா கிசித்திலை யாலந்தத் திக்கையு முற்றதின்றாம்
பாவாற் றிகழுங் குருவிலை யாகும்பொய்ப் பாஷண்டர்சென்
றோவா நிலையது வேதோதென் றில்லை யுயர்ந்தவனே. (ரு)

உதிக்கும் பரார்த்தத் துயர்சரி யாதி யுடலிலிங்கம்
பதிக்கின்ற பாஷண்டர்க் கேது பரார்த்தமிப் பண்புபற்றி
விதிக்கு நடையென் விலக்கினை மேற்கொளும் வினாரெதாய்
மதிக்கவென் னம்பல வாணதென் றில்லையின் மன்னவனே. (சு)

எழுவா ரெவருஞ் சமயந்தம் மீசனை யேத்துதலை
வழுவா ரிறைசினம் போற்றரித் தாருமில் வையத்துனைத்
தழுவா ரிவரெச் சமயமிப் பாஷண்ட சண்டிகள்பொய்
கழுவா ரிவர்கதி யேதோதென் றில்லையிற் கண்ணுதலே. (எ)

காயத்திற் சின்னந் தரிக்கவக் காயமுங் கண்ணியதாய்த்
தோயத் திரிமல மாயுமச் சித்தத்திற் றுண்மையருட்
பாய வவாவியப் பண்பாம்பொய்ப் பாஷண்டர் பற்றிலிங்க
மேயத் தருநிலை யேதோதென் றில்லை யிறையவனே. (அ)

உதிக்குங் குருலிங்க சங்கமந் தத்தமக் குற்றசின்ன
மதிக்கின் மயக்க மிலவாகும் லிங்கத்தை மற்றிரண்டிற்
பதிக்கி லவையங்கம் பார்க்கிலொன் றுமற் பதிமயக்காய்
விதிக்கும்பொய்ப் பாஷண்டர்க் கேதோ கதிதில்லை வேதியனே. (௯)

தாரண லிங்கங் கதியேற் றருமணி நீறெனவாங்
காரண மேலொன்று காண்பதுண் டாங்கதி பூசையெனிற்
றூரண நீக்கத் தகும்வழி பாடு தனுச்சுசியுஞ்
சீரண மாற்கதி யேதோது தில்லைச் சிதம்பரனே. (௰)

தரிப்பார் தரிப்பவை யெல்லாந் தரித்தங் கருச்சனையைத்
தெரிப்பா ரெனமறை செப்பிய தாலிங்க மங்கமுறப்
பரிப்பார்க் கருச்சனை யேதா மெனவந்தப் பாருமிதைச்
சிரிப்பா ரவர்கதி யேதோதென் றில்லைச் சிதம்பரனே. (௰௧)

பாதத் துறுசலம் லிங்கத்தின் மேற்படின் பன்னுமனுப்
பேதித் திடும்பஞ்ச சூதகம் பின்னுறச் சைவமறச்
சேதித் திடுமிந்த வஞ்சமுந் தன்னினுந் தீயதென
வாதித் திடுங்கதி யேதோதென் றில்லையின் மன்னவனே. (௰௨)

மண்ணிற் றிகழ்லிங்க மங்கத்தின் மேல்வைத்து மற்றதன்பேர்
நண்ணித் திகழ்வித்து மாலிங்க நம்மினுந் தண்ணிதென
வெண்ணுற் றிகழும்பொய்ப் பாஷண்டர்க் கேது சமயமெனக்
கண்ணிற் றிகழ்வது முண்டோதென் றில்லையிற் கண்ணுதலே. (௰௩)

பூவா லயமைய மாமாற்பொய் யங்கத்திற் பூண்டலிங்கந்
தேவா லயமென்ப தேதாஞ் சகரட்சை சங்கமமேற்
காவா லயஞ்சரி யாதிபொய் பாஷண்டர் கண்டநிலை
பாவா லயமென்ற தில்லையு ளாடும் பராபரனே. (௰௪)

தரிக்கிற் றனுலிங்க மாமந்த லிங்கமுஞ் சங்கமமா
யிருக்கு மெனிற்குரு லிங்கமற் றேநிய சங்கமமும்
விரிக்கிலொன் றல்ல திரண்டு மயங்குமிம் மூன்றுமொக்கத்
தெரிக்குமெவ் வாறுசொ லம்பல வாதில்லைத் தேசிகனே. (௰௫)

தோற்றுங் குருலிங்க சங்கம மூன்றிற் றுலங்கிநெஞ்சை
யாற்றி லதத்து விதமாகும் லிங்கத்தை யங்கமுற
வேற்றி லதத்து விதமோ சரங்களி லேற்றியவை
மாற்றிய பாஷண்டர்க் கேதோ கதிதில்லை மன்னவனே. (௰௬)

ஆரணம் போற்றுங் குருலிங்க சங்கம மாருயிரிற்
றூரணஞ் செய்கென வவ்வுரை தப்பித் தனுவிலிங்கங்
கோரணி செய்யும்பொய்ப் பாஷண்டக் கொத்தறக் கூர்த்தசைவச்
சீரணி செய்துநற் றில்லையு ளாடுஞ் சிதம்பரனே. (௰௭)

நோக்கிலிட் டங்குருச் சங்கமமென்று நுவலிலிங்கந்
தாக்கிலிட் டம்மற்ற லிங்கம தென்றும்பின் சாற்றிநெஞ்சு
மூக்கிலிட் டம்மங்க மொன்றூந் தனுவி லுறுமசுசி
மாக்கிலிட் டார்கதி யேதோதென் றில்லையின் மன்னவனே. (௰௮)

இட்ட மிவர்க்கிவ ரென்றூ லிவரோ டிவருமுறக்
கட்டிக் கிடப்பது வோமனமே மனங் காதலித்தங்
கொட்டிக் கிடப்பதன் றேலிங்க மங்கத்தை யோங்குமெனத்
தெட்டிய பொய்யர் கதியேது தில்லைச் சிதம்பரனே. (௰௯)

பரிசிக்கப் பட்டதை யிட்டமென் றூயைம் புலன்கள்பற்றித்
தெரிசிக்கப் பட்டது மிட்டமன் றேமனஞ் சேர்ந்தவையோ
டுரிசிக்கப் பட்டதொன் றுண்டே லெவையு மொழிந்தனபொய்க்
கரிசிக்கப் பட்டவர்க் கேதோ கதிதில்லைக் கண்ணுதலே. (௨௰)

காயத்திற் கட்டிய திட்டமென் றூயது காணுமனந்
தோயத் தருலிங்க மேதோவப் பாவகந் தோய்ந்ததன்மே
லேயப் படுலிங்க மேதோவிம் மூன்றின்மெய் யொன்றையன்றி
மாயப் படும்பொய்யர்க் கேதோ கதிதில்லை மன்னவனே. (௨௧)

மணந்தாள வன்மங் கிலிபத்தை மன்னி வருஞ்சுகத்தை
யணந்தா ளறிந்து மவனைத்தன் னங்கத் தருங்கயிற்றூற்
புணைந்தா ளிலிபவன் வேளைக ணோக்கிப் புணர்ந்துமங்கந்
தணந்தா ளிவனென்ப ரோதில்லை வாழுமெய்ச் சங்கரனே. (௨௨)

ஆவியி னின்றது போலிங்க வங்கத்துந் தங்குலிங்கம்
பாவிய மன்றென்ற தேதோ வெனின்மலம் பற்றிநெஞ்ச
மேவிய தாலிங்க மங்கத் தசுசியை விட்டுலிங்கந்
தாவிய தேகதி யன்றோதென் றில்லையிற் சங்கரனே. (௨௩)

பிறிவித்த தத்து விதத்தையப் பேதக மெய்ப்பொருளை
யறிவிற் றரித்தது முன்போலிவ் வங்கத் தசுசியறப்
பிறிவித்த லிங்கம் பரிசித்த லேவிதிபான் மையறச்
செறிவித்தல் பாஷண்ட மன்றோதென் றில்லைச் சிதம்பரனே. (௨௪)

புலமே விளையுந் தனுவே யெனினும் புறத்தசுசி
சலமே யளையத் தவிர்வதன் றோலிங்கந் தங்குமங்க
மலமே யளையுமெவ் வாறது மாறு மலமதறுங்
குலமே யளையுங் கதியேது தில்லையிற் கொற்றவனே. (௨௫)

சரியாதி மூன்றுமெய் யாவிமெய்ஞ் ஞானந் தருதியங்க
மரிதா லறிவென்ப தேதாகும் லிங்கம தங்கமுறிற்
பெரிதா மசுசி பிறவாது ஞானம்பொய்ப் பேதைமையற்
கரிசா மிவர்கதி யேதோதென் றில்லையிற் கண்ணுதலே. (௨௬)

ஈட்டு மருளைச் சரியாதி நான்கு மிவையலவா
யோட்டு முருலிங்க தாரண மால்வைய முப்பவந்தோ
காட்டுங் குருமற்றச் சங்கம மீதைக் கருதிற்பொய்யைப்
பூட்டு மவரல வோதில்லை வாழும்மெய்ப் புண்ணியனே. (௨௭)

அழைப்பார்தம் போலவர் பேரேற்றி யாங்கவர் தாளையுற்றுப்
பழிப்பா ரவர்பழி தம்பழி யாகப் பணியுமறப்
பிழைப்பார்பொய்ப் பாஷண்ட ரங்கத் திலிங்கம் புனைந்துபொய்யி
லுழைப்பா ரிவர்கதி யேதோதென் றில்லை யுயர்ந்தவனே. (௨௮)

மண்டிகழ்ந் தாளு முனையங்கத் தாக்கி வருஞ்சரியைத்
தொண்டிகழ் விப்பவர் சங்கம ரோதொன்மை யர்ச்சனையைக்
கண்டிகழ் வித்து விளக்கினைக் கைக்கொள்ளுங் கையருன்பா
லெண்டிகழ்ந் தேறுவ தெங்ஙாட்டென் றில்லை யிறையவனே. (௨௯)

பார்த்திகழ் லிங்கம் பழித்துத்தம் பாணியி லிங்கமுறச்
சேர்த்துமெய்ஞ் ஞானச் சரியாதி நான்கையுந் தீதெனவே
கூர்த்திகழ் விப்பவர் சங்கம ரோகொலை யாமயக்கை
யார்த்தவர்க் கேது கதியோதென் றில்லையி லாரமுதே. (௩௦)

தோயும் பார்த்தஞ் சொலுந்தவ செல்லாந் துறந்துமற்றக்
காயங் கொளுலிங்கங் கற்புமற் றோர்லிங்கங் காதலுறிற்
சாயு நரக மெனுமிந்தப் பாஷண்டச் சங்கமெல்லா
மாயத் தரும ருளம்பல வாதில்லை மன்னவனே. (௩௧)

தங்கு மவையவ மெல்லாந் தரிக்கத் தகுமுயிர்தன்
மங்கையைத் திண்டின் மசபிழப் போவங்க மன்னும்லிங்க
மெங்குந் தருலிங்க நியங்க லிங்க மிழக்கிலொன்றைப்
பொங்கத் தரிப்பவர்க் கேதோ கதிதில்லைப் புண்ணியனே. (௩௨)

சரியாதி நான்கிற்கு மோரியல் பாகுந் தனுவிலிங்கங்
கருதா திவற்றிலொன் றாக விலக்கைக் கருதுவிதி
யரிதாத லாற்பிழை யன்றேபொய்ப் பாஷண்ட ராதரிக்குங்
குருவா ரிவர்கதி யேதோதென் றில்லையிற் கொற்றவனே. (௩௩)

அடக்கோடு லிங்கந் தரிப்பார்மெய் யாவி துறந்துமந்த
விடக்கோ டடக்கிப் புதைப்பார்தம் முச்சிட்ட மேலவர்க்கா
யடுக்கோ டளிப்பவர் சங்கம ரோபொய் யருசியதா
மிடக்கோ ரிவர்கதி யேதோதென் றில்லை யிறையவனே. (௩௪)

வாழ்விலும் வாழ்வறச் சாவிலு மற்றென் னிறையையறச்
சூழ்வது மில்லை யெனுமால்மெய் லிங்கத்தைச் சூட்டியவர்
தாழ்விலுந் தாழா துயரினுந் தம்மொடு சேர்வதென்னும்
பாழினும் பாழிதிங் குண்டோதென் றில்லைப் பராபரனே. (௩௫)

ஏதோ தகம்பதி யேதோமெய் யீசனுக் கெச்சிறன்றன்
பாதோ தகம்படைத் தாட்டு மிதாற்பதி யாயிவனு
மாதோ தகங்கொள்ளும் பாஷண்ட மார்க்க மயலதுவாந்
தீதோ தகுங்கதி யேதோது தில்லைச் சிதம்பரனே. (௩௬)

சாத்திரத் துள்ளது மன்றுந் தனுவிற் றரிக்கும்லிங்கஞ்
சூத்திரத் துள்ளது மன்றுகுஞ் சூட்சத் தொகுதிலிங்க
மாத்திர மற்ற வதைமற்றுந் தீதென மாற்றியதா
மீத்ததா லீதென்ப தேதாகுந் தில்லை யிறையவனே. (௩௭)

மெய்யிற் புனைந்த சிவலிங்கம் பீடத்தின் மீதினல்லாற்
கையிற் புனைபவுங் கண்டதுண் டோகலி யோகழிந்த
பொய்யைப் புகழுமெய் யாமோ புலமற்ற புல்லருக்கிச்
சைவத் திறமென்கொ லம்பல வாதில்லைச் சங்கரனே. (௩௮)

நாரத் துறூர்புறந் தூய்மையெவ் வாறுறு நன்றுமலத்
தூரத் தொடுலிங்கந் தோய்வார்க்கெவ் வாறகத் தூய்மையுறுஞ்
சாரத் தவஞ்சற்று மில்லாத பாஷண்டச் சண்டிகட்கவ்
வீரத் தனமென்கொ லம்பல வாதில்லை வேதியனே. (௩௯)

போரைத் துடைத்தவர் வீரரென் பார்பொய்ப் பகைகளெல்லாஞ்
சோரத் துடைத்தவர் வீரரென் பார்சரி யாதிதொக்கும் [கவ்
வேரைத் துடைத்துப்பொய் மார்க்கத்தை மேற்கொண்ட வீணருக்
வீரத் தனமென்கொ லம்பல வாதில்லை வேதியனே. (௪0)

ஏயு மிடக்கரம் லிங்கமிவ் வங்கத்துட் டங்குமஙங்
காயுங் காமெக் கரமண மூட்டுங்கை யேததனுற்
றேயு மசுசி சுசியெந்த வாறுந் தொடாதுபுத்தி
மாயு மிவர்க்குக் கதியேது தில்லையின் மன்னவனே. (௪௧)

கற்புடை யாடுணை மாய்ந்தான் மடிவது கற்பவன்றுன்
சொற்புனை யாளுடன் மாய்வதுண் டோதுணை பாரியொத்த
பொற்புடை யாவிசென் றுலிங்க மாயப் புதைப்பர்கெட்டேன்
பற்பல போதகத் தாலிங்க தாரணம் பாஷண்டமே. (௪௨)

அன்னிய லிங்கந் தொழாரங்க லிங்க மகலலிங்க
முன்னிய வாறென் றிருக்கோயி லிங்க முதித்ததுவாற்
றுன்னிய லிங்கத்திற் பேதமுண் டாக்குந் துரோகநெறி
மன்னிய வாறென்கொ றில்லையு ளாடிய மன்னவனே. (௪௩)

நீக்கிய தீய செனனவஞ் சூதக நீக்கவரு
ளூக்கிய தாமெனும் வேதமத் தீதை யொழிக்கவருட்
டேக்கிய காலமச் சூதக மேதுந் துடர்ந்துடலைத்
தாக்கிய வாறென்கொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௪௪)

புந்திக்குந் தீது புலாலுண்டல் போக்கிற்பொன் னரருளே
பந்திக்கு மென்னுமப் பான்மையி னுலதைப் பாற்றியருட்
சிந்திக்கு நாளது தீய புலாலது சேர்ந்துடலைச்
சந்திக்கும் வாறென்கொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௪௫)

புலப்படு மில்லந் துறக்கமெய்ஞ் ஞானம் பொருந்துமெனச்
சொலப்படும் வேதஞ் சொலுமா லதனைத் துறந்தருளி
னிலைப்படுங் காலத்து நீங்கிய வில்ல நெருங்கியுடற்
றலைப்படும் வாறென்கொ றில்லையு ளாடிய சங்கரனே. (௪௬)

அந்திக்குந் நிய தகனுமெய்ஞ் ஞான மனுகுதிநெஞ்சிற்
சிந்திக் திருதைத் தெசித்திடு மாலென்னுஞ் சீர்மறையால்
வந்திக் கருளை மருவிய கால மருளிருது
சந்திக்கும் வாறென்கொ தில்லையு ளாடிய சங்கரனே. (௪௭)

மரிக்கின்ற சூதக மாற்றமெய்ஞ் ஞான மருவுமென
விரிக்கின்ற தாகமம் விட்டுமெய்ஞ் ஞானம் விளைந்துநெஞ்சிற்
றெரிக்கின்ற காலத்துச் சூதக மேது திரண்டுடலிற்
றரிக்கின்ற வாறென்கொ தில்லையு ளாடிய சங்கரனே. (௪௮)

பாவிய சாதியிற் சூதக மாற்றப் பரிந்தருளே
யாவிய தாமெனும் வேதமத் திதை யகற்றியருண்
மேவிய காலமச் சூதக மேதும் விரவியுடற்
றூவிய வாறென்கொ தில்லையு ளாடிய சங்கரனே. (௪௯)

மங்கிய வெச்சிலச் சூதக மாற்ற மருவியருட்
பொங்கிய தாமெனும் வேதமத் திதினைப் போக்கவருட்
டொங்கிய காலத்துஞ் சூதக மாற்றுஞ் சுகமுடற்குத்
தங்கிய வாறென்கொ தில்லையு ளாடிய சங்கரனே. (௫௦)

பெருக்கும்பொய்த் திவினைப் பெத்தற்குச் சூதகம் பேதமென
விருக்கு மியம்பிய தாஞ்சிவ திக்கைக் கிசைந்தமிக்கோ
ரொருக்கிய தாமிதைப் பாவிகண் ஞான வுயர்ச்சியெனத்
தருக்கிய வாறென்கொ தில்லையு ளாடிய சங்கரனே. (௫௧)

சேதித்த தாம்பஞ்ச சூதகந் திக்கையிற் றீதிருட்கோ
ளாதித் தனுமருட் டேய்க்குமெய்ஞ் ஞான மடைந்ததனைப்
பேதித்த தாம்பொய்யர் சூதக மெய்யருட் பெற்றியெனச்
சாதித்த வாறென்கொ தில்லையு ளாடிய சங்கரனே. (௫௨)

சேரும்பொய்ச் சூதக மாதி சரிதையைச் சேரினந்நாட்
பேருந் தனுவறப் பேசாத ஞானவப் பெற்றியுரு
வாரும்பொய்ப் பாவிகள் சூதக மாதி யடைந்துமருட்
சாரு மதுவென்கொ தில்லையு ளாடிய சங்கரனே. (௫௩)

அண்டத்திற் றாபித்த நாளது மாலய மானதென்னப்
பிண்டத் திலிங்கத்தைத் தாபித்த நாளந்தப் பெற்றியென்பா
ரண்டத்தி லிங்கத்திற் சூதக மேது மடாதுடலிற்
றண்டுற்ற வாறென்கொ தில்லையு ளாடிய சங்கரனே. (௫௪)

தாபித்த லிங்கம் பதிமற்ற வங்கஞ் சதியதெனப்
பாவித் திடுமப் பதியோ டிறக்கப் படாதுகெட்டேன்
சேவித்த வங்கச் சதியே சிதைந்திடச் சேர்பதியைச்
சாபித்த வாறென்கொ றில்லையு ளாடிய சங்கரனே. (ருரு)

விதித்த விதிக்கு நிஷேதமுண் டேலவ் விதியுமின்றாய்
மதித்தது வாமிம் மதிக்கொரு மேன்மதி மன்னிவந்தோ
வுதித்தது வாந்திய மக்கட்குப் புன்சொ லுயர்த்திவஞ்சர்
சதித்தகெவ் வாறென்கொ றில்லையு ளாடிய சங்கரனே. (ருசு)

சூதக மேது மிலைமற்றச் சூதகர் சூதகராம்
பாதகர் தம்மைப் பரிசிக்கிற் சுத்தராப் பாதகராந்
தோதகர் தம்மைத் தொடிற்றீட்டுப் பாவிகள் சூதகத்தைச்
சாதக மேதுசொல் றில்லையு ளாடிய சங்கரனே. (ருஎ)

சூட்டிய போதை மறந்தான் பாதத்திற் சூட்டமறை
நீட்டிய பாவ மெனத்தங்க ளுச்சிட்ட நீள்பதத்தி
லாட்டிய நீர்முடிக் காட்டுமஞ் ஞானமெய்ஞ் ஞானமெனச்
சாட்டிய வாறென்கொ றில்லையு ளாடிய சங்கரனே. (ருஅ)

வீட்டிய சூதக மைந்தும் விழைந்து விதிவழியே
கூட்டிய பூசையுஞ் சேவையும் விட்டுக் குருபதத்தி
லாட்டிய நீராற் காட்டுமஞ் ஞானமெய்ஞ் ஞானமெனச்
சாட்டிய வாறென்கொ றில்லையு ளாடிய சங்கரனே. (ருசு)

வழுவிய தாம்பஞ்ச சூதக நீருற வாய்த்தமல
நழுவிய தாமருட் கோலத்தை நாட நடிக்குமருட்
கழுவிய தாம்பஞ்ச சூதக மென்னக் கருதிலிங்கந்
தழுவிய வாறென்கொ றில்லையு ளாடிய சங்கரனே. (சுய)

வெண்பா.

பாஷண்டம் போகப் பகர்ந்தா னறுபதையும்
வீழண்டத் தெய்தாமல் வீடெய்த—வேழண்டத்
துள்ளா வடுதுறையி லுற்றம் பலவாணன்
விள்ளா வறிவாய் விளைந்து.

கைபெற்றே மாக்கைவிடு கைபெற்றேம் பாஷண்டங்
கைபெற்றேங் காட்டு நிராகரண—மீபெற்றுச்
சேர்க்கம் பலவாணன் செய்தா வடுதுறைச்சொல்
லேற்கப் பெறுகையினு லே.

பாஷண்ட நிராகரணம் முற்றியது.

திருச்சிற்றம்பலம்.

—*—

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அனுபோக வெண்பா.



அளித்த கருணை யனுபோகந் தன்னை
விளக்கியொரு பாவின் விரிக்க—வுளக்கணிரு
மெய்யாகோ முத்திநகர் மேனியசீர் நற்கருணை
யையர் நமச்சிவா யா. (௧)

ஆசுற்றார்க் கில்லை யறிவுடைமை யாங்கரன்பாற்
றேசுற்றார்க் கெல்லாந் தெரிவாகு—மாசற்ற
நல்லார்க் கறிவு நடக்குமா லென்கருத்தைச்
சொல்லாய்த் தொடுத்தேன் றுணிந்து. (௨)

தோற்றும்போ துற்றுத் தொடர்ந்த குருடதனை
மாற்றும்போ தின்று மறைப்பேனுங்—தேற்றுதற்கு
மற்றொருவர் சொல்ல மதித்ததுபோற் றீயமல
மற்றவற்குச் சற்குருவே யாம். (௩)

சரமசர மென்னத் தரிக்கு முயிரச்
சரமசர மன்றாகத் தங்குஞ்—சரமசர
மீசற் குடைமை யிசைந்தவுயிர் தொண்டாகு
மாசெவர்க்கும் பேதமென மன். (௪)

பொறியும் புலனும் பொருந்திச் சகத்தி
லறியும் பகுதி யறிந்து—நெறியி
னடக்கு முடலதனை நண்ணியதோ ராவி
யெடுக்குமென்ப தெல்லா மிழுக்கு. (௫)

பாதாதி கேசப் பரப்புமே னின்றுதனைப்
பாதாதி கேசப் பரப்புள்ளே—யேதாகுந்
தானென்ன நோக்கித் தனையறவே கண்டமல
னனுக்கே யாவியிலை யென். (௬)

பரந்த கருவிப் பரப்பெல்லாந் தானய்
விரிந்த வறிவினையும் விட்டுத்—தெரிந்த
மனமோ பொறியோ மருவியநாற் பூதத்
தினமோவென் பானுக் கிசை. (எ)

தானென்ற காயந் தனதென்ற போதாவி
தானன்றி நின்றதுபோற் சாருமே—யூனன்றி
நின்றவனே செத்தா னிகழ்பிணமாங் காயமறச்
சென்றதனை யுள்ளதெனத் தேறு. (அ)

தான்றிரிந்து காயமே தானய்க் கருதுமுயி
ரூன்பிரிந்து காண்ட லுடற்குருவங்—தின்பொருந்துங்
காயஞ் சடமென்னக் காண்ட றெரிசனமா
மாயுமுட லென்கைசுத்தி மாண்பு. (௯)

காயமே யுற்றுக் கருதும் பிரமமல
மாயமே யுற்ற மயக்கமா—ஞாயமா
மங்கமே யற்று லகன்ற பிரமமேற்
சங்கமே யில்லைத் தனி. (௰)

பரமன் கருணைப் பசுபதியாய் நின்ற
பிரமனு னென்றுமிகப் பேசில்—வரமெனக்குத்
தாதா வெனவிறைஞ்சித் தாழ்ந்துநிற்கும் பேதமுனக்
கேதா மிதனை யியம்பு. (௰௧)

கோனனே யென்னிற் குறித்திரண்டுங் காணமற்
போனதே யன்றோ புகலுங்காற்—றனன
வாறே திரிவதற மன்னிற் கருணைநெறிப்
பேறே யுறுவதுமெய்ப் பேறு. (௰௨)

தன்னடையும் பாழாய்த் தகுமப் பிரமமெனு
மன்னடையும் பாழாக வந்ததாற்—றன்னு
மிருவருமே கேடா யிருப்பதுவோ முத்தி
வரமெனக்குச் சொல்வாய் மகிழ்ந்து. (௰௩)

பாசம் பதியென்னப் பற்று மிரண்டாக
நாசமே யின்றி நடக்குமாற்—பாசமாய்த்
தான்றிரிந்து நின்ற தகைமைபோற் றற்பதியாம்
வான்றிரிந்து வைத்தாய் மதி. (௰௪)

மருவுதனுக் தானாக மன்னியதோ ராவி
திரிவாய்த் தனையிழந்த சீர்போ—லொருவா
வரனே யெனக்கருதி யாங்குனக்குக் கேடு
தரினே யுனக்கேது சார்பு. (௧௫)

நாடியோ வென்போ நரம்புசிக் கோழையோ
தேடி யெனையறியேன் றேருங்காற்—கூடியதோர்
பாதாதி கேசப் பரப்பெல்லா நீயான
தேதா மறிவே தியம்பு. (௧௬)

தன்றமரை நோக்கித் தகும்பேருங் கேட்டென்னைக்
கண்டீரோ வென்னக் கருதிப்பின்—மண்டிப்
புறப்பட்டான் பூதலத்தார் போற்றுமிறை தானென்
றுறப்பட்டான் போலவுனை யோர். (௧௭)

அறியும் பொறியி லறியாத போது
பிறியுந் தனுவே பிணமாற்—குறியதனை
நட்டார்க் கறிவே நடக்குமே யாங்கதனை
விட்டார்க் கறிவோ வியப்பு. (௧௮)

தோற்ற மொடுக்கஞ் சொனுமாவிக் கில்லாத
மாற்றம் பொறிதனக்காய் மன்னுமாற்—போற்று
முடலகல வைத்தார்க் குயிர்நிலைமே லையப்
படவருவ தில்லையெனப் பார். (௧௯)

அங்கமே யாவிக் ககம்புறம்பா லங்கமெனுஞ்
சங்கமற்றா லுண்டோ தரிக்குமிட—மங்க
மொருபடித்தே யன்றங் குயர்விழிவா லாவி
பெருவடிவே யாகப் பெறும். (௨௰)

நிறைவே குறைவை நிறைக்குமற் றாவி
குறைவேல் நிறைவுசெய்யக் கூடா—வறவே
பெரிதுஞ் சிறிதுமுறும் பெற்றியென மண்ணில்
வருமே சடமாய் மரித்து. (௨௧)

சம்புவுக்கே யல்லாற் சருவ வியாபியென்ப
தம்புவியின் மாக்கட் கடாதென்னி—னம்புதற்கங்
குற்றபோ தத்துவித மன்றோதா னெவ்வாமற்
சற்றே குறையிற் சடம். (௨௨)

நிறைவே யரன்போ னிகழ வறிவின்
குறைவேன் வருமாறு கூறேற்—பொறியி
னுணர்த்துவா ரின்றி யுணராதா லங்கண்
குணர்த்துமா றில்லையெனக் கொள். (௨௩)

அரையனைப்போ லெஞ்சா ணவனடிமை யாவா
ரரையனுக்கொப் பாமோ வறையி—லரையனவ
னேவுதலே செய்ய வியன்றபணி கேட்பதுபோ
லாவதுவே யாவிக் கணி. (௨௪)

எல்லாப் பொருட்கு மியன்றநிறை வாலறியச்
செல்லா குணமதற்கே சேருமா—னல்லாய்
நிறைவே யறிவாமால் நீங்கா மலத்தின்
குறைவோ வறியாமை கூறு. (௨௫)

நிறைவேற் பிறவி நிகழும்போ தாவி
குறைவே நிறைவதற்குக் கூடா—நிறைவேபொய்
யங்கத்தை யொத்தங் கதுவா யறியுமலச்
சங்கத்தா லுற்ற சதுர். (௨௬)

நிறைவா முயிரி னினைவாற் பிறவி
துறையாய் நடக்குந் தொடர்பை—யிறையான்
நிலவுமறி வானீத்து நீடருளைச் சேர்ந்து
விலகாத தன்றோ விபு. (௨௭)

இலங்கும் விளக்கங் கிலங்காத போது
துலங்கு நயனந் துலங்கா—விலங்குமுடற்
றோற்றும்போ தாவி துலங்கு மதனையற
மாற்றும்போ துண்டோ மதி. (௨௮)

போக்கும் வரவும் பொருந்தியதோர் தீபத்தைத்
தாக்கு நயனத்தைத் தாக்காவாம்—நோக்கத்தை
யுற்றபோ துண்டா முறுங்காட்சி யொண்டீப
மற்றபோ தின்றா மதற்கு. (௨௯)

கருவிநிறை வன்றோ கருதுங்கா லென்னி
னுருவாய்த் திகழ்ந்தங் குறுமால்—வருமெய்
யுறுப்புக்குப் போக்கு வரவே யுறுதல்
சிறப்புக் கினியதெனத் தேர். (௩௦)

நினைவே செனன நிகழ்தனுவைப் பற்றா
மனமே மரண மெனுமாற்—கனவே
யுலகமெனக் கண்டாங் குறுமரணைச் சார
விலகுமறி யாமை விதி. (௬௧)

சிறந்த கருவி திகழாவி தன்னிற்
பிறந்திறந்து நிற்கின்ற பேத - மறிந்தொருவ
னற்றபோ தன்றோ வானிறைவோ டொன்றாகப்
பெற்றிடுவ தாகப் பெறும். (௬௨)

குணிகுணத்தின் றன்மை குறித்தபோர்க் கன்றோ
வெனுமுயிரின் றன்மை யியல்பாங்—குணியின்
றிறமே மயமாகுஞ் சேர்குணத்தின் றன்மை
குறையாச் செயலாகக் கொள். (௬௩)

குணிகுணம தென்னக் குறிக்குங்காற் பேத
மெனிலவையு மொன்றா யிருக்கும்—நனியறியி
னீரிற் குளிர்மை நிகழ்படிகத் துள்ளொளியு
மாருக்கு நேரா மறி. (௬௪)

மயத்தைக் குணமே மருவ மயமச்
செயலை யனுசரிக்கச் செய்யு—மயலையய
லாக்கும்போ தங்க மயமா யானருளை
நோக்குதற்குச் செய்யுமென நோக்கு. (௬௫)

செயலே பிறப்பிறப்பைச் செய்யுஞ் செயலின்
மயமே யதுவாக மன்னுஞ்—செயன்மயத்தை
யொத்தபோ தன்றோ வுறும்பிறவி மாறியருண்
முத்தியினைச் சேரு முறை. (௬௬)

தன்னைத்தா னோக்கித் தருங்குணியோ டொன்றினருண்
மன்னைத்தா னோக்க வருமன்றோ—வுன்னித்தா
னென்னறிவா லெல்லா மறிந்தே னெனவொருவன்
சொன்னதனாற் பேதமதோ சொல். (௬௭)

வித்தோ டடங்குமுளை வீரியத்தால் வித்துமதை
யொத்தே யடங்கி யுறுமன்றோ—சித்தையொத்து
நின்றதோ ராவி நிகழ்சிவத்தோ டொன்றாகச்
சென்றேறு மென்னத் தெளி. (௬௮)

பிறப்பிறப்பாம் பெத்தத்தைப் பேசுங்கா லீசன்
சிறப்புடைய னாதலினாற் செல்லா—மறைப்பாம்
மலமே சடமுயிர்க்கு மாறாப் பிறப்பா
மிலையா லெவர்க்குமிலை யாம். (௩௯)

மலமே கருவி மருவா பசுவின்
குலமே பிறப்பிறப்பைக் கூடாச்—சொலுமிரண்டு
மொத்தபோ தன்றோ வுறும்பிறவி யொவ்வாமல்
வைத்தபோ தின்றாக மன். (௪௰)

ஆவிக்கு நன்கா மரிய பிறப்பதனை
யாவிக் கிலையென் றறைவதென்—மேவு
மலப்பிணியைத் தீர்க்கு மருந்தா லதற்கிங்
கிலைப்பிணிமற் றென்னு மியம்பு. (௪௧)

உயிர்க்குப் பிறவி யுறுமியல்பா லென்று
மயக்க மதற்கியல்பாய் மன்னு—மியக்குமான்
றானென் றருவான் றகுமுணர்வைத் தாரணிமே
லானென் றருவா னுரை. (௪௨)

பிணிக்கோ மருந்ததனைப் பெற்றவர்க்கோ வென்னிற்
பிணியே மருந்தைப் பிணியா—வணியுமுயிர்
வீணே யருந்தா வியாதியோ டொன்றாகப்
பூணும்போ துண்டாம் பொசிப்பு. (௪௩)

பிணிக்கோ மருந்ததனைப் பேறாகு மங்கந்
தனக்கோ பிறித்தொன்றைச் சாற்றிற்—கனக்கவிவை
சந்தித்தா லல்லாற் றரியா துயிர்மலமு
மிந்தவா றாகுமென வெண். (௪௪)

பளிங்கொளியே வன்னத்தைப் பற்றிப் பளிங்கு
விளங்குதலைச் செய்யா விதிபோல்—களங்கமலத்
துற்றபோ தாவி யுறுமலமாய்த் தீப்பிறவி
பற்றிநிற்கு மென்றதனைப் பார். (௪௫)

தனிக்கு மலமுந் தகுமுயிரு மொன்றாய்
நினைக்கப் பிறவி நிலையா—மனைத்தினையு
முற்று நடப்ப துறுமலமே யாங்கதனை
பற்றிடுவ தாவிக் கணி. (௪௬)

அனாதி மலபெந்த னாகையினா லன்றோ
பினாதிதனுப் போகம் பெறுத—லனாதிமலக்
கூட்டமே யின்றேற் குறித்தமல நான்குமுன்
னோட்டமே யன்றோ வுணர். (௪௭)

முப்பொருட்கு மின்றா மொழியுங்காற் றோற்றம்பின்
தப்பறவே நின்று தனிக்குமா—லெப்பொருளு
மொன்றாகும் போதங் குதிக்கு முயிர்மலமாய்
நின்றார்க் கிதுவே நிலை. (௪௮)

சங்கத்தா னுற்ற தனிப்பிறவி சங்கமல
மங்கத்தா னுற்ற வகையன்றோ—வங்கந்தான்
போக்குவதே யாகப் புகுந்ததாந் திப்பிறவி
யாக்குதற்கே யாகா தறி. (௪௯)

காயமே விச்சையுறக் காட்டியது தியமல
மாயமே யாமான் மலமன்றோ—வாயதோ
ரீசன்மே லிச்சை யிசைவதற்கே நின்றவுடல்
வாசமே யாங்காற்கா மன். (௫௰)

மலமே பிணியுடலு மற்றதனோ டுற்ற
குலமேல் மருந்தேது கூறு—பலமருந்து
தோற்றும் பிணிக்குத் துடர்ந்துடனாய் நிற்பதுபோல்
மாற்றுந் தனுவே மருந்து. (௫௧)

கரும மருந்து கருவிமலந் தானாய்
மருவிவரு மென்னின் மருவாப்—பருகக்
கருவிதனுப் போகங் கருமமாற் காய
மருவுமருந் தென்ன மதி. (௫௨)

ஊட்டு மருந்தை யுறும்பிணிக்குக் காயத்தை
வாட்டியதோர் பாத்திரமாய் வைத்துமிகக்—கூட்டிக்
கொடுப்பான் மருத்துவன்போற் கொண்டமலந் தன்னை
யடுப்பா னரனென் றறி. (௫௩)

தாக்கும் பிணிக்குத் தருமருந்தே லாவியுற்றங்
கூக்கு மறிவி னுறுமன்றோ—போக்கு
மருந்தேற் பிணியகலின் மாறு முயிர்க்குப்
பொருர்துமியல் பன்றே புகல். (௫௪)

வருத்தும் பிணியகற்றி வந்தமருந் தேதன்
கருத்தன்பா னிற்குங் கனைக்கா—லொருத்தன்
மலமே யறுத்து வருந்தநுவே யீசன்
குலமே யெனவறிந்து கொள். (௫௫)

மூன்று மலமு மொழியுங்காற் றீதாகத்
தோன்றுமா னேயாகச் சொல்லுவதா—மேன்றசிவ
புண்ணியமே நன்மருந்தாய்ப் போக்குமென வாங்கதனை
நண்ணியநூ லோதுமதை நாடு. (௫௬)

தருமா தருமமெனத் தங்கு மிரண்டும்
வருமாம் பொசிப்பாக மன்னி—மருவிமிக
வுற்றசிவ புண்ணியமே யொண்மருந்தா யோங்குமிதைப்
பெற்றவர்க்கே யில்லைப் பிணி. (௫௭)

மலப்பிணியை மாற்று மருந்தே லதனைச்
சொலப்பிணியொன் றற்றரே தோய்வ—ரலற்பிணியை
யோட்டு மருந்தங் குருமரனை யல்லாம
ணுட்டுவதே யன்றோ நலம். (௫௮)

பிணியற்று ரன்றோ பிரியா வருளைப்
பணிவுற்றங் கன்பு பரிவார்—பிணியதனை
யுற்றார்க்குச் சற்று முறுமரனைத் தோன்றுதங்
கற்றார்க்கே யாமென் றறி. (௫௯)

மறைக்கு மலங்கருவி மாற்றாக்கா லென்னி
னுறைக்குங் கருவிகளு மொத்தே—மறைப்புக்
குறைப்பட்ட தன்றோ குறித்தரனை நோக்கிற்
சிறைப்பட்ட தாகுமெனத் தேர். (௬0)

பிரியா வருளைப் பிரிக்கு மலநோய்
திரியா வினைமருந்து சேர்ந்தங்—குரியமல
நந்தநந்த நாதனையே நண்ணிநண்ணி யம்மருந்தால்
வந்திப்ப தாக வரும். (௬௧)

நிலையே மலங்கருவி நீக்காத போதிங்
கிலையேற் பொறியு மிசையா—மலமிருட்டுத்
தீபங் கருவி திகழ்மருந்து சேர்வினையாம்
பூபதிபோ லீசனையே போற்று. (௬௨)

இருளை பொதுக்கு மிசைந்த கருவி
மருளுருவாய்க் கன்ம மருவு—மருளு
மறைப்புற்றார் காண மருவுமுருப் போலச்
சிறப்புற்று நிற்குமெனத் தேறு. (௬௩)

கருமமருந் தென்றுங் கருது பிராரத்த
வுருவுக் கிசையவுறு மென்றுங்—கருதி
லுடற்கிசையத் தானே யுறுமேற் றொடர்ந்து
விடற்கிசையா தென்ன விதி. (௬௪)

பிணிக்கு மருந்து பிராரத்தந் தானே
தணிக்கும் வகையாற் றணிக்குந்—திணிக்கு
மிரைவழியே சேரு மிருளொளியா மென்னு
மாபுமருந் தென்ன மதி. (௬௫)

மலத்தையிருட் போலென்று மன்னுகுரு டென்றும்
பிலத்தநோய் போலென்றும் பேசின்—மலத்துமன
மோகத்தால் வஞ்சத்தை மூண்டானைக் காணாத
தேகத்தாற் கில்லைக்கண் டேறு. (௬௬)

வறுமையால் நோயால் வணக்கத்தான் மன்னர்
சிறுமையாற் செல்வத்தாற் சேரும்— மறுமையா
லீட்டும் வினையா லியன்றவரத் தாலரன்மே
னாட்டமுற்ற தால்மருந்தாய் நாடு. (௬௭)

உரக்கும் பிணியா லுறுமருந்தை யென்றுந்
தரக்கண் டிருக்குந் தனிமை—நரர்க்கின்
றியல்பே யெனுமா லிசைந்ததனை மாற்றச்
செயலேன் றெடுத்தான் சிவன். (௬௮)

அனாதி மயக்கமுயிர்க் காகையினா லீசன்
பினாதி யுடல்பெருக்கு வித்துத்—தனாதி
யறிவுள்ள தெல்லா மளிப்பன் மலத்தின்
றிறமுள்ள தெல்லாந் தெகித்து. (௬௯)

தன்னியல்புக் கில்லைத் தரும்பிறவி யெப்பொருட்கு
மன்னு பொதுவிபற்கே வாய்த்ததாந்—துன்னு
முயிர்க்குப் பிறவி யிலையென்றான் மற்றொன்றால்
மயக்கப் படாவிடத்தே மன். (௭௰)

அறிவித்தா லெல்லா மறியுந் தனித்து
மறுவற்று நின்ற வழக்காற்— செறியி
லறிவித்தா லெல்லா மறியா பொதுவாய்
மறுவுற்று நின்ற வழக்கு. (எக)

படிக மொருபொருளைப் பற்றிவிட்டுப் பற்றி
முடியி னொருபொருண்மேன் முற்று—நெடிய
மலமொருகா லாவி மனுவொருகா லீச
னிலையொருகா லென்ன நினை. (எஉ)

பன்னிறத்தோ டொத்த படிகம் பகனடுவிற்
றன்னிறமே கண்ட தகைமையென—மன்னிறந்தா
னுற்றபோ தாவிக் குபாதியற்றுத் தன்னியல்பே
பெற்றிடுவ தாகப் பெறும். (எங)

பற்றும் படிகமது பற்றைவிட்டுப் பற்றியபின்
முற்று மொருபொருளை முற்றினான்—மற்றொன்றைப்
பற்றா ததுபோற் பரசிவத்தோ டொன்றுபட்டங்
குற்றார்க் கிலைபிறிதென் றோர். (எச)

உற்ற சகல முறுங்கே வலமலத்தாற்
குற்றமுற்ற நித்திரையே கொண்டதான்—மற்றவருட்
டட்டி யெழுப்பத் தகும்பிரம மாய்த்திரிந்தங்
கொட்டியதே சாக்கிரமென் றோர். (எ௫)

நெடிய வுடலனைத்து நீக்கித்தா னுதல்
முடியு மதுவே முடிவாற்—படியினுறச்
செய்யா திருக்குந் திறமே மறுமையென்கை
மெய்யா யிருக்கும் விதி. (எசு)

சுத்தப் படிகமெனத் தோய்வற்ற போதாவி
நித்தியமே யென்ன நிகழ்த்தித்தன்— சத்தியோ
டொன்று யனுபவித்தங் குற்றதனை நோக்கிப்பின்
நின்றுவ தன்றே நிலை. (எஎ)

தன்னை யநுபவிக்குஞ் சம்புத்தன் சத்தியெனு
மின்னை யநுபவிக்க மேவுங்காற்—றன்னு
முலகுதிக்கு மாங்கவனை யொன்றும்போ தெல்லாம்
விலகுமுயிர்க் கிதே விதி. (எஅ)

தன்னறிவை நோக்கித் தழுவும்போ திசற்குப்
பின்னமுற்ற தாகப் பெறுமன்றே—தன்னு
மிவனை யறிவுற் றிசையும்போ திங்கே
சிவனருளைச் சேர்வனெனத் தேர். (எசு)

சிவசத் தியைப்புணருஞ் சிவன்முத்த ரென்ப
தவசத்த மென்ப தறிவேற்—பவசத்தி
யீட்டுவிக்குந் தீப்பிறவி யீங்கிதனை யீசனரு
ளோட்டுவிக்கு மென்றே யுணர். (அ0)

கண்ணதனை யுற்ற கடிய விருளதனைக்
கண்ணொளியோ வுற்ற கதிரொளியோ—கண்ணகல
வோட்டியதிங் கேதோ வுறுமுயிரின் றீதிருளை
வாட்டியதிங் கேதோ மதி. (அக)

நீங்கு மலத்தை நிகழருளே மெல்லமெல்ல
வாங்குதலைச் செய்த வகையன்றே—தீங்ககலச்
செய்தா ருளத்திருக்கத் தேற்றமே போதுமென்கை
பொய்யாகு மென்னப் புகல். (அஉ)

நீக்கு மறைப்பதனை நீக்கி யுடலனைத்தும்
போக்குதற்குச் செய்ததருட் பொறப்பன்றே—காக்கு
மரனை யிலையா லகன்றமல மெல்லாம்
வருமே யுளத்தை மருவி. (அ௩)

அறிவித்தா லொன்று மறியாய்பொய் வஞ்சம்
பிறிவித்தா லுண்டோ பிறிவங்—கறிவதற்கங்
குற்றவா றேதோ வுறுமுடலைப் பொய்யாக
வற்றவா றேதோ வறை. (அச)

பிறப்பித்தா லன்றிப் பிறவா வுலகி
லிறப்பித்தா லன்றி யிறவா—துறப்பித்த
தாரோ வெனவு மறியா வுயிராற்கு
நேரோ வெனவு நினை. (அரு)

மாற்றும் பளிங்கொன்றை மாற்றுமோ வுச்சியின்மேற்
றோற்றுங் கதிர்வந்து தோற்றுக்காற்—போற்று
முடலனைத்துந் தீர வொழிப்பாரா ரீசன்
றடையனைத்துந் தீரானேற் றான். (அசு)

பற்றைவிட்டுப் பற்றும் படிகங் கதிரகன்று
நிற்றலினு லன்றோ நினையுங்கால்—மற்றதுபோற்
றெட்ட வானே தொடாதவற்று லாவிழுதல்
விட்டதனைத் தேடும் விரைந்து. (அஎ)

இச்சை யறிவுதொழி லெல்லாமெய் யாவியின்மேல்
வைச்சன்றோ தீர்த்தான் மலமனைத்து—நச்சு
மவனு யிருக்கைக் கருள்பெற்று ரன்றோ
சிவனு யிருப்பரெனத் தேர். (அஅ)

திரிவற் றுயிர்க்கோர் செயலற் றருளிற்
பிரிவற்று நிற்கின்ற பெற்றி—தெரிவுற்று
நிற்பதுவே சொற்பனமா நீள்சிவத்தி லொன்றுக
வைப்பதுவே முத்தி வழக்கு. (அகூ)

கருவி யனைத்துங் கருதித்தா னுகை
விரவும்போ துண்டோ வெறுப்பு—மருவுமருட்
காட்டியபோ தன்றோ கருதுமுடல் வேருக
வோட்டியவா றன்றோ வுணர். (கூ0)

காயமே யுள்ளங் கருதுமுயி ரீசனெனத்
தோயி னறிவு தொடுமென்றான்—ஞாயத்
தொழிலோ டுடன்பட்டுத் தோன்றியதிங் கெல்லாம்
வழுவா திருக்கவுமாம் வந்து. (கூக)

ஆணவத்தை நெஞ்ச மடையும்போ தாங்கதுவாய்க்
கோணுவதே யன்றியதைக் கொண்டதுண்டோ—தாணுவனைக்
காமித்து மிக்க கரிசறுத்துத் தன்னருளிற்
சேமித்த தீசன் செயல். (கூஉ)

ஆவி யனைத்தினுக்கு மாதிக்க மாம்போது
மேவி யதுவாய் விளங்கிற்றே—வாவியன்றித்
தானே யவையையுறத் தங்கிற்றே பேதமற
வூனே ததனை யுரை. (கூங)

வீட்டுந் தநுவினுக்கு வேண்டும் பணியதனைப்
பூட்டும்போ தொன்றுபட்டுப் பூட்டுமா—லாட்டியவ
னங்கத்தைக் கையா லறுக்கும்போ தவ்வங்கஞ்
சங்கத்தை மாற்றுமோ தான். (கூச)

உள்ள நடந்தவழி யூனடக்கு மூனதனைத்
தள்ளவழக் குண்டோ தரிக்குங்கால்—மெள்ள
நடத்துவான் றானுய் நடப்பதல்லா னண்ணித்
தொடுப்பதுவு முண்டோபின் சொல். (௬௫)

தோற்றுவிப்பா னெங்கே துலங்குவா னுங்கதனைப்
போற்றுவா னெங்கே புகுந்திடுவான்—மாற்றுமரு
ளீசனு ரெங்கே யிருப்பாரோ வெவ்வுலகு
நாசமே யாமா னயந்து. (௬௬)

ஆதலினாற் றோற்றமுத லைவருக்கு மோரிடமே
பூதலத்தி லுண்டோ புகலுங்காற்—தீதுநன்கு
செய்வா ருளத்திருந்து செய்வரெனி லைந்தொழிலு
மிய்யாமற் றானு மியல்பு. (௬௭)

எல்லாத் தொழிலு மியற்றுவிப்பா ரில்லாமல்
வல்லார்கள் வல்லவகை போல—வெல்லா
நடத்துவான் மற்றோர் வினைவழியை நாட்டி
மிடற்றில்விடம் வைத்தான் விரைந்து. (௬௮)

தொடர்ந்தமல மைந்துந் தொடர்ந்துயிரைப் பற்றி
மிடைந்திடவே செய்யும் விதியா—னடந்த
வறிவோ டறிவா யறிவுறுத்தி யீசன்
செறியுமலந் தீர்ப்பனெனத் தேர். (௬௯)

அஞ்சு தொழிலு மவையறியு மாவியுற்ற
நெஞ்சின்மேல் வைத்த நெறியாகு—மிஞ்சுமா
னெல்லா மறித லியல்பறிவா லீதலுக்குச்
செல்லா தெனவே தெளி. (௭௰)

பேரறிவே யீசனுக்குப் போராத சிற்றறிவு
சாரு முயிர்க்குத் தருமலத்துக்—கோரறிவு
மின்று மிவையே யியல்பாங் குணிகுணங்க
ளொன்றும் பிரிப்பதல வோர். (௭௧)

பதிக்குப் பசுவன்றே பற்றியதோர் மேனி
விதிக்கிற் சுதந்தரமாய் மேவு—மதித்துத்
துடைக்கி லபலாந் தொடர்ந்தவுரு வாவி
துடைப்பதல வென்னத் துணி. (௭௨)

ஆவி மலப்பிணியா லானதுட லாலதற்கு
மேவும் பிணியை விளம்பென்னக் — கூவு
மகப்பித்தை மாற்ற மருவியதோர் தந்தைக்
ககப்பித்தை யுற்ற தறி. (௨௩)

உடற்குயிர்போ லீச னெனுமா னுயிரி
னடக்கையற நின்ற நடையா — லெடுக்கும்
பிறப்புத் துயரம் பிரியா தவர்க்கே
யறப்புகுதும் போலு மறி. (௨௪)

பிறப்புத் துயரமது பேரறிவுக் கல்லாற்
சிறப்பித் துயிர்நோக்கச் செல்லா — மறைப்பகலத்
தோற்றமுத லைந்துந் தொடுத்தான் கருணையினன்
மாற்றுதற்கே யாக மதித்து. (௨௫)

பிணிக்கு மருந்து பிரியாம னின்று
திணிக்கு மவனதனைத் தீண்டான் — றணிக்குமல
மீசன் பிறப்பிறப்பை யாக்கியவை யெல்லா
நாசமே யாக்குமென நாடு. (௨௬)

எல்லா வுயிர்க்கு மிசைந்தவுயி ராலுமிக
நில்லாமல் மாய நிலாதாலுஞ் — செல்லாப்
பிறப்பிறப்பா மென்னுமிந்தப் பேத மரற்கே
யுறப்படுவ தல்லவென வோர். (௨௭)

ஈச னருளுக் கிசைந்ததனு வுள்ளமெனப்
பேசுவதே யுள்ளதெனும் பெற்றியா — னூசமிலா
வங்கமே யின்றே லறியா வுடற்குமதன்
சங்கமே யின்றேற் றடை. (௨௮)

பதிபசுவை யின்றியொன்றும் பற்றா பசுவும்
பதியையின்றி யொன்றினையும் பற்றாப் — பதிபசுவோ
டத்துவித மாயங் கனைத்துமறி வித்துமலப்
பித்தறுத்து நிற்குமருட் பேறு. (௨௯)

பசுபதியோ டத்துவிதப் பண்பதனைப் பற்றி
யசிபதமே யென்பதனை யாய்ந்து — விசிவசித்தங்
கொத்ததனோ டொத்தங் குறுவதன்றோ தீயமலக்
கொத்தறுத்து நிற்குங் குறி. (௩௦)

அரற்கோ சறுவிக் கினமாகு மாவி
நார்க்கோ சிறிதறிவை நண்ணும்—பசக்குமரு
ளாவியே யங்கத்தைப் பற்றியறி யாவேற்
றவையே யில்லையங்கந் தேர். (௱௧௧)

பற்றைவிட்டுப் பற்றும் பசுவதனைப் பற்றிநின்றங்
குற்றறிவ தென்னோ வுணருங்கால்—நற்று
மாற்கொன்றை வேண்டி யறியான் மலத்தைத்
தூத்துதற்கே யாகவெனச் சொல். (௱௧௨)

உணர்த்துவா ரின்றி யுணர்வா னெனினுங்
குணத்தின்மா னுற்றுக் குறியான்—நினைத்தவர்க
ளுழைத்து நோக்கி யொழிப்பான்மற் றல்லாத
பாழைத்து நோக்கான் பரிந்து. (௱௧௩)

அரனுயிர் போலென்று மாவியுட லென்றும்
வரினே பொதுவாக மன்னுந்—தாமே
பிரித்தெனக்குப் பெத்தமுத்திப் பேதமெலாங் காண
விரித்தெனக்குச் சொல்வாய் விரைந்து. (௱௧௪)

தோற்ற முதலாகத் தோன்றியபேர் நால்வருமே
யாற்றியதோர் பெத்தருக்கே யாகுமால்—மாற்றியெல்லாம்
நின்றார் தமக்கே நிகழு மனுக்கிரக
ரொன்றுவார் முத்திக் குணர். (௱௧௫)

ஊனற்று மாவி யுயிரற் றுறுமலமாய்க்
தீனற்று மாங்கதற்கே செல்லாதாற்—றூனற்று
நின்றபோ தாவிக்கு நீழ்பொசிப்பே யில்லைமலம்
வென்றபோ துண்டோ வினை. (௱௧௬)

ஊனு முயிரு மொருங்கொப்ப நிற்பதுயி
ரூனதனை யாகா வொழுங்கென்ன—வூனின்று
தீனற்றும் போது செலுத்து முடலுயிரிற்
றூனற்ற போதானுந் தான். (௱௧௭)

அருந்து முயிரை யருத்தியதாய்ச் செப்பல்
பொருந்தியதே யன்று புகலில்—வருந்திமிக
வுண்ணவா வென்றூ டற்கிசையா தென்றுமிக
வெண்ணியவா றேதோ வியம்பு. (௱௧௮)

உண்டே னெனவுரைத்த தெல்லா முயிர்மலமாய்ப்
பண்டே யிழந்துடலாம் பண்பன்றோ—வுண்டே
யுடலோ டுயிரென் றுணராத வற்கே
திடமா யுரைப்பதிலைத் தேறு. (௧௧௯)

தனுவே வினையதனைச் சாரு முயிரி
னினைவே யறிவாகி நிற்கு—மினமே
யினத்தோ டிசைத்தங் கிருப்பதல்லான் மாறி
மனுமேல் மயக்கமேன் மன். (௧௨0)

வாழுந் தனுவுயிரான் மற்றமல நோயாக
வூழை யுறுமருந்தா யூட்டியென் றும்—வாழ்விக்கு
மாதலினு லீச னுயிர்க்குயிரா மென்றுமவை
யோதலா மென்ன வுணர். (௧௨௧)

தனுவிக் கிசைந்தகிலங் தங்கியதே யாவி
மனுவுக் கிசைய மருவா—நினைவுக்கு
வேண்டியது முண்டோ விரும்பு முலகதனிற்
பூண்டதுவே யாகும்வினைப் பொற்பு. (௧௨௨)

உற்றதோ ராவிக் குறுந்துன்பம் வஞ்சமெனச்
சொற்றதென்ன வேறே சுகமுண்டோ—குற்றமற
விட்டவர்க்கே யாகும் விரிந்தறிவால் மேலறிவைத்
தொட்டதனு லாகுஞ் சுகம். (௧௨௩)

அருவே லெவரு மறியா ரறிவங்
குருவே னுலகத்தோ டொன்றும்—மருவுமுயிர்
காழித் தருந்தக் கருதியதோர் மேலறிவைச்
சேழித் திருப்பதெங்ஙன் செப்பு. (௧௨௪)

அறிவோ டறிவா யறிந்து முயிரி
னிறைவாகி யெவ்விடத்து நின்றும்—பிறவா
முருவாகி யெங்கு முறைந்தும் பொறியில்
வருமா னுலகமென மன். (௧௨௫)

மருவும் பொறியை மருவாத போது
தெரியும் பொருளைத் தெரியா—வொருவுமல
மாட்டியபோ துண்டோ வரற்கன்பங் காங்கதனை
யோட்டியபோ துண்டாமென் றோர். (௧௨௬)

மலமற்ருர் தம்மை மதிக்குங்கால் வஞ்சக்
குலமற்ரு ரென்னக் குறிப்பான்—நலமுற்ற
காயக் தனதாய்க் கருதுமுயிர் தானுயுந்
தோயுமா லீசனெனச் சொல். (௧௨௭)

வஞ்சங் கெடுப்பாரை வஞ்சமென்ப தெல்லாம்போய்
நெஞ்சத்தார்க் குள்ள நினைவாகுங்—கொஞ்ச
மலமேவ ரூத்தார்க்கு வாய்த்தசிவ மல்லாற்
சொலமேவ ருென் றில்லையெனச் சொல். (௧௨௮)

ஒட்டுமல மாவி யுயர்சிவமு மோருருவைத்
தொட்டுநிற்கு மார்க்காகச் சொல்லுமே—னட்டதோ
ராதிக்க மெங்கே யடைந்த தவர்க்காகச்
சோதித்து நன்ருகச் சொல். (௧௨௯)

காயமே தானுய்க் கருதுவிக்கும் வஞ்சத்தைத்
தோயவே நெஞ்சைத் துணிவிக்கும்—நேயமா
மீசனையே நெஞ்சி லிழப்பிக்கும் மங்கையர்பால்
வாசமே யாக்கும் மலம். (௧௩0)

அங்கங் கசந்தங் கறிவே யினித்துமலச்
சங்கமெலாந் தீதாகத் தள்ளிப்பின் – பொங்குமாற்
கன்பே புகுவித் ததுவா முயிரென்னுந்
தன்பொருக் குற்ற சதிர். (௧௩௧)

தோற்ரு முயிரின் றுயர்க்கிரங்கல் மற்றதனைத்
தோற்றுதற்கே யுள்ளத் திறஞ்செய்தல்—போற்றன்மிகும்
பூசை யனுக்கிரக மெல்லாம் புணர்தலருட்
டேசனுர்க் குற்ற செயல். (௧௩௨)

உலகுடைமை யாவி யுறுமடிமை யாக
நிலவுலக மெல்லா நிறைந்து—குலவுமர
னாட்டியதே யல்லா லவனுக்கு மற்ருருவ
ஞட்டியவா றேதா முரை. (௧௩௩)

நீராகிப் பூவாய் நெருப்பாய் நிகழ்மூசற்
சீராகி யெங்குஞ் செறிவாற்குச்—சார்வாவா
ரூட்டுதற்கு முன்ன முறைவா னதுவாய்க்கை
காட்டும்போ துண்டதலக் காண். (௧௩௪)

கண்டிருப்பார் தங்களுக்கே காட்டியதுங் காதலித்தங்
குண்டிருப்பார் தங்களுக்கே யூட்டியதும்—பண்டறியோ
மெல்லாத் திஞுள்ளு மிசைவார்க்கே யாங்கொடுக்கச்
செல்லா தெனவே தெளி. (௧௯௫)

அத்துவா வாறு மவரவர்க்கே யாய்நிறைந்தங்
கொத்ததா லீசனதை யோர்கிலான்—கத்தனென
நற்றிணு ளுகி னயவாப் பிணியவர்க்கு
முற்றிஞற் போலு மொழி. (௧௯௬)

ஈசனே யெல்லா மிசைப்பான்மற் றெவ்வுயிர்க்கு
மீசனே யெங்கு மிசைவதா --மீசனே
யூட்டுவா னெவ்வுயிர்க்கு முண்ணு னொருவன்கை
காட்டிஞு னல்லாமற் காண். (௧௯௭)

பித்துள்ள போதே பெருமருந்து முண்டாய்ப்பின்
பித்தகற்ற வந்ததன்றோ பேசுங்காற்—சித்தமல
மோட்டுதற்கே யாமா லூறுங்கன்ம மீசனுக்கங்
கூட்டுதற்கே யாமாமென் றோர். (௧௯௮)

சாமசா மென்னத் தரிக்குமான் றேனே
வாமெவர்க்கு மீய வருமாற்—றமறிந்தங்
கூட்டியபே றன்றோ வுறுமலத்தோ டைந்திணையும்
வாட்டியபே றாவார் மதி. (௧௯௯)

மருத்துவற்கே மற்ற மருந்துடைமை பித்தைத்
துரத்துதற்கே யுற்றதொரு தொந்தங்—கருத்தனடி
காட்டுதற்கே யுற்ற கருவி கருமமாற்
கூட்டுதற்கே யாகுமென வோர். (௨௦௦)

கருவற்ற ரேனுங் கருணையே தோற்று
முருவுற்றுன் மெய்ப்பசியு முண்டாந்—தெரிவுற்றங்
கூட்டாத போதொன்று முண்ணுர் பசிப்படுவ
ரூட்டுவதே முத்தற் கொழுங்கு. (௨௦௧)

கருமமல மல்லக் கருதுங்கா லீசன்
றருமமே யாகத் தருமாற்—பொருமலத்தை
யோட்டி யுயிருக் குறுமன்பே யாக்கியரற்
கூட்டுதற்கே நிற்குமென வோர். (௨௦௨)

பொருந்தும்வினை யெல்லாம் புகுமலமே தானு
மருந்து மலத்தா ரருந்தத்—திருந்தமலந்
தந்தவர்க்கே யூட்டத் தகுமாற் றகுமருட்குச்
சந்தையமின் றாகத் தகும். (௧௪௩)

தோற்று மலப்பிணியைத் தோய்வார்க்கு நன்மருந்தான்
மாற்ற வரனே மருவுமாற்—றேற்றமா
யெல்லாப் பொருளு மிசையுமா லீசனுக்கு
நல்லா ரருத்துவதே நன்று. (௧௪௪)

தனுவும் வினையுந் தருமுலகந் தானு
மனமு மலமு மருவி—வினைமலத்தை
யோட்டுதற்கு மாகு முறுமரற்கே யன்பாக
வூட்டுதற்கு மாகுமென வோர். (௧௪௫)

நீண்ட தவத்தோர்க்கு நிகழ்மலத்தார் தங்களுக்கு
மாண்டவனே யுண்டங் கருளானேல்—வேண்டும்
பலமடைவ தெவ்வாறு பண்பிலார் தங்கள்
மலமுடைவ தெவ்வாறு மன். (௧௪௬)

மலநோய் கரும மருந்தா லுயிர்க்கு
நலமா யருந்துதலே நன்று—மலநோய்
வருத்துமவன் றின்ன மருவு மதனை
யருத்துமாற் கேனு மறை. (௧௪௭)

ஆவி யனாதி யடிமை தனுவினையு
மேவு முடைமையென மேவியதாற்—பாவும்வினை
யுண்ணும்போ தீசனுக்கே யூட்டிப்பி னுண்ணுமதே
நண்ணுமுயிர்க் குற்ற நலம். (௧௪௮)

அருத்துமவ னேனே வருத்து மலத்தைத்
துரத்துதற்கே யாமாற் றுலையக்—கருமத்தை
யீட்டுந் தவத்தா லிசைந்ததெல்லா மாங்கவற்கே
யூட்டுதற்கே யாகுமென வோர். (௧௪௯)

ஆற்றுந் தனுவி லடைந்தபொசிப் பாலுற்றத்
தோற்று மானைத் துடருமாற்—றேற்றும்
வினையே மருந்தாய் விரும்பியது மீசன்
றனையே நினைவதற்காந் தான். (௧௫௦)

ஊனு முயிரு மொருங்கொப்ப நிற்பினும்பி
லூன்புசிப்பை நோக்க லொழுங்காகும்—வானேயு
மாவிக்குப் போக மரனு மதுவாக
மேவியமேற்க் காகும் விதி. (௧௯௧)

பொசிப்பாங் கருமம் பொசிப்பாரைப் பற்றி
யிசைப்பா னரனூனே யெண்ணுன்—பொசிப்பு
மலையாம னின்று மருவுமா லுண்டு
சிலவான போதானுந் தேர். (௧௯௨)

அருத்து மருந்தீசற் கருத்து மதனுலோ
வருத்து மலப்பிணியை மாய்த்தோங்—திருத்துங்
கரும மருந்திக் கருதுமத னுலோ
வருமமவையா லொன்றை மதி. (௧௯௩)

மையமேல தானுய் மருவு மலநோய்க்கு
வையமே நன்மருந்தாய் வாய்த்ததாற்—கையகல
நோக்கும்போ தீசனேயே நோக்குமா லாங்கதனைப்
போக்குமே நெஞ்சே புகுந்து. (௧௯௪)

மலமகன்று ரன்றோ வருமானை நோக்கும்
மலமுடையா ரெவ்வாறு மன்னும்—பலமே
பரிந்தானை நோக்கும் பரிவினுற் சற்றுந்
தெரிந்ததல வென்னத் தெளி. (௧௯௫)

வினைநோக்க மல்லால் விரும்பியதோ ரீசன்
றனைநோக்க மின்றாய்த் தகுமால்—மனநோக்க
மாற்றியபோ தன்றோ மருவுமரன் றுனைகத்
தோற்றியவா றுகுமெனச் சொல். (௧௯௬)

ஆகுத்தார் திதா மருவினையை நோக்கின்மல
பாகத்தா ராகப் படுவரான்—மோகத்தா
லீசன்மே லன்பே யிசைவார்க்கே தீயமல
நாசமே யாகுமென நாடு. (௧௯௭)

இருளி லிசையா திசைந்த கருவி
மருளி லிசைய வருமா—லருளதனை
பொட்டவொட்டத் தானே யுறுமலத்தின் சத்திகெடப்
பட்டதென்ன நெஞ்சே பகர். (௧௯௮)

உயிர்க்கோ பிணிமற் றுடற்கோ வென்னின்
மயக்க மிருவகைக்கு மன்று—மியக்குந்
தனுவும் வினையுந் தகும்பிணியே யாயு
நிலைவா லடங்கிவெறு நேர். (௧௮௯)

காட்டத் தடங்குங் கருதியதீத் தானந்தக்
காட்டமே யாகாக் கணக்கேபோ—ஞட்டுமலத்
தொத்த கரும முறுமான்பா லொத்துமலக்
கொத்தறுக்கு மென்னக் குறி. (௧௯௦)

மருந்துநோய் தன்னை மருவு மருந்தும்
பொருந்துநோய் தானுப் புகுமாற்—றிருந்து
மலநோ யறுக்கு மருந்து மருவிச்
சிலநா ளிருக்குமெனத் தேர் (௧௯௧)

மலப்பிணியை மாற்று மருந்தாங் கரும
மலப்பிணியோ டொன்று யழுந்தி—மலப்பிணியை
மாற்றி யானை மருவி யவனுகத்
தோற்றுமே நெஞ்சே துணி. (௧௯௨)

அருந்து மருந்தை யருந்துமவற் கூட்டித்
திருந்தவழி பாடெவருஞ் செய்யார்—மருந்து
தந்தே யெனுமாற் றந்தவர்க்கே யன்பர்
மதியா லருத்துவதே மாண்பு. (௧௯௩)

மலமே பிணிகரும மாற்றுமருந் தீசன்
குலமே யெனநடக்குங் கொள்கை—மலமகல
வூட்டுதற்கு மாகும்பின் னூட்டு மாற்கேகருதி
யூட்டுதற்கு மாகுமென வோர். (௧௯௪)

மலமே யனுதி மருவுங் கருமக்
குலமே யானீந்த கொள்கை—நலமா
முயிரே மலமா யொடுங்குமா லெல்லாஞ்
செயிரே யெனவே தெளி. (௧௯௫)

மலமுந் தனியாகு மற்றுயிரா யுற்ற
குலமுந் தனியாகக் கொள்ளு—நலமாகு
மீசனேயாகு மிசைந்த தனுவினையு
மாசறுகுஞ் சத்திபென மன். (௧௯௬)

பிறியா தறியாமை பேரா தணுகி
செறிவாந் தனுவினைமேற் சிந்தை—குறியாஞ்
சிவத்தோ டணையாது சேர்ந்ததெல்லாம் பொல்லாப்
பவத்தோ டணைக்குமலம் பார். (௧௬௭)

வையமெல்லா மெய்யாக வந்ததுவு மற்றுயிரின்
செய்கை மறமாகத் திரிந்ததுவு—மெய்யாந்
தனுவும் பொசிப்புந் தருமாற்கு மாறு
நினைவுமல மென்ன நினை. (௧௬௮)

மலமே யதன்மத்தை மன்னு மதனி
னலமே தருமத்தை நண்ணு—மலமே
தெசித்தார்க்கே யாகுஞ் சிவதரும முற்று
நசித்தபோ தாமுத்தி நாடு. (௧௬௯)

மலப்பிணியை யுற்றார்க்கு மாசிவமே கைப்பா
மிலத்தொழில்க ளெல்லா மினிப்பாம்—மலப்பிணிநோய்
தீரும்போ தீசனிலை தித்திக்குங் கைப்பாகுஞ்
சாரு மிலத்தொழிலே தான். (௧௭0)

கருமமருந் தோயின் கருதானே வெண்ணி
யிருவகையு மொன்று யிசையும்—மருவுந்
திருவுருவே தானுந் திகழ்கரும மாமால்
மருவுமருந் தென்ன மதி. (௧௭௧)

பிணிக்கு மருந்து பிரியாம னின்று
தணிக்கு மருத்துவனைச் சார்ந்து—பிணியை
வருத்தியதின் குற்ற மருந்தோ மருத்துவனோ
திருத்தமா யொன்றதனைச் செப்பு. (௧௭௨)

மருந்தே பிணியை வருத்தின் மருத்துவனைத்
திருந்தவழி பாடெவரென் செய்வர்—பொருந்துமா
றுற்ற மலத்தை யொழிப்பன் கருமத்தாற்
பற்றிவழி பாடெவர்க்கும் பாங்கு. (௧௭௩)

ஆவி நிருமலமே யான தானுக்கு
மேவி யருத்தும் வினையாமாற்—கூவுஞ்
சரியாதி நான்குந் தரித்ததனா லன்றோ
பிரியாச் சிவனை பேறு. (௧௭௪)

நிருமலனே யாகி நிருமலமே யாக்கி
யொருநலமாய் நிற்கை யொழுங்கா—முருமலத்தை
மாற்றி யவனே மருவுமா லாங்கவற்குந்
தேற்றமே யில்லையெனத் தேர். (௧௭௫)

இருளகலா தாகு மிசைந்தவொளி யல்லான்
மருளகலு மீசன் மருவிற்—றெருளுங்கா
லத்துவித மாமா லடைக்க தனுவினையுங்
கத்தனுக்கே யாகுமெனக் காண். (௧௭௬)

ஊனற்றும் போக முயிர்கற்றித் தென்னவுயிர்
தானற்றும் போகந் தலைவற்காந்—தீனற்ற
வூற்ற மலத்தா னுறுமே லரன்கருணை
பற்றியதா னுண்பான் பரிந்து. (௧௭௭)

மலத்தோ டடங்கி மருவியபே ருண்பர்
மலமே யருந்த மருவா—நலமாகு
மீசனே டொன்று மிசைவா ரருந்துமிக்க
விசனே யுண்ணுனென் றெண். (௧௭௮)

ஆவி மலத்தோ டடங்கவது தானுக
மேவி யதுவாய் விளங்குமா—லாவியெனத்
தானே யிலையாற் றருமலமே தானுகு
மூனு மதுவாமென் றோர். (௧௭௯)

சிற்றுயிரே யுற்ற செயலானற் றேவனுக்கு
மற்றுருவாய் நின்று மருவுமா—லுற்றமலச்
சேட்டையே மாற்றுஞ் செயலாற் சிவனுகு
நாட்டமே யாகுமென நாடு. (௧௮௦)

வினைமருந்தா னேக்கி விரும்புங்கா லீச
னினைவனைத்துந் தானுகி நிற்பன்—பினைமலத்தி
னேட்டமே யின்றே நடந்தமல மைந்தும்பி
னேட்டமே யன்றோ வுணர். (௧௮௧)

மருத்துவனே யீவான் மருந்து பிணியைத்
துரத்துதற்கே யன்றோ தொலைந்தாற்—கருத்தனடி
நோக்குவதே யாமா னுண்ணியதோர் தீமலத்தைப்
போக்குங்கா லீசற்காம் பொற்பு. (௧௮௨)

அற்றார் தனுவி லடைந்தவினை யெல்லாம்பின்
மற்றா ரருந்த மருவுவா—ருற்றவுயிர்
மன்னியவன் றானுறான் மற்றுயிரைப் பற்றும்வினைக்
கன்னியமே னாவா னரன். (கஅங)

அடைந்தார் தனுவி லடைந்தவினை யன்றே
தொடர்ந்தார் மலத்தைத் துடைக்கு—மிடைந்த
தொடர்பே யிலையாற் றொடர்ந்தமல மாற்ற
நடையேது மில்லையென நாடு. (கஅச)

புன்மலமே யற்றார் பொருந்தாந் தனுவினையு
நின்மலமே யாய்நிறைந்து நிற்குமேற்—கன்மம்
பலர்பா லிருக்கப் படுமேற் றருவார்
மலமா லறுக்குமென மன். (கஅரு)

கருமத் தொடர்ச்சி கருதிலிங்கத் தின்று
மருவும்வினை யெங்ஙன் வருமோ—பெருகுந்
தவத்தோர்க்கே யிச்சை தருமாற் றகுதி
சிவத்தோ டணையுமெனத் தேர். (கஅசு)

அருந்தும் வினையை யருந்தின் மலத்தாற்
றிரிந்து தனுவே செனிக்கும்— பொருந்து
மருளோ டணைவா ரருந்தியதிங் கெல்லா
முருவோ டணையாதென் றோர். (கஅஎ)

தனுவு முயிருந் தகுமலத்தா லொன்றுந்
தனுவே பொசிப்பதனைச் சாரு—நினைவாகு
மாவிக்குப் போக மரனு முடனுயிரு
மேவியபோ தொன்றாயும் வேறு. (கஅஅ)

தனுவும் பொசிப்பைத் தவிரா மலத்தை
மனுமாற் பிறவி மருவுந்—தனுவும்
பொசிப்புஞ் சிவத்தைப் பொருந்தின் மலத்தைத்
தெசிக்குமென நெஞ்சே தெளி. (கஅகூ)

உயிர்க்கு மயக்க முறுமலமே தானுஞ்
செயற்குக் கருமந் திகழ்மருந்தா—னயக்கு
மரனே மருத்துவனா யாங்கருத்தி நின்று
வரலா லகலுமென மன். (ககூ0)

உருவம் வினையு முறுமருந்தே யாமாற்
கருதா முருவானைக் காட்டி--யிருவினையு
மூட்டுமாற் கன்பா யுறுமான் மலப்பிணியை
யோட்டுமென நெஞ்சே யுணர். (௧௧௧)

கருமத்தா லாகுங் கருதாமுட லீசன்
றருமத்தை நோக்குதற்குஞ் சாரும்—வருமத்தா
லூட்டதற்கு மாகு முறுமானைத் தானுக
வீட்டுதற்கு மாகுமென வெண். (௧௧௨)

தனுவுள்ள போதே தகும்புசிப்பு முண்டாய்
மனதிருந்த வாறே மருவும்—பினமா
மலத்தோ டணைவார்க்கு மன்னுசிவந் தானு
நலத்தோ டணைவார்க்கு நன்று. (௧௧௩)

அணியு மலமே யறியாமை யாமாற்
பிணியா மெனவுரைத்த பெற்றி—பணியுங்
கருமமருந் தென்னக் கருதியது மீசற்
கொருமைப்பா டாக்குமா லுற்று. (௧௧௪)

வினையுந் தனுவு மிகுமருந்தே யாமா
னினைவே தனுவாக நிற்கு—மினமாங்
கருமம் பிரியாக் கருதானைக் காட்டுந்
தருமம் புசிப்பாய்த் தரும். (௧௧௫)

அறிவா யிருந்தங் கருந்துங்கா லாகஞ்
செறிவாம் வினையுந் திரிவாம்—பிரியா
மலப்பிணியு மாறு மருவுமரன் றாளிற்
றலைப்படுவ தாகத் தரும். (௧௧௬)

மலமேமற் றெல்லா மருவும்பின் னீசன்
குலமே யதைமாற்றிக் கொள்ளு—மிலையாம்
புசிப்பே யுயிர்க்குப் பொருந்துமா னல்லால்
வசிப்பேது மில்லையென மன். (௧௧௭)

அறிவே தனுவை யடையி னறிவும்
பிரியாத் தனுவாகும் பெற்றி—மறமாத்
தனுவே யறிவோ டடையின் றனுவு
மறிவா மெனவே யறி. (௧௧௮)

அறியாமை நோய்க்கங் கறிவா மருந்தை
தெரியா யருந்துங்கா னீங்குந்—தெரிவா
யகத்தோ டணையு மானோடே நாளுஞ்
சுகத்தோ டிருக்கத் துணி. (௱௯௯)

பாகத்தா ரெல்லாம் பருகுவார் நற்கருணை
யாகத்தை யன்றோ வறையுங்கால்—மோகத்தா
ரெல்லார்க்குந் தோற்ற மிசையுமான் மேற்கருணை
வல்லார்க்கு மீதே வழக்கு. (உ௱)

காய மலமலவே யானாலுங் காணுமலங்
தோயுமா லாங்கதுவாய்ச் சொல்லுவதாம்—ஞாயமாங்
காய மருளலவே யானாலுங் காணுமான்
றோயுமா லாங்கருளாய்ச் சொல். (உ௱க)

ஆவிதா னற்றங் கருளோ டழுந்தியருட்
டேவி செயலனைத்துஞ் செய்வதெனக்—கூவல்
சுழுத்தி பிரித்தானே தானாகச் சூழ்ந்தங்
கழுத்தியதே முத்திக் கழகு. (உ௱உ)

அருளிலய மாமா லாங்கதற்கு மேலாம்
பொருளுண்டே லில்லைப் புகுவா—ரிருளை
விலக்கி யொளியே விரிகதிரைக் காட்டிக்
கலக்குமரு ளீங்கிதுபோற் காண். (உ௱௩)

பன்னிறம்வந் துற்ற படிகம் பலவனமாய்த்
தன்னிறமே காட்டுந் தகைமையென—மன்னிறம்வந்
தொட்டியபோ தாவி யொடுங்கிவிளங் காததனு
னட்டமே யில்லையென நாடு. (உ௱௪)

ஆவி சிவத்தி லயமாவ தல்லாற்பின்
மேவி விளங்கா விதியென்னி—லாவியான்
வாசமே யாக மருவியதோ ரங்கமாய்
நாசமே யில்லையென நாடு. (உ௱௫)

அளியி லழுந்துமரு ளானந்தந் தானு
யொளியி லொளிக்கு முருவை—வெளியி
லொடுக்குவதே நற்றுரிய மொத்தசிவந் தானா
யடக்குவதே முத்திக் கழகு. (உ௱௬)

மனத்தினி லுற்ற மறைப்பதனை மாற்றி
யனைத்துலகை மெல்லா மகற்றி—யெனக்குயிராய்த்
தேற்று மருளின் செயலகற்றித் தானாகத்
தோற்றஞ் சிவமறிதஞ் சொல். (உ௭௭)

தோற்றுவிப்பான் காப்பான் றுடைப்பா னுயிரனைத்து
மேற்றுவிப்பான் றீதிரயத் தென்றுமுற—மாற்றியிவை
போக்கித்தா னாகப் பொருந்துமா னென்னுமிந்த
நோக்கே யாற்குருவாய் நோக்கு. (உ௭௮)

என்னறியா னற்று லிறைவனடி தானாகுந்
தன்னதனை யியிற் றகுமுகமாந்—துன்னு
மவனேதா னாக வடையின் முடியாஞ்
சிவனோர் தெரிசனமாய்த் தேர். (உ௭௯)

சேரும் பொருளனைத்துஞ் சேருமா லீசனுக்குச்
சாரும் பொருளறிந்து தாங்குவதாய்ச்—சீரானை
யல்லதொன்றைச் சாராம லாங்கவனே டொன்றாகச்
செல்லல்சிவ யோகமெனத் தேர். (உ௮0)

பாதகத்தை யுற்ற பலவினைகள் செய்தாலென்
றீதகற்று நல்வினைகள் செய்தாலென்—பேதமற்ற
நாத னுடனுயிராய் நண்ணியதான் மிக்கவருட்
போதஞ் சிவபோகப் பொற்பு. (உ௮௧)

இந்தவா றாகு மிசைந்தநிரு வாணநிட்டை
முந்தியதோர் நாவின் மொழிந்ததாற்—சந்ததமுந்
தேற்றியதோர் நூலிற் றெளிந்தபேர் நெஞ்சிலுறத்
தோற்றுமா னென்னத் துணி. (உ௮௨)

சரியைக்குத் திக்கை சமயமா நிட்டை
வரிசைத் திருவுருமேன் மாலாய்த்—தெரியுந்
தொழிலோ டுடன்பட்ட சுத்தசா லோகம்
வழுவா திருப்பர் மகிழ்ந்து. (உ௮௩)

கிரியைக்குத் திக்கை விளக்கில் விசேடந்
தெரியுநிட்டை மேனிச் சிறப்புப்—பெரியோர்க்குப்
பூசைத் தொழிலனைத்தும் பூண்டடைவர் சாமீப
மாசற்ற வன்மை மதித்து. (உ௮௪)

யோகத்துக் கில்லை யுறுந்திக்கை யாகிலுமெய்
யோகஞ் சமய விசேடமே—யோக
மிருதிறத்து முற்றங் கிசையிற் றியானந்
தருமவர்க்குச் சாரூபந் தான். (௨௧௫)

இருத்தித் தனுவை யிசைந்தொருமைப் பாடாய்
வருத்தி யறிவதற்கு வாராக்— கருத்தையரன்
பாலி லொடுக்கிப் பலதொழிலும் பாங்கவர்தம்
மாலி லொடுக்க வரும். (௨௧௬)

ஈங்கிவையே யல்லா லிசைந்தநிட்டை யெல்லாம்பொய்
தீங்கதுவே யாகச் செயுமதுவாற்—பாங்குடைய
நல்லார்க் கிவையே நலமா மறிவுடைமை
யில்லார் தமக்கேது மில். (௨௧௭)

பன்னரிய மெய்கண்டான் பன்னுமருட் போதத்தைச்
சென்னிமேற் கொண்டொருநூல் செய்தேனு—லிந்நூன்மெய்
முத்தர்க்கு நெஞ்சத் தமுதாம்பொய் மூடர்க்கும்
பெத்தத்தைத் தீர்க்குமருட் பேறு. (௨௧௮)

அனுபோக வெண்பா முற்றியது.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

நமச்சிவாயமூர்த்திமீது

# ஞானத்தாராட்டு.

காப்பு.

நற்றுறைசைத் தேசிகனை நல்லறிவாற் றாராட்டக்
கற்றவர்க்கு ஞானமருள் கற்பகத்தைக் கைதொழுவாம்.

நூல்.

அகளமாய் நின்றோ னருளே வடிவாகிச்
சகலர்மல நீக்கவிங்குத் தான்வேண்டி வந்தாரோ.
என்று மருள்சுரக்கு மெம்மா சிலாமணிவாழ்
தென்றுறைசை மேவிச் சிறந்தே யிருந்தாரோ.
பொய்கண் டகன்றுசிவ போதக் கடலழுந்தி
மெய்கண்ட சந்ததியை மேவி விளக்கினரோ.
சித்தர் சிவப்பிர காசர் திருவருளால்
முத்தி நெறியறிந்த மூலப் பரம்பொருளோ.
உன்னும் பொழுதடியா ருள்ள மலமகல
நன்னமச்சி வாயனென நாமந் தரித்தாரோ.
பதியும் பசுவும்பொய்ப் பாசமுநீ காணென்று
விதியா லெனக்களிக்க வேண்டியிங்கு வந்தாரோ.
அறிவா யசஞ்சலமா யானந்த மாயெங்குஞ்
செறிவாக நிற்போநா மென்றுதெளி வித்தாரோ.
உற்றபொரு ளெல்லா முணருமரு ளேற்றிடினுஞ்
சிற்றறிவ னென்றே திருவாய் மலர்ந்தாரோ.
செம்மைவிழி பானுவினைச் சேரா தறியாபோல்
நம்மைவிட்டு நீயறியா யென்றுரைத்த நாயகமோ.
ஒன்று முணரா வகையுயிரி லொன்றுமிக
வென்று மயக்குவது மூலமல மென்றாரோ. (௫)
சுத்த மசுத்தமென மாயைத் தொடர்பகல
நித்த வறிவளித்த நித்தபரி பூரணமோ.

நல்வினையுந் தீவினையு நாடோறு நீயகன்று
நில்லா யெனக்கருணை நேய மளித்தாரோ.
அமையும் பருவமறிந் தாணவத்தின் கோளடக்கிச்
சமையமிது வென்றுசிவ சத்தி பதித்தாரோ.
நேரா விருவினையு நேராக நேர்ந்தவழி
யாரா வமுதா யளவிறந்து நின்றாரோ.
வாரா யெனவழைத்து வன்கைமுடி மீதுவைத்துத்
தீரா வினைதீர்த்த தேசிகசி காமணியோ.
கேட்டன் முதன்முறையாற் கிட்டியபி னானந்த
வீட்டி லெனையிருத்த வேண்டியிங்கு வந்தாரோ.
நீங்காத கேவலமு நீண்ட சகலமுமே
தீங்கா மெனவகற்றுந் தேசிகசி காமணியோ.
பாச வறிவும் பசுவறிவு நீக்கியரு
ளோச வறிவளித்த நித்தபரி பூரணமோ.
சுத்தவத்தை தன்னிற் சுட்டறவே நிற்கின்மிகத்
தித்தித் தமுதூறுந் தேசிகசி காமணியோ.
அத்துவா சுத்திபண்ணி யாறு வினையகற்றி
யொத்தபிரா ரத்தமுனக் கில்லையென்ற வொண்பொருளோ. (உ0)
முப்பொருளு நித்தியமே யாயிருக்க முப்பாச
மெப்படியும் யான்சேரா வண்ண மிசைத்தாரோ.
தியமல மொன்றகலச் சேர்ந்தவிரு பாசத்தை
மேயவரு ளாக்கியென்னை மேவி யிருந்தாரோ.
அத்துவித வானந்த வெள்ளத் திடையழுத்திச்
சித்தமலந் தீர்த்தவருட் டேசிகசி காமணியோ.
ஆவிநா யென்றருளி யன்பாற் றனைநாளும்
பாவியா தென்றன் பதைப்பை யகற்றினரோ.
தூய வருளே தொகுமுதலென் றேயிருந்த
நாயேனை ஞேயத்தி னாட்டும் பரம்பொருளோ.
ஞானமு ஞேயமு ஞாதுருவு மற்றுவிடிற்
றேனு மெனவினிக்குந் தேசிகசி காமணியோ.
ஒன்றோ விரண்டோ வெனத்தெரியா முத்திநெறி
தென்றுறைசை வந்துதந்த தேசிகசி காமணியோ.
ஒப்பரிய முத்தியினு மோவாக் கருமமென்கை
திப்பியமா மென்றருள்செய் தேசிகசி காமணியோ.
எண்ணரிய முத்தியினுஞ் சிற்றறிவே யென்றுமிகத்
திண்ணம் வரவுரைத்த தேசிகசி காமணியோ.
பாடாண வாதமுதற் பற்பலவா முத்தியினைக்
கூடா தெனவுரைத்துக் குற்ற மகற்றினரோ. (ருய)

கூடாத முத்திநெறி கூட்டுவித்தே நீயொன்றுந்
தேடா திருவென்ற தேசிகசி காமணியே.
ஆசானு மெங்குமெல்லா மாகா தெனத்தூர்த்துப்
பேசா வனுபவத்தைப் பேசி யளித்தாரோ.
எந்தைவே லப்பகுரு வெப்பொழுது மிப்படியிற்
சிந்தைசெய்து போற்றச் சிறந்தே யிருந்தாரோ.
வடகலையுந் தென்கலையு மற்றும் பலகலையுந்
திடமுடனே நாயேற்குச் செப்பி யளித்தாரோ.
பவகோடி மாற்றிபருட் பண்பினரா யேயிருந்த
நவகோடி சித்தரொடு நண்ணி மகிழ்ந்தாரோ.
வேலப்ப சற்குருவின் மெய்ப்படியை யென்சிரத்திற்
சாலப் பதித்தேதன் சந்ததிக்காட் கொண்டாரோ.
தானேவந் தானந்த வாழ்வுதந்த தற்பரனுக்
கியானேர்கை மாறளிக்கு மெண்ணா முடையேனே.
திருவா வடுதுறையிற் சேர்ந்தவர்க்கு மெய்ஞ்ஞானந்
தருவோ மெனக்கிருபை தாங்கி யிருந்தாரோ.
எல்லையிலா வின்ப மெனக்குத் தரக்கருதித்
தில்லைப் பொதுவிற் றிருநடனஞ் செய்தாரோ.
வாழ்க குருநமச்சி வாயன் மலரடிகள்
வாழ்கவே லப்பகுரு வாழ்க வடியாரே. (சம)

சீரார் பெருந்துறைவாழ் தேசிகவே லப்பருட்
டாராட்டை யேதுதிப்போர் தற்பரமே சார்வாரே.

நமச்சிவாயமூர்த்தி தாராட்டு முற்றியது.

திருச்சிற்றம்பலம்.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# உற்சவ விளக்கம்.



ஆடக மன்றி லேறி யம்மையுந் தானு மாக
நாடக நடிக்கும் போது நல்லவர் சிவானந் தத்தே
வீடகம் புக்கு லாவி விரைமலர்த் தாளை மேவிப்
பாடக மான பாசம் பாறுமென் றறையு மன்றே.

நாலு பாதங்களிலே சரியாதரற்குத் திருவடிபெறுவது காரியமாக, நாலுகாரியமும் பொருந்திய சாம்பவமென்னுந் தீக்கையே உற்சவமாவது. இது பத்து நாளாகக்கொண்டது காரியம் பத்தையுமுடையதான படியினாலே. இதிலே நின்ற பதத்திற்குரியோர் அதற்கேற்ற முத்தியைப் பெறவும், அல்லாதார்க்குச் சத்திநிபாத முண்டாகவுங் காரணமாம். இதற்கு உதாரணம் கூறுகின்றது.

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

உற்சவ விளக்கந் தன்னை யுரைத்திடி னுயிர தற்கு
முற்சென னங்கள் விட்ட முகிழ்த்ததோர் கருணை யாலே
தற்பரந் தரும மாய தனிக்கொடிக் கட்டி யுண்மைச்
சிற்பரத் துயிர்கண் முத்தி சேர்ந்திடச் செய்வார் மன்னே. (௧)

சாதிசண் டாளர் பொல்லாக் கன்மசண் டாள ரென்னும்
போதமி லுயிர்க டம்மைக் கதியினிற் போக்க வேண்டி
யோதருங் கருணை யாலே யுமையவ ளோடுங் கூடி
யாதிபொய்ப் பாச நீக்க வுத்திரி தொடங்க லுற்றார். (௨)

யாகமண் டபத்தி லெய்தி யெழிறரு குண்டஞ் செய்திட்
டாகவே திகையின் மீதே யைவகை கலைநி றுத்தி
யோகமா யாதி யாய வொன்பது கும்ப மர்ச்சித்
தேகமா மீசர் கண்ணே கும்பவத் தனையி ருத்தி. (௩)

இந்திர னாதி யாய தேவதாத் திசைக ளெட்டில்
வந்தனை செய்து மற்றத் தேவர்கள் வணக்க மாக்கி
முந்திய பாலி தன்னின் முளையினை யாக்கி யெட்டாஞ்
சுந்தர மங்க லங்க டோரண மாலை செய்து. (௪)

ஆலயம் வலமாய் வந்திட் டருட்கொடி யேற்று வித்து
மேலுளோர் மண்ணு ளோர்கள் விழவணி செய்வ தற்குச்
சாலவாக் கினைக்கேட் பித்துத் தழன்மிகு மியாக சாலை
பாலினை யெய்தி மங்கை பங்கனார் பயின்றி ருந்து. (ரு)

காப்பணி காத்திற் சேர்த்திக் கனலினைக் குண்டத் தாக்கிப்
பூப்பயில் பூசை செய்து புனிதனை விடாதி ருத்தி
நாட்பயில் பலிக டிவி நல்லவத் திரமுன் போக்கிச்
சேப்பயில் கொடியார் வீதி திருவுலாச் செய்ய லுற்றார். (சு)

அற்றைநாள் மூல மாகும் பருதியை யகற்று வித்துப்
பிற்றைநாள் வினாயி ரண்டாம் பெரும்பிணி யுலாவிப் போக்கி
மற்றைமுன் றும்வி ழாவின் முக்குண மாள்வ தாகக்
கற்றைவார் சடையெம் மண்ணல் கலந்துலாச் செய்ய லுற்றார். (எ)

சீரணி நாலா நாளாஞ் சிறந்ததோர் விழாவு தன்னிற்
காரண மாய வந்தக் கரணமோர் நான்க கற்றி
வாரணி கொங்கை யோடு மதிபொதி சடையெம் மண்ண
லூரணி வீதி தன்னி லுலாவரத் துடங்க லுற்றார். (அ)

ஐவகைத் தினம்வி ழாவி லைம்பொறி யகற்றி யாறு
முய்வகை விழாவி னுக்கு முற்றுலா வுலாவிப் போந்து
மெய்வகை மந்தி ரங்க ளெழுவகை மேல தாகத்
தெய்வநற் றேரி லேறித் திருவுலாச் செய்ய லுற்றார். (கூ)

மன்னிய கலாதி யேழு மாணவ மலமு மாயத்
தன்னியல் வேட்டை யாடுந் தன்மையுட் கொண்டு நாதன்
சின்மயக் குடிலை வில்லுஞ் சிற்பரை யம்புஞ் சேர்த்திப்
பன்னெடுங் கருவி தோற்றப் பகையற வுலாவ லுற்றார். (௰)

ஆணவச் சேட்டை யாய திரோதம தகற்ற வேண்டிப்
பேணிய காப்பு நாணும் பெருகிய ஞானக் காவற்
பூணணி கரத்திற் சேர்த்துப் பூரண வின்ப வுண்மைத்
தாணுநா டகத்தி னோடுந் தனிவிழாச் செய்ய லுற்றார். (௰க)

அயன்முத லாக மீதாம் பரசிவ மதித மாக
வுபரவே பதங்கண் மாற்றி யோங்கொளி ஞானக் கூத்தி
னயமிகு பேரா னந்த நல்லுயிர் களிப்பப் பாசச்
சயமுறு நித்த மாகச் சாந்தம தணிந்து கொண்டு. (௰உ)

பாசம்போ யழிவு மின்பப் பாசிவ வரவு முண்மை
நேசநல் லுயிர்கள் பேறு நிலைமைய தாகக் காட்டி
வீசிய கரமு முத்தி விங்கிய பதமுங் காட்டித்
தேசுலாந் திருமெ ழுச்சித் திருவுலாச் செய்ய லுற்றார். (௧௫)

உற்றிடுஞ் சுகாதீ தத்தி னுண்மையை யளிக்க வேண்டித்
தற்பர னுடை கத்தின் றன்மையே தன்மை யாகச்
சிற்பர வுபாதி யோகத் திருவுலாப் புறம தாக
நிர்க்குண மதீத மாக நிலைமையி னுலாவ லுற்றார். (௧௬)

வாதனை யாக நின்ற வானந்த னனந்த மான
நாதனு முடிவி லாடு நாடகங் காட்டி வீதி
போதரு மருளி னாலே பூரணப் பேரா னந்தம்
வேதகம் விளக்கி யின்ப விமலனார் விளங்க லுற்றார். (௧௭)

தனுவொடு கரண மாயா புவனபோ கந்த விர்க்கும்
புனிதநீ றாய சுண்ணம் போதகற் களித்திட் டுண்மை
யினிதமர் சிவம தாக்கி யெல்லையொன் றில்லா வின்ப
வனுபவ தீர்த்த மாடி யமலமாய் நிலைமை செய்தார். (௧௮)

மந்திர முதலாந் தேவர் வகைக்குநல் விடைகொ டுத்து
விந்துரு விழுந்த மோனத் திருவுலா வீதி வந்திட்
டந்தமி லருளி னாலே யருட்கொடி யிறக்கி ஞானப்
பைந்தொடி முன்ன தாகப் பண்டுபோ லுலாவ லுற்றார். (௧௯)

ஞானசங் கார மாற்றி நலமிகு முயிர்க்கு முத்தி
தான்மிக வளிக்க வேண்டித் தமோமய மான பாசத்
தினமாந் திரோத மாற்றி யின்பநற் சிருட்டி செய்வான்
தேனமர் குழலி பின்னே திருவுலாச் செய்ய லுற்றார். (௧௮)

பத்தினோ டிரட்டி யெட்டுப் பதினெட்டுப் பத்து மூன்று
மத்தனார் விழாவு முத்தி யருளினு லுரைக்குங் காலை
முத்தர்க்கு முதன லாகும் முனிவரர்க் கிரண்டா நாளாங்
கத்துமா கடல்க ளுக்குங் கருதுமூன் றுநா ளாகும். (௧௯)

நாலாநா ளெண்டி சைக்கு மஞ்சாநா டேவர் கட்கு
மாலொடு பிரம ருத்தி ராதியர்க் காறு நாளா
மேலவர் கிரிய ளுக்கு மேழாநா ளெட்டா நாட்டான்
மாலாநாற் காற்ப றவை வனத்துளோர்க் கெனவு ரைத்தார். (௨௦)

காப்புநான் சரியை யாகுங் கருஞ்சாக்து கிரியை யாகும்
போக்கற வுலாவ ருனும் பொலிவுடை யோக மாகும்
வாக்கினன் ஞான னந்த மானிடர் தமக்கு மற்றத்
தேக்குள சனங்க ளுக்குஞ் சிவமுத்தி யெனமொ ழிந்தார். (உக)

கதிபெற விருளாம் பாசக் கடலிலே கட்டுண் டோர்க்கு
முதுமைசெய் ஞான வின்ப முத்தியை வழங்க வேண்டி
விதியினற் றெய்வ நாளா விழாவுவந் தானென் றுண்மை
மதிவல்லோ ருணர்த்தக் கேட்டோர் மறுபிறப் பறுப்ப ரன்றே. (உஉ)

உற்சவவிளக்கம் முற்றியது.

திருச்சிற்றம்பலம்.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முத்திபஞ்சாக்கர மாலை.



திருவேயென் செல்வச் சிறப்பே சிவானந்தத் தெள்ளமுத
வருவே யுருவமு முருடன் பேருமொன் றும்புணரா
வருவே தெளிந்த வறிவேமெய் யன்பர்க் கருளுந்தெய்வத்
தருவேதென் கோமுத்தி முத்திபஞ் சாக்கர சற்குருவே. (௧)

சுந்தர மாலயன் வாழ்வுமைந் தாரிற் சுவர்க்கவைப்பு
மிந்திர ஞாலங் கனவெனக் கண்டுன் னிணையடிக்கே
யந்தமில் காதலுற் றூறாத வின்பத் தமர்ந்திருக்கத்
தந்தருள் கோமுத்தி முத்திபஞ் சாக்கர சற்குருவே. (௨)

பண்டறி யாமை பிடித்துவிட் டேனை விடாதுபற்றிக்
கொண்டு குணவழி விட்டுத் திருத்தியென் கோதகற்றிப்
புண்டரி கப்பதந் தந்தாய்க்கென் னுலொரு போகமுண்டோ
தண்டமிழ்க் கோமுத்தி முத்திபஞ் சாக்கர சற்குருவே. (௩)

மாயா படலங் கிழித்தருள் ஞானம் விளங்கவைத்துன்
னேயானந் தத்தி லழுத்திடு வாய்நித்த முத்தசுத்தத்
தூயா சராசர பேதங்கள் யாவையுந் தோற்றுவிக்குந்
தாயான கோமுத்தி முத்திபஞ் சாக்கர சற்குருவே. (௪)

அரணங்கண் மூன்று மெரித்தாய் சரண மதினுமன்பர்
மரணம் படாதருள் வைத்தாய் சரணம் வலியவந்தக்
கரணங்க ளான்மெலிந் தெய்த்தேன் சரணநின் பொற்கழலே
சரணந்தென் கோமுத்தி முத்திபஞ் சாக்கர சற்குருவே. (௫)

முத்திபஞ்சாக்கரமாலை முற்றியது.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ மெய்கண்ட தேவர் திருவடி வாழ்க.



சிவமயம்.

# பரிசோதந பத்திரம்.



| பக்கம். | செய்யுள். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௨௫ | ௩௪ | ௨ | கிறைவா | கிறவா |
| ௩௪ | ௫௧ | ௧ | தாய்ச்-சிர | தாய்ச்சிர |
| ,, | ௯௫ | ௧ | கணைத்தி | கணைத்தின் |
| ௧௨௯ | ௭௪ | ௩ | யோதி | வோதி |
| ௧௪௧ | தலைப்பு | | நிராகரனம் | நிராகரணம் |
| ௧௪௩ | ,, | | ,, | ,, |
| ௧௪௫ | ,, | | ,, | ,, |
| ௧௯௧ | ௧௨௨ | ௧ | தகிலங் | தகிலந் |



# பிரதி பேதங்கள்.



இப்புத்தகத்துப் பெரும்பாலு முள்ள ரூபம் எனது சொந்தப் பிரதியதே. பல பிரதிகளையு மொத்துப் பார்த்ததிற் காணக்கிடந்த ரூபபேதங்கள் இதன்கீழ்க் குறிக்கப்பட்டுள்ளன. ஒரு சுவடியிலுங் காணப்படாதனவும் கரணபரம்பரையில் வந்தனவுமான இரண்டு செய்யுட்கள் உள. அவை வருவன:—

தசுஷி-தசகாரியம்.

"சற்குருவி னருளாலுந் தவமுடிவின்
பயனாலுஞ் சனன நீங்கிச்
சிற்கனவாழ் வடைந்ததற்கே சிந்தைசெயுந்
திறமுடைய சில ராகி
நிற்குநிலை சாதனங்க ளொருநான்கு
மாசறவே நிந்தி யோக
வர்க்கமொடு சகலகலை யுந்தெரிந்து
ஞானநெறி வருவ ராமால்."

"இருவிழிக ளுலகறிந்துந் தமையறியா தனபோ
லியானறியும் பொருளலதிங் கெனையறியா மையினாற்,
கருவிடைபுக் கின்பத்துன்பக் கடலிடையே சுழன்று
கணக்கலக்கப் படுவேனைக் கருணைவிழி யதனை,

லருவினைக ளறநோக்கி யாணவமே போக்கி
யகமகமேல் திருந்தசெலா மறிவுகொண்டே நீக்கிப்,
பருவமதிற் பதந்தாக்கிக் கற்பனைகள் யாவும்
பாழாக்கித் தானாகும் பரகுருவைப் பணிவாம்.”

சில பிரதிகளில் பஞ்சாக்கரப்பஃறொடையில், ரு, சு, எ, கண்ணிகள் பின்வரும் ரூபபேதமாகக் காணப்படுகின்றன.

“நாக மணியகிலி னன்குறடு சந்தமுந்தி
யாகவஞ்செய் காவிரியா மாறேடி—வேகமாய்
வந்து வணங்கு மதிலா வடுதுறையே
யெந்தனா ளும்பத்தர்க் கேயருளிப்—பந்தமகற்
றாரென் றுநாடி யுலவாத வின்பமருட்.”

அநுபோக வெண்பாவுள், களஉ, களரு-வது செய்யுட்கள் வெண்கலிப்பாக்களாக எல்லாப்பிரதிகளிலும் உள்ளவற்றுள் ‘மருத்துவனே’ என்பதனை ‘தீர்ப்பானே’ என மாற்றி வாசிப்பின் வெண்டளை பிழையாது. சிவாச்சிரமத்தெளிவில் உ—அ வெண்பாக்கள் வினா சு முதலியன உத்தரம் ஆகும். சீர்பிரிக்கு மிடைவெளிகளை யிரண்டோரிடத்து பொருந்துமா றமைத்துக்கொள்க. எல்லாச் சுவடிகளிலும் பொதுவாகக் காணக்கிடக்கும் பாடபேதங்கள்:—சரியை-சரிதை; சமயம்-சமையம்; புசி-பொசி; பிரி-பிறி; உதயம்-உதையம்; தசம்-தெசம்; சகம்-செகம்; அழி-அளி; ஒழி-ஒளி; மார்க்கம்-மாற்கம்; அர்ச்சி, அருச்சி-அற்சி; தகும்-தரும்; பாவின்-பாவால்; பாட்டில்-பாட்டின்; பாட்டால்-பாட்டுள்; நிரயம்-நிரையம்; வெண்ணெய்-வெண்ணை; இயை-இசை; ஞேயம்-நேயம்; ஈந்து-ஈய்ந்து; திய-திவ்ய; மதித்தது-மதித்தல்; ஐந்து-அஞ்சு; அருளி-உதவி; சதுர்-சதிர்; சதுர்-சது; சாற்றுவி, சாற்றிவி-சாற்றிவை; குகையில்-குகையுள்; சார்-சேர்; கோலா-கோலாய்; கோலாகி-கோலாக; கின்று-கிண்டு; நீள்-நீழ்; அன்று-இன்று; இல்லைகாண்-இல்லைக்காண்; மையல்-மயல்; நீக்கல்-நீத்தல்; தெரிவி-தெளிவி; மார்க்கசித்தி-மார்க்கச்சித்தி; தேர்-தேறு; என்-ஏன்; அபிடேகாந்தம்-அபிடேகரந்தம்; பிரமோபதேசம்-பிரமவுபதேசம்; கருமோபதேசம்-கருமவுபதேசம்; தேவாம்-தேவம்; நிட்டூரன்-நெட்டூரன்; தொடர்-துடர்; ஏற்ற-ஒத்த; சுவர்க்கம்,சொர்க்கம்-சொற்கம்; ஒன்றிற்று-ஒன்றித்து; மேலாம்-மேலாய்; சாக்ராதி-சாக்கிராதி; போகம்-போதம்; பழம்பொருளோ-பரம்பொருளோ; வெப்பொழுது-வெப்போது; ஒதுங்கி-ஒதுக்கி; மாறி-மாற்றி; யசுபதமே-யசிபதமே முதலியன.

## பெரும்பாலும் பொருள் வேறுபடக்கூடிய சில முக்கிய பாடபேதங்களே கீழ்க்குறிக்கப்பட்டுள்ளன.

| பக்கம். | செய்யுள். | வரி. | |
|---|---|---|---|
| க | | ச | பலவாய் |
| | உ | ச | சென்னிமைப்பாம், உளத்திற்பிசர்ப்பாம் |
| உ | ச | ச | தேவன் |
| | ரு | க | தாறுற்ற |
| | அ | க | பயன்கள் |
| ங | யஅ | ச | போதம் |
| ரு | உக | உ | கண்ணை |
| | | ங | உயிர்த்த |
| கூ | ஙகூ | க | யானுகியவுடலு |
| | ஙஎ | ச | புரத்திடு |
| | ஙஅ | உ | கண்ணெறுத்திடு |
| | ஙக | உ | பதித்து |
| | | ங | மடிமையாக்கி |
| | சய | க | கரந்திடு |
| | | ங | நாலும் |
| அ | ருகூ | உ | னின்று |
| கூ | உ | உ | புகழ்ந்து |
| | | ச | பரந்தழிந்தே, பரந்தழிந்தே, பரந்தனித்தே, பரந்தேறுந்தவர்க்கு. |
| கூ | ச | ச | ருபகமே |
| கக | ய | ங | தாரதாமே |
| | | ரு | வியாபகமாமுட் |
| கஉ | கஉ | அ | புகுத்தி |
| கங | உ | ங | வகைத் |
| | ங | உ | சத்தியச் |
| கசு | உஉ | உ | மூன்றுநன்றாய் |
| | | ங | றேதாமே |
| | உங | ங | கண்ணியல் |
| | உச | உ | பவபத்து |
| கஎ | க | ங | முதிர |
| கஅ | அ | ங | கருதாறு |
| கக | ககூ | ங | பொய் |
| உஉ | எ | ங | மலயிரண்டாய் |
| | அ | ங | வளரா |
| | கங | ங | மாறு |

| பக்கம். | செய்யுள். | வரி. | |
|---|---|---|---|
| உங | கரு | ங | தொக்குச், தொத்தி |
| உச | உஎ | க | கானன்றில்ல, கான்றில்ல, கான்றில்லே. |
| | ஙய | க | சத்தியத்தாலாத |
| உரு | ஙச | க | பிறிவா |
| உசு | ஙக | உ | யோரார், யேலார் |
| உசு | சய | ங | றீர்த்தங் |
| | சச | க | விடப்பட்டதனை |
| | | ச | ரவரே |
| உஎ | ருஉ | க | இல்லத்தார் |
| உஅ | ருக | ச | ரறிவிலராய் |
| | கூய | ங | ரலரா |
| ஙய | எக | | சிவாச்சிரமாங் |
| ஙக | உ | உ | விண்டிலங்க |
| | ச | க | காமனெனு |
| ஙஉ | உகூ | க | குணமாற்றி |
| ஙங | ஙய | உ | வன்பே |
| | ஙஅ | உ | கொண்டதெனு |
| | சய | உ | மாசிரிய |
| ஙச | சகூ | உ | யருந்தும் |
| ஙரு | எக | உ | நோக்கு |
| | எரு | க | னென்று |
| | அச | உ | மக்கடமை |
| ஙசு | அஅ | க | பெற்றியுற்ற |
| | அக | உ | யென்றே |
| ஙஎ | ௱ரு | உ | வினைத்துட்டன் |
| | ௱சு | க | கையாலும் |
| ஙஅ | கஙசு | க | உண்மையாற் |
| சஎ | ஙளஎ | உ | விரைவாய் |
| சக | ஙஙஅ | க | றற்கண் |
| | ஙசய | உ | மிருள் |
| ருக | ஙஎய | க | எதென்பானீ |
| | ஙஅரு | க | கருதுமாற் |
| ருஉ | சயரு | உ | னிற்கண் |
| ருரு | சசசு | உ | அாறுகும் |
| | சருக | க | லாய்ந்த |
| | சசுக | க | தனன்னியமா |

| | | | |
|---|---|---|---|
| ௫௬ | ௪௬௮ | ௧ | போலீசன் |
| | ௪௬௯ | ௧ | கொடுங் |
| | ௪௭௧ | ௨ | கோலோ |
| ௫௭ | ௪௮௫ | ௨ | சரியுங் |
| | ௪௯௰ | ௧ | தடைவாய், மறை வதனை |
| ௫௮ | ௫௦௮ | ௧ | விளக்குவமை |
| | ௫௧௧ | ௧ | அருளென்ன |
| ௬௰ | ௫௫௧ | ௨ | மேலோகச் |
| ௬௧ | ௫௬௩ | ௨ | கூவு |
| ௬௨ | ௫௯௫ | ௨ | மாகத்தர் |
| ௬௪ | ௬௩௪ | ௨ | பண்டை |
| ௬௬ | ௩ | ௨ | சத்தாந்த |
| ௬௮ | ௰௫ | ௨ | பின்ன |
| ௬௮ | ௰௬ | ௨ | தேய்த்த |
| | ௨௧ | ௧ | யேநாம |
| | | ௧ | சாதிகுண |
| ௭௰ | ௬௨ | ௨ | ஊனை |
| ௭௧ | ௮௨ | ௧ | வாணு |
| ௭௨ | ௯௩ | ௨ | திலதென்று |
| | ௯௪ | ௨ | நெஞ்சம் |
| | ௱ | ௨ | மெய்ப்பொரு ளுங் |
| ௭௪ | ௱௪௰ | ௨ | யண்டிலரை |
| ௭௭ | ௧௮௬ | ௧ | வறியு |
| | ௧௮௭ | ௧ | யறியு |
| | ௧௮௯ | ௨ | மூன்றூற்றமற |
| ௭௮ | ௩ | ௨ | தித |
| ௭௯ | ௩௧ | ௨ | சொல்ல |
| ௮௩ | ௨௨ | ௨ | லதனை |
| | | ௪ | யடக்கின்றார் |
| ௮௪ | ௨௫ | ௩ | மற்றாரை |
| ௮௬ | ௪௧ | ௩ | யிசைவார், யிசைவரச் |
| ௮௯ | ௬௯ | ௧ | வுருவோ |
| ௯௰ | ௭௨ | ௨ | பவநேசம், சிவநேசம் |
| ௯௧ | ௮௧ | ௧ | சங்கமல |
| ௯௨ | ௮௮ | ௪ | யகம் |
| ௯௪ | ௰ | ௨ | மோரா |
| | ௰௧ | ௩ | தான் |
| ௯௫ | ௨௧ | ௪ | பலம் |
| ௯௮ | ௪௰ | ௩ | மரன் |
| | ௪௨ | ௪ | நூறன் |
| ௱௧ | ௯ | ௧ | யறம், பாகத்தி |

| | | | |
|---|---|---|---|
| ௱௧ | ௧௩ | ௨ | வெருண்டு |
| | | ௩ | சாதகர் |
| ௱௨ | ௨௨ | ௨ | ரெனு |
| ௱௩ | ௨௪ | ௧ | கணி |
| | | ௨ | சதாசிவத்தி |
| | ௨௬ | ௧ | சொல்லிற்றி |
| ௱௪ | ௧ | ௨ | கருத்ததுவா |
| ௱௫ | ௯ | ௧ | விலங்கு |
| | | ௨ | மாங் |
| ௱௬ | ௧௫ | ௩ | யோவாமற் |
| | ௧௬ | ௧ | மாற்ற |
| ௱௯ | ௪௰ | ௩ | தணிந்தானே |
| ௱௧௧ | ௧௩ | ௧ | புத்தியற்றாய்க் |
| ௱௧௨ | ௨௰ | ௨ | முள்ளீந்த [காய |
| ௱௧௪ | ௩௧ | ௨ | காயத்தும் |
| ௱௧௫ | ௩௯ | ௧ | யாழ்த்திய |
| | | ௩ | தகப் |
| | ௪௧ | ௧ | சொலிப்பித்து, கழைத்தோளிணை |
| | | ௨ | புலிப்பித்து |
| | ௪௩ | ௧ | டள்மங்கை |
| | ௪௫ | ௧ | பொய்யவிர் |
| ௱௧௯ | ௭௩ | ௨ | வினையுற்ற |
| ௱௨௧ | ௧௨ | ௪ | குய்க்கயலே |
| | ௧௪ | ௩ | மான் |
| | ௧௮ | ௧ | யெழுமாநிதிமல மா |
| ௱௨௩ | ௨௩ | ௨ | மின்னில |
| | ௨௪ | ௧ | யுணர்வே |
| | | ௨ | தீநாகை |
| | ௩௰ | ௨ | தலைவா |
| ௱௨௫ | ௪௪ | ௧ | தீவினையைக் |
| ௱௨௬ | ௫௰ | ௩ | ளுணுக்கி |
| ௱௨௧ | ௭௧ | ௪ | ஆக்கமே |
| | ௭௮ | ௪ | சொன்னாய் |
| ௱௩௨ | ௧௫ | ௪ | தாலே |
| ௱௩௩ | ௱௭ | ௧ | காக்கவரு |
| ௱௩௮ | ௨ | ௨ | மேவியவர் |
| | ௪ | ௧ | முகன் |
| | ௬ | ௧ | பதார்த்த |
| ௱௩௧ | ௭ | ௨ | ரிறைஞ்சி |
| | ௧௨ | ௧ | பண்ணுமனுப் |
| ௱௪௧ | ௨௩ | ௨ | மன்றென்றெடு |
| | ௨௮ | ௧ | பேரவர் [த்தோ |
| | | ௨ | பழியு |

| | | | |
|---|---|---|---|
| ௱௪௧ | ௨௯ | ௩ | விலக்கினை |
| ௱௪௨ | ௩௭ | ௨ | ருட |
| | | ௪ | மீத்தாமீதென்ப |
| | ௪௧ | ௪ | மாயமி |
| | ௪௨ | ௪ | பேதகத் |
| ௱௪௪ | ௪௮ | ௨ | நெஞ்சிரிக்கின்ற |
| | | | நெஞ்சிற்றரிக் |
| ௱௪௫ | ௫௫ | ௪ | சாவித்த [கின்ற |
| ௱௫௨ | ௫௰ | ௪ | கார்க்கா |
| ௱௫௪ | ௬௧ | ௨ | பேருக்கு |
| ௱௫௮ | ௱௧ | ௪ | பரிப்பதல |
| ௱௬௰ | ௱௧௭ | ௩ | முயிருடலிற் |
| ௱௬௩ | ௧௪௧ | ௨ | முருவற்றுன் |
| ௱௬௪ | ௧௪௬ | ௪ | மலமடைவ |
| | ௧௪௯ | ௨ | கருத்தசை |
| ௱௬௭ | ௧௬௮ | ௩ | தகுமாற்கு |
| | ௧௭௧ | ௧ | கருதரனே |
| ௱௭௰ | ௧௯௨ | ௩ | லூட்டு |
| | ௧௯௪ | ௨ | யணியுங் |
| | ௧௯௬ | ௩ | பிணியைமாற்று |
| | ௧௯௭ | ௧ | மலமேன் |
| ௱௭௫ | ௧௯ | ௧ | சுத்தவவத்தை |
| | ௩௰ | ௧ | பற்பலவர் |
| ௱௭௬ | ௩௨ | ௧ | துரத்திப் |



PRINTED AT THE THIRUPURASUNDARI PRESS, SHIYALI.